


மைத்தான் ஏஸி, பாக்ரா டிஸி 900 மிமீ, 1200 மிமீ, 1400 மிமீ, 1500 மிமீ




# ஸீலிங்
## மற்றும்
# மேஜை விசிறிகள்



டிலக்ஸ் 400 மிமீ மேஜை மாடல்

- [illegible]
- [illegible]
- [illegible]
- [illegible]
- [illegible]

மிகுந்த சக்தியுடையதாக, குறைந்த மின்சாரச்செலவே ஆகும்படி அமைக்கப்பெற்ற ஏஇஐ ஸீலிங் மற்றும் மேஜை விசிறிகள், பொறுக்கி யெடுத்த சிறந்த உறுப்புக்களைக் கொண்டு நிர்மாணிக்கப்படுவதாகும். ஏஇஐ விசிறிகளின் தயாரிப்பில் தொழில் நுட்பத் திறமையுடன், இந்தியாவின் மிகப்பெரிய மின்சார சாதன சப்ளை ஸ்தாபனத்தின் விசேஷ ஆற்றலும் அனுபவமும் கூடியிருக்கிறது.

அஸோஸியேடட் எலக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) பிரை. லிட்.
கிரௌன் ஹவுஸ், 13, ராஜேந்திரநாத் முகர்ஜி ரோடு, கல்கத்தா-1.
கிளைகள்: பம்பாய் - புதுடில்லி - மதராஸ் - பெங்களூர் - கோயமுத்தூர் - கானபுரி.

AEI-47A TAM

கல்கி

# பொருளடக்கம்

சோபகிருது, சித்திரை 29உ ★ மே, 12உ 1963



படவிளக்கம் 79-ம் பக்கம்

ஆட்சி மொழி ... 3
என்ன சேதி? ... 4
போகிற போக்கில் ... 6
முதல் மூவர் ... 8
ஸேஹ்ரா ... 11
வானவெளி வரவேற்கிறது ... 12
ராமேசுவரத்தில் காமேசுவரி ... 16
மக்கள் விரும்பும் மிதி வண்டி ... 18
சந்திரனே சாட்சி ... 26
உண்மை தெரிந்த பின் ... 30
பாலயோகினி ... 36
பொன் விலங்கு ... 38
சிறுவர் விருந்து ... 50
வெனிஸ் ஓவியன் ... 53
பில்லிலே பத்து: கையிலே பத்து ... 70
அறிவுக்கனலே அருட்புனலே ... 74
பலே அதிர்ஷ்டம் ... 83
நெஞ்சோடு நெஞ்சம் ... 84
பத்தினிக்கோட்டம் ... 90

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# பலே, விற்பனையாளரே !

எம்முடைய ரகங்களை வாங்கிவைத்து, விற்பனை செய்து, அவற்றின் பெயரும் புகழும் பரவப் பேருதவி புரிகின்றீர்கள். உற்பத்தியாளருக்கும் உபயோகிப்போருக்கும் இடையே இன்றியமையாத இணைப்பாக விளங்கும் உங்கள் பணியே பணி. நம் நாட்டு சிகரெட்டுத் துறை வேற்றுநாட்டு ஏகபோக உரிமையாளர்களின் ஆதிக்கத்திலிருப்பதனால், இந்திய சிகரெட்டுத் தொழிலுடன் ஒத்துழைப்பதிலே சில இடர்களை நீங்கள் எதிர்ப்படுகிறீர்கள். நல்லவேளையாக அவை உங்கள் மனவுறுதியைத் தகர்ப்பதற்கு மாறாக உங்களுக்கு ஊக்கமூட்டியே வருகின்றன. நாட்டுப் பற்றுமிகுந்த நல்லவர்களுக்கு அடையாளமாக நீங்கள் தூண்டுதல்களையும் தடைகளையும் மீறி, சொந்த சிகரெட்டுத் தொழிலுக்கு ஆதரவுதர அணிவகுத்துள்ளீர்கள். அஞ்சாமையும் ஆர்வமும் சலியாமுயற்சியும் சாதனையுமே உருவகமான தங்களைத் தாயகத்து சிகரெட்டுத் தொழிலைத் தாங்கும் தூணாகக் கருதுகின்றோம். உங்கள் ஒத்துழைப்பையே கொழுகொம்பாகக் கொண்டு இத் தொழில் வளர்ச்சி பெற்று, வருங்காலத்தில் வளமை காணப் போவது உறுதி.

சுதேசி சிகரெட்டுகளை விற்பனை செய்து விதேச நாணயமாற்றினைக் காப்பாற்றுக.




கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்., 

பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 62 TAM. Greens' Advtg.




மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 41


# ஆட்சி மொழி

**ராஜாஜி**

ஆட்சி மொழி மசோதா ஒரு சமரஸ ஏற்பாடு என்று வர்ணிப்பது முழுப் பொய்யாகும். தென்னாட்டு மக்களுக்கு அது எந்த அளவிலும் திருப்தி தரும் என்று எண்ணுவது சுத்த அநீதியாகும். ஆங்கிலத்தை வழியனுப்பி வைக்கும் இந்த மசோதா, ஹிந்திக்கு யதேச்சாதிகாரம் விரும்பும் கூட்டத்தைத் தவிர மற்றவர்களைச் சமாதானப் படுத்தாது. இன்று நல்ல முறையில் நிர்வாகத்துக்கு உதவி புரியும் ஆங்கில மொழியைப் போதுமான காரணம் இல்லாமல் விரட்டப் பார்ப்பதும், ஹிந்தியை நிர்ப்பந்தமாக எல்லா மக்கள் மீது திணிப்பதும் இந்திய மக்களில் ஒரு கோஷ்டிக்கு மட்டும் பட்சபாதம் செய்வதாகும். இது நிர்வாக விஷயம் மட்டுமல்ல; நீதியே முறை தவறி விட்டது.

தேர்தலுக்கு முன்னால் பிரதமர் அவர்கள் சர்க்கார் சார்பிலும், தமது சார்பிலும் நாட்டு மக்களில் ஐந்தில் மூன்று பாகத்தினருக்குத் திரும்பத் திரும்பக் கொடுத்த பிரதிக்ஞை, ஐக்கியத்தைக் காப்பதற்காகப் பிரதமரின் படத்துடன் அரசாங்கச் செலவில் விளம்பரமான பிரதிக்ஞை புறக்கணிக்கப்பட்டு விட்டது. வாக்குறுதி தந்த ஆட்சியாளர்களே வாக்குறுதியைச் சட்டமாக்க முடியாது என்கிறார்கள்.

இந்த நாட்டிலுள்ள எல்லா அதிகாரிகளும், ஜட்ஜுகளும், இஞ்ஜினியர்களும், டாக்டர்களும், சமூக வாழ்வில் முக்கியம் வாய்ந்த எல்லோரும் பல தலைமுறைகளாகச் சௌகரியத்துடன் உபயோகித்து வந்த ஆங்கிலத்தின் இடத்தை வளர்ச்சி அடையாத ஹிந்தி மொழி பெற முடியுமா? இது பிரதமருக்கும் தெரியும். அதனால்தான் அவர் உறுதிமொழி கொடுத்தார். தேச ஒற்றுமை கெட்டுப் போகும் என்று உணர்ந்து உறுதி மொழி கொடுத்தார்.

அதைக் காப்பாற்றக் கூடாது என்று ஹிந்தி வெறியர்கள் கிளர்ச்சி செய்தவுடன் நேரு அவர்கள் தமது ராஜிநாமாவை அனுப்பி யிருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால் அவர்களுடைய கூச்சல் அடங்கியிருக்கும். ஆனால் அவர் உறுதிமொழியைக் கைவிடுவதே சிலாக்கியமென நினைத்து விட்டார். கொடுத்த வார்த்தையைக் காப்பாற்ற இயலாததற்குப் பொருத்தமற்ற சாக்குகளைக் காட்டுகிறார்.

அரசியல் சாஸனத்தை மீறிப் புது உத்தரவுகள் போட்டதாக கோர்ட்டுகள் தீர்ப்பு கூறியபோதெல்லாம் காங்கிரஸ் சர்க்கார் கொஞ்சமும் கூச்சமின்றி மூல சாஸனத்தையே தங்களுக்கு அனுகூலமாகத் திருத்தி யிருக்கிறது. இப்போது ஆட்சி மொழி விஷயமான 343-வது ஷரத்தைத் திருத்த மட்டும் ஆட்சேபிக்கிறது. பிரதமரின் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டுமானால் சாஸனத் திருத்தம் தவிர வேறு வழி இல்லை. அதற்கு முதலிடம் தந்து நிறைவேற்றியே ஆகவேண்டும்.

'உடனடியாக யாருக்கும் எந்தச் சங்கடமும் இல்லையே' என்று கூறி, எளிதில் ஏமாந்து போகும் நம்முடைய கபடம் தெரியாத மக்களுக்குக் கண்ணி வைக்கிறார்கள். பிரச்னை இன்னதென்று புரிந்து கொண்டவர்கள் இப்போது மக்களுக்கு உண்மை நிலையை

விளக்க வேண்டும். மக்களை எச்சரித்து எழுப்ப வேண்டியது தங்கள் கடமை என்று அவர்கள் உணர வேண்டும்.

இப்போது தில்லிக்குப் பயந்து யதார்த்தத்தை மறைத்துப் பேசும் தென்னாட்டு மந்திரிகளும், சட்ட சபையினரும் தைரியமாகத் தங்கள் பிரதேச மக்களின் உணர்ச்சியையும் உரிமையையும் எடுத்துச் சொல்லிக் காக்க முன்வர வேண்டும். மக்களுடைய குரலையே தாங்களும் எதிரொலிக்க வேண்டும். இவ்வாறு செய்தால் நிச்சயம் வெற்றி கிடைக்கும். கடமையிலிருந்து தவறுவது மடமையும், பலவீனமும் ஆகும். அரசியல் சட்டாயத்தின் பலத்தைக் கொண்டு தென்னாட்டை ஹிந்தி நாடாக்குவது திட்டம். அதை எதிர்ப்பது நம்முடைய கடமை.

**"ஹிந்தி ஆட்சிமொழி வேண்டாம். நேரு அவர்களின் வாக்குறுதியின்படி அரசியல் சாஸனத்தைத் திருத்தவேண்டும்."**

**இவ்வாறு ஒவ்வோர் ஊரிலும், இது இந்த ஊராரின் தீர்மானம் என்று பகிரங்கமாக ஒரு நல்ல பொது இடத்தில் யாரும் படிக்கும்படி எழுதவோ, அச்சிட்டு ஒட்டவோ வேண்டும். இப்படிச் செய்து தென்னாட்டவர் எல்லோருடைய ஏகோபித்த அபிப்பிராயம் இது என்பதைச் சர்க்காருக்கு உணர்த்த வேண்டும்.**

# என்ன சேதி?

## தொழிலாளர்கள் கவனிக்க!

'நம்முடைய தொழிலாளர்கள் முதலாளிகளிட மிருந்து தங்களுக்கு நன்மை பெற்றுத் தருவதாகக் கூறும் கம்யூனிஸ்டு தலைவர்களை நம்பி விடுகின்றனர். ஆனால் உண்மையில் கம்யூனிஸ்ட்களின் இலட்சியம் முதலாளி—தொழிலாளி சமரஸம் அல்ல. முடிவில் சர்க்கார் ஒன்றே முதலாளியாக இருக்க வேண்டும், எல்லாத் தொழிற்சாலைகளும் சர்க்கார் ஆதீனமாக வேண்டும் என்பது தான் அவர்களின் குறிக்கோள். அவ்வாறு ஏற்பட்டால் தொழிலாளர்கள் சர்க்காரை எதிர்த்து, இன்று தனி முதலாளிகளிடம் தங்கள் உரிமைகளை வலியுறுத்துவதுபோல் செய்ய முடியுமா? கம்யூனிஸ்ட் நாடு எதிலேனும் தொழிலாளிகள் சுதந்திரமாக வாழ முடிகிறதா? இதை நம் தொழிலாளர்கள் அறியவில்லை' என்று ராஜாஜி சென்ற மாதம் கம்யூனிஸத்தைக் குறித்து நடைபெற்ற ஒரு கருத்தரங்கில் கூறினார்.

இது நடந்து சில தினங்களுக்குள், இடதுசாரி மனப்போக்குக்குப் பெயரெடுத்த ஸ்ரீ வி. கே. கிருஷ்ணமேனன் அவர்களே சர்க்கார் தனது சிப்பந்திகளின் சுதந்திரத்தைக் குறைக்கிறது என்று வெளிப்படக் கூறிக் கண்டித்திருக்கிறார். அரசியல் சட்டத்தின் 311வது பிரிவைத் திருத்திச் சர்க்கார் ஊழியர்களின் உரிமைகளைப் பறிக்க முற்பட்டிருப்பதே ஸ்ரீ மேனனின் கண்டனத்துக்குக் காரணமாகும். சர்க்கார் தனி முதலாளியாகும் 'சோஷலிஸ ஸ்வர்க்கத்தில்' எல்லாத் தொழிலாளிகளுமே இன்று சர்க்கார் சிப்பந்திகள் ஆளாகி யிருக்கும் அடிமை நிலையைத்தான் அடைவார்கள். நீதி மன்றத்தின் மூலம் நியாயம் தேடிக்கொள்ளவும் அவர்களால் முடியாது.

## சர்க்கரைக் கட்டுப்பாடு

சர்க்கரை விஷயம் மீண்டும் கசக்கிறது. சென்னை நகரில் ஒரு கிலோ சர்க்கரைக்காக மக்கள் நீண்ட க்யூ வரிசைகளில் பொழுது விடிவதற்கு முன்பிருந்தே வந்து நிற்பதும், கடைக்காரர் சற்று நேரம்வரை சர்க்கரை கொடுத்து விட்டு, ஸ்டாக் தீர்ந்து விட்டது என்று கூறியதும் பெருத்த ஏமாற்றத்துடன் திரும்புவதும் சகஜமாகி விட்டன. வடக்கே போதிய கரும்பு உற்பத்தியாக வில்லை. அதற்காகக் கொண்டுவரப்பட்ட கண்ட்ரோல் இப்படிப்பட்ட சங்கடங்களை உண்டாக்கி வருகிறது. கண்ட்ரோல் விலையைவிட அதிக விலை வைத்து விற்றதற்காக ஒரு சில கடைக்காரர்கள் தண்டிக்கப்பட்டிருக்கிறார்கள். சர்க்கார் கவனத்துக்கு வந்த கள்ள மார்க்கெட்கள் ஒரு சில. வராதவை எத்தனையோ!

## நிர்ப்பந்தச் சேமிப்பு

வாழ்க்கையின் அவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவே தவிக்கும் மக்களை நிர்ப்பந்தப்படுத்திச் 'சேமிக்க' வைத்து அந்த ஆகாயக் கோட்டைச் சேமிப்பில் ஒரு பகுதியைச் சர்க்கார் பெறலாம்; இது அரசியல் சட்டத்துக்கு விரோதமல்ல என்று வாதம் புரிவது இயலாத காரியமாகும். இந்த இயலாத காரியத்தைச் சாதித்து விட்டார் நமது அட்டர்னி ஜெனரல் அவர்கள். ஒருவன் தான் பெறும் ஊதியத்தைத் தன் க்ஷேமத்துக்குகந்தபடி




செலவிட அரசாங்கம் அநுமதிக்கவில்லை. ஒருவன் தான் பெற்ற சம்பளத்தைச் செலவு செய்யும் முன்பே, அவனது குடும்ப நிலையைப் பற்றிச் சற்றும் கவனியாமல் அவன் இவ்வளவு சேமித்துத் தான் ஆக வேண்டும் என்று நிர்ப்பந்தமாக ஒரு பகுதியைப் பிடித்துக் கொள்வது சரி என்று அட்டர்னி — ஜெனரல் எப்படித்தான் அபிப்பிராயப்படுகிறாரோ?

'பொது நலனுக்காக' என்ற ஒரு காரணத்தைக் காட்டி விட்டால் எந்தச் சொத்தை வேண்டுமானாலும் சர்க்கார் பிடுங்கிக் கொள்ளலாம் என்ற கொடுங்கோன்மை இப்போது இந்தியாவில் உருவாகி யிருக்கிறது.

இது அரசியல் நிர்ணயச் சட்டத்துக்கு விரோதம் என்று வழக்குகள் தொடுத்து, அதற்காக ஏராளமான பொருள் நஷ்டமாகுமுன்பே, சர்க்கார் தங்கள் வழக்கப்படி 'அரசியல் நிர்ணயச் சட்டத் திருத்தம்' செய்து விட்டால் யுக்தமாக இருக்கும். கொடுங்கோன்மை என்பது சட்டம் என்ற ஆடையில் மறைந்து திரிவதைவிட நிர்வாணமாக உலவுவதே மேல்.

## ஒரு திருத்தம்

இவ்வாண்டு பாரத சர்க்காரின் பாராட்டைப் பெற்றவர் ஸ்ரீ அக்னிஹோத்திரம் தாதாசாரியார் அவர்கள். சென்ற இதழ் 'என்ன சேதி?'யில் அக்னிஹோத்திரம் ராமாநுஜ தாதாசாரியார் எனக் காண்பது தவறாகும். இவர் விருது பெற்றவரின் மைந்தர். தவற்றுக்கு வருந்தும்போதே, தந்தையைப் போலப் புலமை பெற்ற தனயரும் நாம் குறிப்பிட்டபடி தேசிய கௌரவத்தைப் பெறுவார் என்று நம்பவும் செய்கிறோம்.

# போகிற போக்கில்....

"நமஸ்தே பண்டிட்ஜி!"

"எங்கே வந்தீர் விடாக்கண்டரே?"

"நீங்கள் ரொம்பவும் மாறிவிட்டதாகப் பேசிக் கொள்கிறார்கள்!"

"எந்த வகையிலே....?"

"தமிழ் நாட்டிலேதான். எங்கள் விருப்பத்தைக் கேட்டுக் கொண்டு, நாங்கள் விரும்பினால்தான் இந்தியை ஆட்சிமொழியாகப் புகுத்தப் போவதாக வாக்களித்து விட்டு, இப்போது ஒரேயடியாகப் பல்டியடித்து...."

"நான் எப்பவுமே அப்படித்தான். முன்னே யெல்லாம் கூட நான் ஏதாவது பேசிக் கொண்டிருக்கையில் காந்திஜி கூப்பிட்டு நீ பேசியதெல்லாம் இந்தச் சமயத்துக்கு உதவாது; அந்தக் கருத்தை அப்படியே மாற்றிப் பேசு என்பார். 'தலைவரின் கட்டளைக்குப் பணிந்து நடப்பதே சிப்பாயின் கடமை' என்று அவர் கூறியபடி நடந்து கொள்வேன்!" என்றார் நேருஜி.

"அந்த வழக்கப்படிதான் இப்போ காந்திஜிக்குப் பதிலாக லால்பகதூர் சாஸ்திரி சொன்னதற்கும்...." என்று இழுத்தபடியே விடாக்கண்ட நிருபர், மாஸ்கோவுக்கு வந்தார்.

"வணக்கம்! வணக்கம்!" என்றார் விடாக்கண்டர். "ஜெய் ஹிந்த்!" என்றார் ருஷ்யப் பிரதமர் குருஷேவ்.

"நீங்கள் பதவியை விடப் போவதாகக் கேள்விப்பட்டேன். 'உண்மையில் பதவி உங்களை விடுகிறதா அல்லது நீங்கள் பதவியை விடுகிறீர்களா?"

"எங்கள் சர்க்காரிலேயே யாரும் நல்லபடியாக மரியாதையோடு விலகியதுமில்லை; அனுப்பப்பட்டதுமில்லை. நானாவது ஒரு நல்ல சம்பிரதாயத்தை ஆரம்பித்து வைக்கலாம் என்று பார்த்தால் விட மாட்டீர்கள் போலிருக்கிறதே!" என்று சொல்லிக் கொண்டே நாலுக்கால் குருஷேவ் நழுவி விட்டார்.

அங்கிருந்து விடாக்கண்ட நிருபர் விர்ரென்று பறந்து சென்று சர்ச்சில் முன்னால் குதித்தார். சர்ச்சில் "யாரது?" என்று சுருட்டுப் புகை மணம் கமழ எரிந்து விழுந்தார்.

"அடியேன் விடாக்கண்டன். அரசியலிலிருந்து மகிழ்ச்சியோடு விலகிக் கொண்டிருந்தீர்களானால் வாழ்த்துத் தெரிவித்து விட்டுப் போகலாம்; துக்கத்தோடு விலகிக் கொண்டிருந்தால் அனுதாபத்தைத் தெரிவித்து விட்டுப் போகலாம் என்று வந்தேன்..."

"ஓ! அப்படியா? பார், எனக்கு 89 வயதாகிறது. இந்த வயதில் விலகிக் கொள்வதில் துக்கம் என்ன இருக்க முடியும்? ஆனாலும் சென்ற வருஷம் அந்த ஹோட்டலில் சறுக்கி விழுந்ததில் எலும்பு முறியவில்லை என்றால், அரசியலிலிருந்து விலகுவதைப் பற்றிச் சிந்தித்திருக்க மாட்டேன். கால் முறிவுடன் அதிகமாக வேலை செய்ய முடியாததனால் தான் விலகிக் கொள்கிறேன். உண்மையில் அரசியல்வாதிகளுக்கு ஓய்வென்பது ஏது? மக்களுக்குத் தமது கடைசி மூச்சிருக்கும் வரை வழி காட்ட வேண்டியது தான்" என்ற சர்ச்சில், திடுமென விழித்துக் கொண்டவராய், "அடாடா! ஒரு அபிப்பிராயமும் சொல்லக் கூடாதென்று நேற்றுதான் சங்கற்பம் செய்து கொண்டேன். அதற்குள் என்னைப் பேச வைத்து விட்டீரே! நல்ல விடாப்பிடிப் பேர்வழி ஐயா நீர்!" என்றார்.

"வி—விக்டரி—வெற்றி" என்று இரண்டு விரலைக் காட்டிக் கொண்டே விடாக்கண்டர் பறந்தார்.

ஜனநாயகத்துக்கு ஆபத்து!



# முதல் மூவர்

## ராஜாஜி-சோமு



5

எத்தனை ஆராய்ச்சிகள் செய்தாலும், இறைவனுடைய அநந்த கல்யாண குணங்களை அளவிட முடியாது. பொய்கையார் பாடுகிறார் :

உணர்வார்ஆர் உன்பெருமை
ஊழிதோ றூழி
உணர்வார்ஆர் உன்உருவம்
தன்னை

ஊழி ஊழியாக இருந்து ஆராய முயன்றாலும் இறைவனுடைய பெருமையை அளவிட்டு அறிந்தவர் யாருமில்லை. அவனுடைய சொரூபத்தை அறிய வல்லாரும் இல்லை.

— உணர்வார்ஆர்
விண்ணகத்தாய் மண்ணகத்தாய்
வேங்கடத்தாய் நால்வேதப்
பண்ணகத்தாய் நீகிடந்த
பால்.

[விண்ணகத்தாய்—வைகுண்ட நாதனே! மண்ணகத்தாய்—பூமியில் வந்து அவதரிப்பவனே. வேங்கடத்தாய்—திருவேங்கட மலையில் அர்ச்சாவதாரமாக நிரந்தரமாய் எழுந்தருளி யிருப்பவனே. நால்வேதப் பண்ணகத்தாய்—கானம் செய்யப்படும் நான்கு வேதங்களிலும் நிற்பவனே! உணர்வார்ஆர் நீகிடந்த பால் — உன்னைப்பற்றிய முற்றறிவு யார் அடைய முடியும். பால்—தன்மை.]

விண்—ஆகாயம். மண்—பூமி. ஆகாயத்தையும் பூமியையும் வியாபித்து நிற்பவனே என்றும் பொருள் கொள்ளலாம். 'நீ கிடந்த பால்' என்பதற்கு 'நீ பள்ளி கொண்டுள்ள திருப்பாற்கடல்' என்று பழைய உரையாசிரியர்கள் பொருள் கூறியுள்ளார்கள்.

உணர்வாரார் உன்பெருமை
ஊழிதோ றூழி
உணர்வாரார் உன்னுருவம்
தன்னை — உணர்வாரார்
விண்ணகத்தாய் மண்ணகத்தாய்
வேங்கடத்தாய் நால்வேதப்
பண்ணகத்தாய் நீகிடந்த
பால்.

உண்மையைத் தாங்கள் தான் கண்டு விட்டோம் என்று மூர்க்க வெறி கொள்கிற சிலரின் அகங்காரத்தை அடக்குவதற்காக மும்முறை 'உணர்வார் ஆர்' என்று அழுத்தமாகப் பாடினார் என்று கொள்ளலாம். ஞானத்தோடு கூடவே வருகிற ஏமாற்றத் தத்துவமாகிய அகங்காரத்தை முற்றிலும் அகற்றி, பக்தி பரவசத்துடன் பொய்கையாரைப் போலவே திருமூலரும் பாடுகிறார் :

ஆர் அறிவார் எங்கள்
அண்ணல் பெருமையை
ஆர் அறிவார் அந்த
அகலமும் நீளமும்!




பாசுபதாஸ்திரம் பெறுவதற்காகத் தவக் கோலம் பூண்டிருந்த அருச்சுனனுக்கும் சிவ பெருமானுக்கும் பலப் பரீட்சை நடந்ததே. நினைவிருக்கிறதா? அதை நினைவுறுத்துவது போல ராசபுதனத்து இரு கோஷ்டிகள் ஓரிடத்தில் முகாமிட்டுத் தங்கள் கொடியைப் பறக்க விடுகின்றன. இதன் பலனாகப் பலப் பரீட்சை நடைபெறுகிறது. ஒரு கோஷ்டியின் வாலிபன் வெற்றிக் கொடி நாட்டுகிறான்.

எதிர்த் தரப்பின் தலைவனுக்கு ஒரே பெண். தன் மகளை மகனாக வளர்க்கிறான் அவன். அவளுக்கும் வெற்றி கொண்ட எதிர்க் கட்சி வாலிபனுக்கும் ஏற்பட்ட மோதல் முரட்டுக் காதலாக மாறிப் பிறகு மென்மையானதாக உருப்பெறுகிறது.

ஆங்கிலப் படமான 'பென் ஹர்'ரில் ரதப் போட்டி என்றால் ஹிந்திப் படமான ஸெஹ்ராவில் ஒட்டகப் பந்தயம்.

கதையில் 'மண்டல்' என்று ஒரு வில்லன். மற்றத் தோசை திருப்பிக் கதைகளைப் போலில்லாமல் வில்லன் கதாநாயகியை மணம் புரிந்து கொள்ளுகிறான். எதற்காக? பழி வாங்குவதற்காக!

கதாநாயகியைக் காதலிக்கக் கூடாது என்பதற்காகக் கதாநாயகன் வெறி பிடித்த ஒட்டகத்தோடு பிணைக்கப்பட்டுப் பாலைவனத்துக்கு விரட்டப்படுகிறான்.

மரணத்தின் வாயிலில் காதலனும் காதலியும் ஒன்று சேருகின்றனர். அவர்களைச் சேர்க்கவென்றே கதாநாயகி தூக்கி வந்த ஊஞ்சலும் அருகில் வந்து நிற்கிறது. சாதாரண ஊஞ்சலுக்குள்ள மன நெகிழ்ச்சியை என்னவென்பது?

'சாந்தாராம் எடுத்த படம் என்றால் நான் பார்க்காமல் இருப்பதில்லை!' என்று கூறும் இரசிகர்களை, காற்றில் ஆடும் ஊஞ்சல் திடுதிப்பென்று நின்று நின்று யோசிக்க வைப்பது கலைப் பிசகா? அல்லது சாந்தாராமின் 'டெக்னிக்'குகளில் ஒன்றா? சந்தியா ஆடும் நடனங்கள் படத்துக்கு ஒரு திருஷ்டி பரிகாரமா? அல்லது சாபக்கேடா?

சாதாரணமான காதல் போட்டிக் கதை. சாந்தாராமின் கைபட்டு, வசனத்திலும் உயர்ந்து, வண்ணக் கலையிலும் மெருகிட்டுப் பரிமளிக்கிறது. — ரா. வீ.





# வானவெளி வரவேற்கிறது



உலகிலிருந்து நூற்றி இருபது மைல்களுக்கு அப்பால், மணிக்குப் பதினேழாயிரம் மைல் வேகத்தில் வானவெளிக் கப்பல் விரைந்தது. அதனுள்ளே அமர்ந்திருந்த அமெரிக்க விண் வெளி வீரர் ஜான் கிளென்னுடைய நலனைக் கருத்தில் கொண்டு போப்பாண்டவர் முதல் பாமர மக்கள் வரையில் பிரார்த்தனைகளில் ஈடுபட்டார்கள். அவருடைய பயணத்தைப் பற்றிய விவரங்களை அறிய இரவெல்லாம் ரேடியோவைத் திருப்பி வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தனர் ஆசிய நாட்டினர் பலர். வானவெளியிலிருந்தபடி பூமியிலுள்ளோருடன் ஜான் கிளென் பேசுவது ஒலிபரப்பானபோது அமெரிக்கர்கள் ஆயிரக் கணக்கில் ஆனந்தக் கண்ணீர்











பொங்க ஆரவாரம் செய்தார்கள்; ஒருவரையொருவர் கட்டிப் பிடித்துக் கொண்டு கூத்தாடினார்கள்.

ஆனால் அமெரிக்காவின் (யூ. எஸ். ஏ.) தென் கிழக்குக் கோடியில் கேப் கனுவரல் என்னுமிடத்தில் ஜான்கிளென்னுடைய வானவெளிப் பயணத்தை 'எலக்டிரானிக்' சாதனங்கள் பலவற்றின் துணையுடன் கூர்ந்து கவனித்து வந்த விஞ்ஞானிகள் கடுகளவும் குதூகலிக்க வில்லை. அவர்களுடைய முகங்களில் கவலைக் குறிகள் படர்ந்தன. ஏனெனில் அவர்கள் எதிரே ஒரு சிவப்பு விளக்கு எரிந்து விண்வெளிக் கப்பலுக்கு ஆபத்து

புகைப் படங்கள்:-இடது பக்கம் மேலே: இம்மாத மத்தியில் வானவெளிப் பயணம் செய்யவிருக்கும் கார்டன் கூப்பர். கீழே: அமெரிக்காவின் விண்வெளி வீரர்கள் எழுவர். மேல் வரிசையில் வலக் கோடியில் இருப்பவர் கூப்பர். அவரது மனைவியையும் மக்களையும் இப்பக்கத்தில் மேலே காண்கிறீர்கள். ஒரே சமயத்தில் இரண்டு விண்வெளிக் கப்பல்களில் உலகைச் சுற்றி வருமாறு இருவரை அனுப்பி வைத்தது ருஷ்யர்களின் அபார சாதனையாகும். அமெரிக்க வீரர் மூன்று முறைதான் உலகைச் சுற்றி வந்திருக்கிறார் என்பதையும், ருஷ்ய வீரர் அறுபத்து நான்கு முறை சுற்றி வந்திருக்கிறார் என்பதையும் சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் கூறி இடித்துக்காட்ட குருஷேவ் தயங்குவதில்லை. மேல் படத்தில் ருஷ்ய விண்வெளி வீரரைக் கைதட்டிப் பாராட்டுகிறார் குருஷேவ். கீழே: உபஜனாதிபதி ஜாக் ஜான்ஸன் அவர்களுடன் ருஷ்ய விண்வெளி வீரர் நிகோலயேவ்.





நேரக் கூடும் என்பதை அறிவித்துக் கொண்டிருந்தது!

எந்த விதமான அபாயம் நேரலாம் என்பதையும் அந்தச் சிவப்பு விளக்கு அவர்களுக்கு உணர்த்தியது. வானவெளி என்பது காற்று அற்ற ஒரு சூன்யம். அதிலிருந்து பூமி மட்டத்துக்கு விண்வெளிக் கப்பல் இறங்கும் போது இடையில் உள்ள காற்றுக் கடலைக் கிழித்துக் கொண்டுதான் வரவேண்டும். அந்த உராய்வின் போது உருவாகும் ஏராளமான வெப்பத்தினால் கப்பல் பாதிக்கப்படாமலிருக்க அதன் முகப்பில் ஒருகேடயத்தை அமைத்திருந்தனர். இந்தக் கேடயம் கழன்று போயிருக்கலாம் என்பதுதான் அவர்கள் கண்ட முடிவு.

விஞ்ஞானிகளும் பொறியியல் நிபுணர்களும் கூடி ஆலோசித்ததும் தலைமை அதிகாரி, விண்வெளிக் கப்பலிலிருந்த ஜான் கிளென்னுக்கு அவர் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது பற்றி உத்தரவுகள்பிறப்பித்தார்.

மாற்றுக் கட்டளைகள் வந்து சேர்ந்த மறுவினாடியே எங்கோ எதிலோ பிசகு நேர்ந்து விட்டிருக்கிறது என்பதும் தமது உயிருக்கு ஆபத்து என்பதும் ஜானுக்கு ஊகமாகப் புரிந்து விட்டன. தைரியத்தை இழக்காமல் அவர் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிந்தார். இறைவன் அருளால் இன்னல் ஏதுமின்றி இவ்வுலகுக்கு வந்து சேரவும் செய்தார்.

கடலில் மிதந்த விண்வெளிக் கப்பலை மீட்டுப் பரிசோதித்துப் பார்த்த பின்னர்தான் அந்தக் கப்பலில் குறை ஏதுமில்லை என்றும் தங்களுக்கு உதவி வந்த 'எலக்டிரானிக்' சாதனங்களில்தான் ஏதோ பிசகுநேர்ந்து, அதனால் தவறுதலாகச் சிவப்பு விளக்கு எரிந்திருக்கிறதென்பதும் விஞ்ஞானிகளுக்குப் புரிந்தது!

ஆனால் வாழ்வின் எல்லைக்கோட்டில் நிற்கிறோமோ என்ற எண்ணம் நிலவிய அந்த ஒரு சில நிமிஷங்களில் ஜான் கிளென் அடைந்திருக்கக் கூடிய கலவரம், பரபரப்பு — இதைப் பற்றியும் வானவெளிக் கப்பலில் நேர்ந்ததாகப் பின்னால் கிளென் கூறிய வேறு ஒரு கோளாறு பற்றியும் பத்திரிகை நிருபர்கள் கேட்ட போது ஜான் அமைதியுடன் அளித்த பதில்: ''இத்தகைய சிக்கல்கள் நேர்ந்தது ஒரு விதத்துக்கு நல்லதுதான். வானவெளிக் கப்பல்கள் முழுக்க முழுக்கத் தன்னால் இயங்குவனவாக அமைய வேண்டுமென்பதில்லை என்பதும் ஆகாய விமானத்தைப் போலவோ, மோட்டார் காரைப் போலவோ அவற்றை மனிதன் தன் ஆற்றலினால் செலுத்திப் போக முடியும் என்பதும் இப்போது நிரூபணமாகியிருக்கிறது. அந்த விதத்தில் நான் எனக்கு நேர்ந்த இத்துன்பங்களை வரவேற்கிறேன்.''

இந்தப் பதிலைக் கேட்டு நிருபர்கள் அசந்து போனார்கள். நாமும் பிரமிக்கத்தான் செய்கிறோம். 'அடேயப்பா! என்ன நெஞ்சழுத்தம் இந்த மனிதருக்கு! இதுவன்றோ வீரம்!' என்று வியக்கிறோம்.

சுமார் முப்பது வருஷங்களுக்கு முன், ஆகாய விமானப் பயணம் இந்நாட்டில் ஆரம்ப தசையில் இருந்த காலத்தில் குடும்பத் தலைவன் அதிலேறிச் செல்லப் போவதாய்க் கூறியதும் வீட்டிலிருந்தோர் அனைவரும் விம்மி அழுதது நம் நினைவுக்கு வருகிறது. அதை விடப் பன்மடங்கு ஆபத்து மிகுந்த விண்வெளிப் பயணத்தில் ஈடுபடும் வீரர்களுடைய மனைவிமார்களின் நிலை என்ன?

ஸ்காட் கார்பெண்டர் என்பவர் விண்வெளிக் கப்பலில் மூன்று முறை உலகைச் சுற்றி வந்தவர். விண்வெளி வீரர்களின் மனைவியர் சார்பிலே மிஸஸ் ரெனி கார்பெண்டர் கூறுகிறார்: ''விண்வெளிப் பயணம் என்பது உலகுக்கு ஒரு புதுமையாகையால் எங்களுடைய பெயர்கள் பத்திரிகைகளில் அடிக்கடி இடம் பெறுகின்றன. ஆனால் சென்ற உலக யுத்தத்தின்போதும், பின்னர் கொரியாவிலும், இப்போது வியட்நாமிலும் யுத்த முனையில் போராடிய, போராடுகின்ற எண்ணற்ற அமெரிக்கச் சிப்பாய்களின் மனைவிமார்களுக்கு நேர்ந்த, நேரக் கூடிய துன்பத்தைக் காட்டிலும் எங்களது கவலையும் துன்பமும் அதிகமானதல்ல!''

பெருமை தேடிக் கொள்வதை விடுத்துப் பெண்மைக்கே உரித்தான அடக்கத்துடனும் பரிவுடனும் அவர் இவ்வாறு பேசியிருப்பது நம்மை மெய் சிலிர்க்க வைக்கிறது.

கொரிய யுத்தத்தில் கிளென் ஓட்டிச் சென்ற ஜெட் விமானம் கடுமையான தாக்குதலுக்கு உள்ளாயிற்று. எப்படியோ தப்பிப் பிழைத்து மீண்டு வந்தார் ஜான் கிளென். பின்னால் எண்ணிப் பார்த்ததில் இவரது விமானத்தில் குண்டுகள் பாய்ந்த ஓட்டைகள் மூந்நூற்று எழுபத்தைந்து இருந்தனவாம்!

இவ்வாறு விமான ஓட்டியாகப் பணி புரிந்து, பல போர்க் களங்களைக் கண்டு மன உறுதி பெற்றவர்களும், உடல் உறுதி குன்றாதவர்களுமான மனிதர்களையே வானவெளி வீரர்களாகத் தேர்ந்தெடுப்பார்கள்.

உதாரணமாக இம்மாத மத்தியில் வானவெளிப் பயணம் செய்யவிருக்கும் லீராய் கார்டன் கூப்பர் (இவ்விதழ் அட்டைப் படத்தில் தோற்றமளிப்பவர்) அவர்களை எடுத்துக் கொள்ளுங்கள். இவர் ஆறு வயது முதலே விமானம் ஓட்டிப் பழகியவர்! விமானப் படை கர்னலாக விளங்கிய தம் தகப்பனாரின் மடியில் அமர்ந்து விமானத்தைச் செலுத்தியிருக்கிறார், பாலகனாயிருந்த போது. அந்தச் சின்னஞ் சிறு வயதிலேயே விண்வெளிப் பயணம் பற்றிய வீரக் கதைகளை நிறையப் படிப்பார். பதினாறாவதுவயதில் தனியாக விமானம் ஓட்டினார். இப்போது அமெரிக்க விமானப் படையில் மேஜராக விளங்குகிறார். மொத்தம் இரண்டாயிரத்து முந்நூறு மணி நேரத்தை இவர் பறப்பதிலேயே கழித்திருக்கிறார். அமெரிக்காவின் விண்வெளிப் பயணத்துக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட எழுவருள் வயதைப் பொறுத்த மட்டில் கடைக்குட்டி இவரே என்றாலும், 'உங்களுடைய பொழுது போக்கு என்ன?' என்று யாரேனும் கேட்டால் 'பறப்பதுதான்!' என்று பதிலளிக்கும் இவரது பரந்த அனுபவத்தைப் பயன்படுத்திக் கொள்ளாதிருப்பது சாத்தியமா? முப்பத்து நாலு மணி நேரத்தில் உலகை இருபத்திரண்டு முறை சுற்றி வர வேண்டும் என்று இவருக்குப் பயணத் திட்டம் வகுத்திருக்கிறார்கள். இவ்விதமாக மிகுந்த முன் எச்சரிக்கையுடன் தேர்ந்தெடுக்கப்படுகிற விண்வெளி வீரர்கள்

பிறகு மாதக் கணக்கில் எத்தனையோ விதமான பயிற்சிகளைப் பெறுவார்கள். விண்வெளிப் பயணத்தின் போது ஏற்படக்கூடிய விநோதமான அனுபவங்களுக்குத் தங்களைத் தயார் செய்து கொள்வார்கள்.

எத்தனை சிறப்பாக அவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிற தென்பதை விண்வெளிப் பயணம் சென்று திரும்புகிறவர்கள் கூறுவனவற்றைக் கொண்டு கணிக்கலாம். உதாரணமாக எடையற்ற ஒரு நிலை விண்வெளியில் தமக்கு ஒருவித இன்பத்தையே அளித்ததெனச் சொன்னார் லெனோவ். ராக்கெட் பூமியை விட்டுப் பிரிந்து செல்லும்போதும் விண் வெளிக் கப்பல் பூமியை மீண்டும் அணுகும்போதும் புவி ஈர்ப்புச் சக்தியால் தமது உடல் மிகவும் பலமாக இழுக்கப்பட்டது வாஸ்தவம்தான் என்றாலும் அது ரொம்பத் தொந்தரவாக இல்லை என்றார்.

எடையற்ற நிலையை அடைந்த பிறகு தமது காமிராவை அவர் விட்டுவிட அது அந்தரத்தில் ஒரேயிடத்தில் அப்படியே மிதந்து நின்றதாம். பூவுலகின் இயற்கைக்கு மாறுபட்ட இத்தகைய விஷயங்கள் அளிக்கும் திகைப்பிலிருந்து நீங்கி வெளியே கண்ணாடி வழியாகக் கண்ணோட்டம் செலுத்தினாலோ சுற்றிலும் அவர் கண்ட காட்சிகள் அதிஅற்புதமாய் இருந்தன. நாம் இங்கு கணக்கிடுகின்ற காலம் நேரம் எல்லாம் அர்த்தமற்றவையாகத் தோன்றின அவருக்கு. நம்முடைய கணக்குப்படி ஐந்து மணி நேரத்தில் அவர் மூன்று சூரியோதயங்களையும், அஸ்தமன சூரியனை மூன்று தடவைகளிலும் பார்த்துவிட்டார்! நான்கு முறை செவ்வாய்க் கிழமையிலும் மூன்று தடவை புதன்கிழமையிலும் அவர் வாழ்ந்தார். பற்பசை போல் டியூபில் அடைத்துக் கொடுக்கப்பட்டிருந்த உணவைத்தான் அருந்தினார்.

இப்போதுள்ள திட்டப்படி மனிதன் இன்னும் ஆறு வருஷங்களுக்குள் சந்திரனைச் சென்றடைந்துவிடுவான் என்று விஞ்ஞானிகள் கருதுகின்றனர். அவர்களை அவ்விடத்துக்கு ஏற்றிச் செல்லப் போகிற ராக்கெட்டுகள் தயாராகி வருகின்றன. சந்திர மண்டலத்தில் அவர்கள் பயன்படுத்தப்போகும் வாகனங்கள் உருவாகின்றன. அவர்கள் பின்னோடு எடுத்துச் செல்ல வேண்டிய உபகரணங்கள் குறைகள் ஏதுமில்லா வகையில் சீராக்கப்பட்டு வருகின்றன.

அடுத்த பத்து வருஷங்களில் சராசரியாக ஒவ்வொரு அமெரிக்கக் குடும்பமும் ஆயிரம் டாலர்களை வானவெளி ஆராய்ச்சிக்காகச் செலவிட வேண்டியிருக்கும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். சந்திரனை மனிதன் எட்டிப் பிடிக்கிற நிலையை எய்த குறைந்தபட்சம் இரண்டாயிரம் கோடி டாலர்கள் செலவாகும் என்றும் சொல்கிறார்கள்.

இவ்வளவெல்லாம் செலவழிப்பானேன்? எத்தனையோ ஆபத்துக்களுக்கு உட்பட்டுச் சந்திர மண்டலத்துக்குப் போவானேன்? இதற்குப் பலரும் பல காரணங்களைச் சொல்லக்கூடும். எல்லாவற்றையும் விட முக்கியமான காரணம் ஒன்று உண்டு. அதுதான் தோல்வியை ஒப்புக்கொள்ள மறுக்கின்ற மனிதனுடைய மனப்பான்மை. வானவெளி 'வா வா' என்று அவனை ஆசை காட்டி வரவேற்கிறது. செய்ய முடியாது என்று நினைக்கிற ஒன்றைச் செய்து முடித்துக் காட்டுகிற ஆர்வத்தைத் தூண்டி விடுகிறது.

புழுவாக இருக்கும் ஒரு ஜீவன் பட்டு நூல் இழைகளால் தன்னைச் சுற்றிக் கூடு கட்டிக் கொள்கிறது. பல வாரங்களுக்குப் பிறகு அக் கூட்டைக் கிழித்துக் கொண்டு வெளிவரும்போது அதே ஜீவன் வர்ண ஜாலங்களை அள்ளி வீசும் பட்டுப் பூச்சியாகத் திகழுகிறது.

இன்றைய மனிதனைப் பட்டு நூல் இழைக் கூட்டுக்குள் இருக்கும் ஜீவனுக்கு ஒப்பிடுகிறார்கள் விஞ்ஞானிகள். வண்ணச் சிறகு விரித்து, மனோரம்மியமான தோட்டத்தில் உல்லாசமாய் உலவி வருகின்ற காலத்தை அவன் நெருங்கிக் கொண்டிருக்கிறானாம். அன்றைய தினம் விண்வெளிப் பயணம் என்பது சர்வ சாதாரணமான ஒன்றாக இருக்குமாம். இன்று விமானங்களில் நாடு விட்டு நாடு செல்வது போல் வருங்காலத்தில் மனிதன் ராக்கெட்டுகளில் ஏறிப் பூமண்டலத்திலிருந்து பிற மண்டலங்களுக்குச் செல்வானாம்.

விஞ்ஞான மேதைகளின் இந்தத் திட்டங்கள், அழிவுக்கு இடம் கொடாமல் அமைதியான முறையில் மனித குலத்தின் முன்னேற்றத்துக்காக நிறைவேற நாமும் வாழ்த்துவோம்.

## அடுத்த இதழில்

சிறுவர் சிறப்பு மடல்



★

மறக்க முடியாத திரைப்படங்கள்
— கண்ணன்



# ராமேசுவரத்தில் காமேசுவரி

**பா**ரத புண்ணிய பூமியின் தலைசிறந்த க்ஷேத்திரங்களிலொன்று ராமேசுவரம். நாடு முழுவதுமுள்ள ஹிந்துக்களை ஆகர்ஷிக்கும் ஸ்தலங்களில் காசிக்குச் சமானமானது ராமேசுவரம். பாரதத்தை ஆத்மீகத்தின் மூலம் ஒருமைப்படுத்தும் 'சார்தாம்' என்ற நாலு மத ராஜதானிகளில் ராமேசுவரம் ஒன்று. ஆத்மீகத்தின் மூலம் பாரதத்தை ஒருமைப்படுத்திய ஆதி சங்கராசாரியப் பெருந்தகை இந்த நாலு க்ஷேத்திரங்களில், பதரி, புரிஜகந்நாதம், துவாரகை இவற்றில் மடங்களை ஸ்தாபித்திருக்கிறார். நாலாவதாகிய ராமேசுவரத்தில் மட்டும் முக்கியத்துவம் வாய்ந்த ஒரு மடம் இல்லாதது குறையாக இருந்தது. சிருங்கேரியில் உள்ள ஸ்ரீமடத்துக்கு ராமேசுவரமே க்ஷேத்திரமாகக் கருதப்படுகிறது. எனினும் இந்தத் தலத்துக்கென்றே ஒரு பிரதான மடம் இருக்கவில்லை.

இந்தக் குறை சென்ற ஏப்ரல் 28-ந் தேதியன்று நீங்கிற்று. ஆதி சங்கரர் விட்டுப்போன பணியை இன்று நம்மிடையே அபிநவ சங்கரராக வாழும் ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமி பூர்த்தி செய்து விட்டார்கள். ராமேசுவரத்தில் அன்று ஸ்ரீ சங்கர மடாலயத்துக்குக் கும்பாபிஷேகம் செய்வித்து, 'ஆஸேது ஹிமாசலம்' எனப்படும் சேது முனையாகிய ராமேசுவரத்தில் ஆதி சங்கரரின் நினைவை நிரந்தரமாக்கி விட்டார்.

நீண்ட நாட்களாகப் பெரியவர்களின் திருவுள்ளத்தில் இருந்த அபிலாஷை இந்த மடாலய நிர்மாணம். இங்கு சுமார் முப்பதடி உயரமுள்ள ஓர் உப்பரிகையில் ஆசாரிய சங்கரரும், அவரது பிரதான சிஷ்யர்களான சுரேசுவரர், பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர் ஆகிய நால்வரும் சலவைக் கல்லில் நல்ல ஆகிருதியில் சிலையாக வீற்றிருந்து அருள் புரிகிறார்கள். மஹோததி எனப்படும் வங்காள விரிகுடாக் கடலில் ஸ்நானம் செய்து எழுபவர்கள் ஞானசாகரமாகிய பகவத்பாதரைத் தரிசிக்குமாறு சிலை பிரதிஷ்டையாகியுள்ளது. இந்தத் திருமடத்தில் துவாதச ஜோதிர் லிங்கங்கள் என்பதாக பன்னிரு புழம்பதிகளில் வதியும் சிவபெருமானின் அருவுருவத் திருச் சின்னங்களும் அமைக்கப் பட்டிருக்கின்றன. பாரதத்தின் பல பகுதிகளில் உள்ள அந்தப் பன்னிரு ஆலயங்களின் கோபுரத் தோற்றத்தையும் இங்கே சின்னஞ் சிறிய அளவில் ஒருசேரக் கண்டு புண்ணியம் பெறலாம்.



யாத்திரிகர்கள் புஷ்பாஞ்சலி செலுத்துவதற்காக ராமேசுவர சங்கர மடத்தின் ஆசாரியரின் பாதுகையைப் பிரதிஷ்டை செய்த ஒரு சந்நிதியும் உள்ளது. தியானத்துக்காக அமைத்துள்ள மண்டபத்தில் கபீர்தாஸ், சைதன்யர் ஆகியோரின் உருவங்கள் விளங்குவது பெரியவர்களின் சமய சமரசத்துக்குச் சான்று. கலைவாணியின் அழகிய சிலை ஒன்றினைக் கொண்ட நூல் நிலையமும் மடத்தின் ஓர் அங்கமாகும்.

**ஏ**ப்ரல் 28-ந் தேதி காலை ஸ்ரீ பெரியவர்களும், ஸ்ரீ புதுப் பெரியவர்களும் தொன்மை வாய்ந்த ஸ்ரீ ராமநாதர் ஆலயத்துக்குச் சென்று ஸ்வாமியையும் பர்வத வர்த்தினி அம்பிகையையும் தாங்களே பூஜித்தனர். அதன் பின் மடாலய கும்பாபிஷேகத்தையொட்டி வேள்வி நடைபெற்ற யாக சாலைக்கு வந்து பூர்ணாஹுதி நடைபெறுவதைக் கண்டனர். உப்பரிகையின் உச்சியிலுள்ள ஐந்து கலசங்களுக்கும் அபிஷேகம் செய்யும் திருப்பணியைப் பரம பாகவதரான புதுப் பெரியவர்களுக்கு அளித்துவிட்டுப் பெரியவர்களும் பக்தர்கள் புடைசூழச் சமுத்திரக் கரைக்குச் சென்றார்கள். அங்கிருந்து அற்புதமான கும்பாபிஷேகத்தைக் கண்டு களித்தார்கள். இரு கருடப் பட்சிகள் அப்போது மணி மாடத்தின் மீது பிரதக்ஷிணம் புரிந்த சுபசகுனக் காட்சியைப் பக்தர்கள் கண்டு மகிழ்ந்தார்கள்.

இதன் பின் பெரியவர்கள் புதிய மடத்தில் தம் பொன்னடி பதித்தார்கள். நீண்ட நாட்களாக ராமேசுவரத்திலிருந்து, இப்போது மடத்தின் ஓர் அங்கமாகிவிட்ட அநுமன் கோவிலில் அபிஷேகம் செய்துவிட்டு, பன்னிரு ஜோதி லிங்கங்களுக்கும் குடமுழுக்குச் செய்தார்கள். பிறகு ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சக்கரத்துக்கு அபிஷேகம் செய்யப் பட்டது.

இதெல்லாவற்றுக்கும் சிகரமாக ஆதி ஆசாரியருக்கும் பிரதான சிஷ்யர்களுக்கும் இரு பெரியவர்களும் அபிஷேகமும், பூஜையும் புரிந்தனர். அந்தத் தெய்விகக் காட்சியைக் கண்டு பக்தர்கள் புனிதம் பெற்றனர். இந்தத் திருப்பணியில் பக்தர்களின் மனங்களைக் குளிர வைத்த ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் அருள் சொட்ட ஆசிகூற வந்த போது காமேசுவரியாகிய காமகோடியே ராமேசுவரத்தில் எழுந்தருளியது போலத் தோன்றியது என்று விழாவில் கலந்து கொண்ட பாக்கியசாலிகள் கருதுகிறார்கள்.

இடப் பக்கம்: ஆதி ஆசார்யரை ஸ்வாமிகள் பூஜிக்கிறார். வலப் பக்கம்: ராமேசுவரம் ஸ்ரீ சங்கர மடாலய கும்பாபிஷேகக் காட்சிகள் சில.





# மக்கள் விரும்பும் மிதி வண்டி

ஐக்கிய அமெரிக்கா, மேற்கு ஜெர்மனி போன்ற தொழில் முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் பெரிய தொழிற்சாலைகளை நெருங்கினதும் முதலில் தென்படுவது வரிசை வரிசையாக நிறுத்தப் பட்டிருக்கும் மோட்டார்கள். இவை அனைத்தும் அத்தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களுடைய மோட்டார்கள். அமெரிக்காவில் ஒரு குடும்பத்துக்கு ஒன்று அல்லது இரண்டு மோட்டார்கள் இருக்கின்றனவாம். இதைக் கொண்டு அந் நாட்டின் முன்னேற்றத்தை ஒருவாறு கணிக்கலாம். நமது பாரத நாடு அத்தகைய முன்னேற்றத்தை இன்னும் அடையவில்லை. ஆனால் நாம் முன்னேற்றப் பாதையில் சென்று கொண்டிருக்கிறோம். மாட்டு வண்டி சகாப்தத்திலிருந்து இப்போது நாம் 'சைக்கிள்' சகாப்தத்தை அடைந்திருக்கிறோம். நகர்ப்புறத் தொழிலாளர்களிலிருந்து, நடுத்தர வர்க்க ஊழியர்களிலிருந்து, கிராமப்புறத்துத் தெருக்கோடி கடைக்காரர், விவசாயி வரையில் அனைவருக்கும் சைக்கிள் இன்றியமையாத ஒரு நண்பனாக விளங்கி வருகிறது. இதனாலேயே சைக்கிளை மக்களின் தோழன் என்று பரிவுடன் போற்றி வருகிறார்கள்.

ஆண்டுதோறும் 12 லட்சம் சைக்கிள்கள் நமது நாட்டில் இப்போது உற்பத்தியாகின்றன. இந்த எண்ணிக்கை நாள்தோறும் வளர்ந்து கொண்டே போகிறது. சுமார் 25 லட்சம் வரையில் உற்பத்தி செய்வதற்கான வசதிகள் நம் நாட்டுத் தொழிற்சாலைகளில் இருக்கின்றன. இவற்றில் நான்கு தொழிற்சாலைகள் மிகப் பெரியவை. இந் நான்கில் மிகப் பெரிய ஒன்று தமிழகத்தில் சென்னைக்கு அருகில் அமைந்துள்ளது என்பதை நினைத்தால் நமது மனம் பூரிப்படையும்.

பதினைந்தாண்டுகளுக்கு முன் அம்பத்தூர் கிராமம் ஒரு பொட்டல் வெளியாகத்தான் இருந்தது. இங்கே ஒரு தொழிற்சாலை நிறுவலாம் என்று யாராவது எண்ணியிருந்தால் அவரைக் கண்டு நகைக்கவே தோன்றியிருக்கும். மின்வசதிக் குறைவு; தொழிலாளர்கள் இல்லை; தொழில் அனுபவமுள்ளவர்கள் இல்லை; தொழிற்சாலை அமைப்பதற்கான மற்ற எவ்வித வாய்ப்போ, வசதியோ இல்லை; அக்கம் பக்கத்திலாவது தொழிற்சாலைகள் இருந்தனவா என்றால் அதுவும் இல்லை. ஆனால் ஒரு தமிழ் நாட்டுத் தொழிலதிபருக்கு மனோ தைரியம் இருந்தது; தீர்க்க தரிசனம் இருந்தது; தொழில் வளம் பெருக வேண்டும் என்ற ஆர்வமும் இருந்தது. அவர்தான் இப்போது சென்னையில் ஒரு முக்கிய தொழிலதிபராக, பெரியதொரு தொழில் ஸ்தாபனத்தின் தலைவராக விளங்கும் திரு ஏ. எம். எம். முருகப்ப செட்டியார். அம்பத்தூர் பொட்டல் வெளியில் பெரியதொரு தொழிற்சாலையை நிறுவலாம், நிறுவ முடியும், அங்கே மக்களுடைய தோழன் என்று கருதப்படும் சைக்கிளை ஏராளமாக நவீன முறையில் உற்பத்தி செய்யலாம் என்று அவர் எண்ணியதுடன், அதை வேகமாகப் பிரமிக்கத் தக்க முறையில் செயல்படுத்திவிட்டார்.

அம்பத்தூர் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் ஆவடி செல்லும் ரஸ்தாவில் சென்றால் டி. ஐ. சைக்கிள் தொழிற்சாலை கம்பீரமாக, அழகாகக் காட்சி அளிக்கும். அந்தப் பக்கமாகச் செல்பவர்களை 'வாருங்கள்' என வரவேற்கும். தொழில் வளர்ச்சியில் அக்கறை உள்ளவர்களை ''அவசியம் என்னைப் பார்த்து விட்டுச் செல்லுங்கள்'' என்று வற்புறுத்திக் கூப்பிடும்.

நுழை வாயிலைத் தாண்டிச் சென்றால் முதலில் தோன்றுவது காரியாலயம். அங்கே



1. அம்பத்தூரிலுள்ள டி. ஐ. சைக்கிள் தொழிற்சாலை உட்புறம். (2) பார்வை இழந்த ஒரு தொழிலாளி [illegible] திரும்புகிறார். (3) பரிசோதனைச் சாலை.

அனுமதி பெற்ற பின்னரே உள்ளே சென்று தொழிற்சாலையைப் பார்க்க முடியும். உற்பத்திசாலை தொழிற் தன்மைக்கும், உற்பத்தி செய்யப்படும் பொருள்களின் முக்கியத்துக்கும் ஏற்றவாறு இணக்கமாக, ஆனால் தனித் தனியாகப் பல பகுதிகளாக, அமைந்துள்ளது. ஒவ்வொரு பகுதியிலும் சென்று கிரமமாக சைக்கிள் உற்பத்தி செய்யப்படுவதை ஆரம்ப நிலையிலிருந்து முடிவு கட்டம் வரையில் கண்டு ஆனந்தப்படலாம்.

ஒரு பகுதியில் மூலப் பொருள்களும், உப பொருள்களும், சைக்கிள் உறுப்புக்களும் உருவாக்கப்படுகின்றன. உறுப்புக்கள் என்று சுலபமாகச் சொல்லி விடலாம். ஆனால் நுணுக்கமாக ஆராய்ந்தால் வியப்பு ஏற்படும். ஒரு சைக்கிளுக்குச் சுமார் 200க்கு மேற்பட்ட தனித் தனி உறுப்புக்கள் உள்ளன. குழாய்களாலான உடலமைப்பு, அவற்றை இணைக்கும் துண்டுக் குழாய்கள், வளைவாகவும், சப்பட்டையாகவும் வளைந்துள்ள குழாய்கள், பல் சக்கரங்கள், சக்கர வளையங்கள், இதிலுள்ள சிறு கம்பிகள், பிடியும் உறுப்புக்கள், கைப்பிடிகள், பின் சக்கர அமைப்பின் தனிப் பாகங்கள், — இப்படிப் பலதரப்பட்ட தனித்தனி உறுப்புக்கள் ஒவ்வொரு சைக்கிளிலும் இருக்கின்றன. ஒவ்வொரு உறுப்பும் தனித்தனியாகத் தயாரிக்கப்பட வேண்டும். அதற்குப் பிரத்தியேக முறைகள், பிரத்தியேக யந்திரங்கள், விசேஷத் திறமைகள் தேவைப்படுகின்றன.

உதாரணமாகச் சக்கரத்தில் உள்ள ''ஸ்போக்ஸ்'' என்னும் சிறு கம்பிகள் ஒவ்வொன்றும் தனித் தனியாகப் பத்து அல்லது பன்னிரண்டு வெவ்வேறு யந்திரங்களின் உதவியால் உருவாகின்றன. ஒரு யந்திரம் கம்பியைச் சமான அளவாக வெட்டிக் கொடுக்கும். மற்றொன்று — இரு நுனிகளையும் சிறிது வளைத்துக் கொடுக்கும். மூன்றாவது, கம்பியின் நுனியில் திருகுவதற்கு ஏற்றவாறு கோடுகளிடும். மேலும் ஒன்று கம்பியின் நுனியை வட்டமாகவும், தட்டையாகவும் அடித்துக் கொடுக்கும். ஒரு மூலையில் கம்பியை ஒரு யந்திரத்தில் கொடுத்தால் பத்துப் பன்னிரண்டு யந்திரங்கள் மூலம் படிப்படியாக அது சென்று மற்றொரு நுனியில் பூரணமான உறுப்பாக வெளிவரும். ''ஸ்போக்ஸ்'' என்ற இந்தக் கம்பிகளை விளிம்புடன் இணைக்கும் சிறு ஆணிகள் மட்டும் எட்டு அல்லது ஒன்பது யந்திரங்களில் கிரமமாகப் படிப்படியாக உருவாக்கப்படுகிறது என்றால் யந்திரங்கள் எவ்வளவு நுட்பமானவை, எவ்வளவு விரிவானவை என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

குழாய்களைப் பரிசுத்தம் செய்வதும், ஒன்றோடொன்று பொருத்தி அவற்றை உறுதிப்படுத்துவதும் ஆச்சரியகரமானவை. குழாயின் மேலுள்ள எண்ணெய்ப் பசையைப் போக்குவது ஒரு காரியம்; துருவை எடுப்பது மற்றொரு வேலை; பித்தளைப் பொடிகளை வைத்துக் குழாய் இணைப்புகளை உறுதிப்படுத்துவது ஒரு வேலை. உறுதிப்படுத்திய பின்னர் பித்தளைப் பொடி வைத்ததால் ஏற்பட்ட சின்னங்களை அகற்றுவது ஒரு வேலை. குழாய்களை யந்திரங்கள் மூலம் இணைப்பதும், அவற்றுக்கு முலாம் பூசுவதும் மின்சார இயந்திரம் மூலம் வர்ணம் கொடுப்பதும் மிகவும் நுண்ணறிவுடனும், திறமையுடனும் இங்கே செய்யப்படுகின்றன. ஒவ்வொரு வேலையும் யந்திரங்களைக் கொண்டே இயங்குகின்றன. தயாரான பொருள்களை ஓரிடத்தி லிருந்து மற்றோரிடத்துக்கு எடுத்துச் செல்வதும், ஒரு கட்டத்தி



சைக்கிள் "ப்ரேக்" உறுப்புக்கள் உருவாக்கி இணைக்கப்படுகின்றன. இதில் ஈடுபட்டிருப்பவர் கண்ணிழந்தவர்.





சைக்கிள் "சீட்டு"களின் அடிப் பாகங்கள் தோலுடன் இணைந்து உருவாக்கப்படுகின்றன.

லிருந்து அடுத்த கட்டத்துக்கு அவற்றை நகர்த்திச் செல்வதும்கூட யந்திரங்களால் தான் செய்யப்படுகின்றன. பாரமான பொருள்களை எடுத்துச் செல்லத் தலைக்கு மேல் மட்டத்தில் உயரத்திலிருந்து செயல் படும் கிரேன்கள் பெரிய தொழிற்சாலை களிலிருக்கும். ஆனால் இங்கே எடுத்துச் செல்ல வேண்டிய உறுப்புக்கள் இலேசா னவை யாதலால் யந்திரங்கள் மூலம் இவற்றை மிகவும் லாகவமாகவே எடுத் துச் செல்லுகின்றனர். கம்பித் தோர ணத்தில் மாட்டப்பட்ட உறுப்புக்கள் மிதமான வேகத்தில் நகர்ந்து செல்வ தும், குறிப்பிட்ட இடங்களில் சற்று நிற்ப தும், அங்கு குறிப்பிட்ட ஒரு வேலை அந்தக் குறுகிய காலத்தில் செய்து முடிக்கப்படுவ தும், பின்னர் அவை அடுத்த நிலையத்துக்குச் செல்வதும், ஏதோ மாயா லோகத்தில் நிகழ் வது போல் கண்ணைக் கவரும் வகையில் ஆச்சரியமாக நிகழ்கின்றன.

ஒவ்வொரு உறுப்பும் அததற்குச் சம்பந் தப்பட்ட வேலை பூர்த்தியானதும் பரி சோதனைக்குள்ளாகிறது. மிகவும் தேர்ச்சி பெற்ற தொழிலாளர்கள் இவ்வுறுப்புக்களைப் பார்த்த மாத்திரத்திலேயே சரியென்றும், சரியல்ல வென்றும் சொல்லி விடுகின்றனர். அவர்களால் ஆமோதிக்கப்பட்ட உறுப்புக்கள் மட்டுமே அடுத்த கட்டத்துக்குச் செல்லும். மற்றவை மறுபடியும் ஆரம்ப கட்டத்துக்கே திரும்பச் சென்று புதிதாக உருவெடுக்கும்.

இப்படி ஒவ்வொரு கட்டத்திலும் ஒவ் வொரு உறுப்பும் நன்றாகப் பரிசோதனை செய்யப்பட்ட பின்னரே சைக்கிளில் மாட் டப்படுகிறது. இந்தப் பரிசீலனை உண்மை யில் இரண்டாவது படிவப் பரிசோதனை என்றே சொல்ல வேண்டும். முதல் கட்டத் தில் எல்லாப் பொருள்களும் — கச்சாப் பொருள், மூலப் பொருள், அரை உற் பத்தி, கால் உற்பத்தியான பொருள் எல் லாமே பரிசோதனை சாலையில் பரிசோதனைக் குள்ளாகின்றன. இத்தொழிற்சாலையுடன் இணைந்துள்ள பரிசோதனை சாலையில் மூன்று விஞ்ஞானிகள் இருக்கின்றனர். ஒருவர் ரசாயன சம்பந்தமான விஷயங்களைக் கவனிக் கிறார். ஒருவர் உலோகத் துறை நிபுணர். மற்றொருவர் ஆராய்ச்சியாளர். இவர்களு டைய பார்வைக்குத் தப்பி உற்பத்தியில் உப யோகமாகும் எந்தப் பொருளும் தரக் குறை வாகப் போய் விடுமோ என்று பயப்படவே காரணமில்லை.

இதை உற்பத்தியாளர்கள் மட்டும்தான் சொல்லுகிறார்கள் என்பதில்லை. உபயோகிப்ப

டாக்டர் ஏ. ராம ஸ்வாமி முதலியார்



திரு ஏ. எம். எம். முரு கப்பச் செட்டியார்



திரு ஏ. எம். எம். அருணாசலம்



ஸர் ஐவன் ஸ்டெட்போர்டு





வர்களும் டி.ஐ. சைக்கிள்ஸ் தயாரிக்கும் 'ஹெர்க்குலீஸ்' மிகவும் சிறந்தது. உறுதியுள்ளது, உழைப்புக்கு ஏற்றது என்று போற்றுகிறார்கள். இதைக் காட்டிலும் சிறந்த ஒரு நற்சாட்சியும் இங்கே உற்பத்தியாகும் சைக்கிள்கள் பெற்றுள்ளன. இந்தக் கம்பெனிக்குத் தொழில் நுட்ப அறிவும், உதவியும் அளித்துள்ள ஸ்தாபனம் இங்கிலாந்தில் பெர்மிங்ஹாமில் உள்ள உலகப் புகழ் பெற்ற 'ஹெர்குலீஸ் சைக்கிள் அண்டு மோட்டார் கம்பெனி'. இந்தக் கம்பெனி 'ட்யூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் லிமிடெட்' என்ற அதன் தாய் ஸ்தாபனத்தின் ஓர் இணைப்பு. இந்த ஸ்தாபனம் உலகப் புகழ்பெற்றது. சுமார் ஐம்பது தனித் தனி துணைக் கம்பெனிகளையும், பல தொழிற்சாலைகளையும் கொண்டது. உலகத்தில் பல பகுதிகளில் இந்த ஸ்தாபனத்தின் தொழிற்சாலைகள் உள்ளன. இவர்களது கூட்டுறவினால் அம்பத்தூர் தொழிற்சாலை தோற்றுவிக்கப்பட்டாலும் தங்களுடைய வியாபாரச் சின்னமாகிய 'ஹெர்குலீஸ்' சின்னத்தைத் தாங்க அவர்கள் அநுமதித்தாலும் "ஹெர்க்குலீஸ் இந்தியா" என்ற குறிப்பு வைத்தே விநியோகம் செய்யப்பட வேண்டும் என்று முதலில் நிபந்தனை இருந்ததாம். இதனால் இங்கிலாந்தில் செய்யப்பட்ட 'ஹெர்குலீஸ்' சைக்கிளுக்கும் இந்தியாவில் அம்பத்தூர் தொழிற்சாலையில் செய்யப்பட்ட சைக்கிளுக்கும் ஏதோ சிறு வித்தியாசம் இருக்கிறதோ என்ற சந்தேகத்துக்கு இடமிருந்தது. ஆனால் பல லட்சம் சைக்கிள்கள் உற்பத்தி செய்யப்பட்டு விநியோகிக்கப்பட்டு வருகையில், ஆங்கிலேய கம்பெனியின் முதல்வர் அம்பத்தூருக்கு விஜயம் செய்து உற்பத்தி முறைகளையும், தயாரிக்கப்பட்ட பொருள்களையும் நேரில் பார்த்தபின், மனம் பூரித்து, "ஹெர்க்குலீஸ் இந்தியா" என்ற குறிப்புத் தேவையில்லை; "ஹெர்க்குலீஸ்"—என்றே இனி அழைக்கலாம். பெர்மிங்ஹாம் ஹெர்குலீஸ் சைக்கிள் எவ்வளவு சிறந்ததோ அம்பத்தூர் சைக்கிளும் அவ்வளவு சிறந்தது" என்று பாராட்டினார். இந்தப் பாராட்டுத்தான் டி. ஐ. சைக்கிள் ஸ்தாபனத்துக்கும் அதன் நிர்வாகஸ்தர்களுக்கும் உண்மையில் மகிழ்ச்சி அளித்தது. இதன் மூலம் அவர்களது திறமை உலகத்துக்கே தெரியப்படுத்தப்பட்டு விட்டதல்லவா?

"ஹெர்குலீஸ்" என்ற அந்த மாபெரும் கிரேக்க வீரன் எத்தகைய உடல் வலிமை பெற்றுப் புராணப் பிரசித்தியடைந்திருந்தானோ அந்த அளவுக்கு உண்மையிலேயே உறுதியுடையது ஹெர்குலீஸ் சைக்கிள். அதைப் போலவே "பிலிப்ஸ்" என்ற சின்னத்தைத் தாங்கி இங்கே தயாரிக்கப்படும் சைக்கிள்களும், இங்கிலாந்தின் தாய்க் கம்பெனியின் சைக்கிள்களைப் போலவே உறுதிக்கும் உழைப்புக்கும் புகழ் பெற்றவை. நமது



தொழிற்சாலையின் மற்றொரு பகுதி. சைக்கிள் கூடுகள் தயாரிக்கப்பட்டு அடுக்கப்பட்டிருக்கின்றன.

நாட்டில் மட்டுமின்றி வெளி நாடுகளிலும்கூட. ஹெர்க்குலீஸ் சைக்கிள்கள் கணிசமாகவே வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதியாகின்றன, அயல்நாட்டுச் சந்தைகளில் மற்ற நாடுகளின் போட்டிக் கடுமையாக இருந்தாலும், அம்பத்தூர்த் தொழிற்சாலையின் தயாரிப்பு என்றால் விலை போகிறது என்று சொல்லப்படுகிறது. "ஏற்றுமதி செய்; அந்நியச் செலாவணி சம்பாதிக்கவும்" என்று அரசாங்கம் விடுக்கும் கோரிக்கைகளை நடைமுறையில் செய்து காட்டும் நிலையில் இத்தொழிற்சாலை இருப்பதே இவர்களது தயாரிப்புகளின் தர உயர்வுக்கு ஒரு சான்று.





அது மட்டுமல்ல. அம்பத்தூர் சைக்கிள் தொழிற்சாலை ஆசியாவிலேயே மிக நேர்த்தியான தொரு தொழிற்சாலை என்று பிரசித்தியடைந்துவிட்டிருக்கிறது. இங்கு சில யந்திரப் பகுதிகள், குறிப்பாக 'எலெக்ரோ ப்ளேடிங்' இயந்திரம் அந்தத் துறையில் இணையற்றதாகச் சொல்லப்படுகிறது. ஆஸ்திரேலியாவில் உள்ள இதே மாதிரியான சில இயந்திரங்கள் பழுதடைந்த போது அம்பத்தூர் தொழிற்சாலையிலிருந்து நிபுணர்களை வரவழைத்துச் சீர் செய்து கொண்டனர் என்று அறியும் போது உண்மையிலேயே நாம் பெருமிதம் அடைகிறோம்.

இங்கே வருஷத்துக்கு மூன்று லட்சம் சைக்கிள்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. அதாவது நாட்டில் உற்பத்தியாகும் மொத்த சைக்கிள்களின் எண்ணிக்கையில் நான்கில் ஒரு பாகம் அம்பத்தூரில் தயாராகிறது. இதைத் தவிர ஒன்றரை லட்சம் சைக்கிள் உறுப்புக்கள் தயாரிக்கப்படுகின்றன. சொந்தத்துக்கு உபயோகமானவைபோக மற்றவை இதர சைக்கிள் உற்பத்தியாளர்களுக்கு விநியோகிக்கப்படுகின்றன. சைக்கிள் குழாய்களைப் பொருத்த மட்டிலுமே நாட்டின் தேவையை என்பது சதத்திற்கு இத்

(மேலே): கான்டீனில் சிற்றுண்டி தயாராகிறது. (நடுவில்): தொழிலாளர்கள் இடைவேளை உணவு கொள்ளுகின்றனர். (கீழே) தொழிலாளர்களின் உடல் நலன் கவனிக்கப்படுகிறது.



தொழிற்சாலையின் இணைப்பாகிய ''ட்யூப் ப்ராடக்ட்ஸி''ன் உற்பத்தி பூர்த்தி செய்கிறது. இவற்றிலிருந்து இந்தத் தொழிற்சாலைகள் எவ்வளவு பெரியவை என்பது புரியும்.

டி. ஐ. சைக்கிள் தொழிற்சாலைக்கு உப அல்லது சக தொழிற்சாலைகளாக நான்கு வெவ்வேறு தொழிற்சாலைகள் ஏற்பட்டுள்ளன. இவற்றில் முக்கியமானது ஆவடி அருகில் அமைந்துள்ள ''ட்யூப் பிராடக்ஸ்'' தொழிற்சாலை.

சைக்கிளுக்கு இன்றியமையாதது எஃகுக் குழாய்கள். ஆனால் இக்குழாய்கள் சைக்கிள் தொழிலைத் தவிரப் பல்வித தொழில்களுக்குத் தேவைப்படுகின்றன. ஜெட் விமானம் முதல் குழந்தை தள்ளு வண்டி வரையிலும் எஃகுக் குழாய்களின் தேவைகள் விரிவடைந்துள்ளன. 'ட்யூப் பிராடக்ஸ்' தொழிற்சாலையில் ரூர்கேலா உருக்குச் சாலையிலிருந்து தருவிக்கப்படும் கனமான எஃகுப் பட்டைகளைப் பிரமிக்கத் தக்க யந்திரங்களின் உதவியினால் சன்னத் தகடுகளாகவும், குட்டையாகவும், நீளமாகவும் தேவைக்குத் தகுந்தபடி மாற்றிக் கொள்ளுகிறார்கள்.

இங்கே தயாராகும் ERW மின்சார சக்தி கொண்டு இணைக்கப்பட்ட குழாய்கள், தரத்திலும் உறுதியிலும் பெயர்பெற்றவை. TRUWEL என்ற பெயருக்கு ஏற்ற இக்குழாய்கள் உறுதியான இணைப்புள்ளவை. இத்தொழிற்கூடத்தில் சுமார் எழுநூறு தொழிலாளர்கள் வேலை செய்கின்றனர்.

இரண்டாவது உப தொழிற்சாலை டி. ஐ. டயமெண்ட் செயின்ஸ் என்பது. இங்கே சைக்கிளுக்கு இன்றியமையாத சங்கிலி உற்பத்தி செய்யப்படுகிறது. இதைத் தவிர இதர தொழில்களுக்குத் தேவைப்படும் விசை இணைப்புச் சங்கிலிகளும் இங்கே சீக்கிரத்திலேயே தயாராகும். இதற்கு அயல்நாட்டுத் தொழில் நுட்ப அறிவும் உதவியும் அளித்துள்ளவர்கள் அமெரிக்க நாட்டின் டயமண்ட் செயின் கம்பெனியார்.

மூன்றாவது, சைக்கிள் ''ஸீட்'' தயாரிக்கும் ''ரைட் ஸாடல்ஸ்'' தொழிலகம். அம்பத்தூர் தொழிற்சாலையைச் சேர்ந்தாற்போலவே அமைக்கப்பட்டுள்ள இவ்விடத்தில் சைக்கிள் 'ஸீட்கள்' உற்பத்தியாகின்றன. 'ஸீட்'டுக்கு வேண்டிய மற்ற உறுப்புக்கள் எல்லாம் கிடைத்தாலும், இதற்குத் தேவைப்படும் தோல் நம் நாட்டில் கிடைப்பதில்லையாம். தோல் உற்பத்திக்கும், வர்த்தகத்துக்கும் புகழ் பெற்ற நம் நாட்டில் சைக்கிள் ஸீட் தயாரிக்கத் தகுதியுள்ள தோல் இல்லை. வெளி நாடுகளிலிருந்து தருவிக்க வேண்டியிருக்கிறது.

நான்காவதாகக் குறிப்பிட வேண்டியது ப்ராம்டன் ஃபிட்டிங்ஸ் என்ற ஆங்கிலேயக் கம்பெனியின் ஒத்துழைப்புடன் தயாரிக்கப்படும் பல்வேறு சைக்கிள் உறுப்புக்கள். இவையனைத்தும் 'ப்ராம்டன்ஸ்' என்ற வியாபாரச் சின்னத்தைத் தாங்கித் தரத்தின் உயர்வை விளக்கிக் கொண்டிருக்கின்றன.

இவ்வாறு ஆல்போல் விரிவடைந்துவிட்ட ஸ்தாபனம் பல கிளைகளையுடையதாகச் செழிப்புற்று நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு அரும் பணியாற்றி வருகிறது. இங்கே தொழிலாற்றுபவர்கள் ஏறக் குறைய 2500 பேர்கள். ஆகவே 2500 குடும்பங்களுக்கு டி. ஐ. ஸ்தாபனம் ஆதரவாக விளங்கி வருகிறது என்றால், மிகையாகாது. தொழிலாளர்களின் நலன்கள் நன்கு கவனிக்கப்படுகின்றன. அவர்களுக்கு அவசியமான 'கான்டீன்' வசதிகளும், முதல் சிகிச்சை வசதிகளும் சீரிய முறையில் இங்கே அமைந்துள்ளன. வேலை செய்யும் தொழிலாளர்களில் பெரும்பான்மையினர் சுற்றுப்புற கிராமங்களைச் சேர்ந்தவர்கள். பத்தாண்டுகளுக்கு முன்பு தொழிற்சாலை அநுபவமும், தொழிலறிவும் சிறிதும் இல்லாதிருந்தவர்கள். அவ்வளவு பேரும் இப்போது மிகத் திறமையுள்ள தொழிலாளர்களாக ஆகிவிட்டார்கள் என்றால் நமது கிராம மக்கள் எவ்வளவு விரைவில் தொழில் நுட்பங்களைக் கற்றுக் கொள்ளுகின்றனர் என்பது விளங்கும்.

இங்கே நம்மை விசேஷமாகக் கவரக்கூடியது கண்ணற்ற சிலர் தொழிற்சாலையில் மற்றத் தொழிலாளிகளைப் போலவே ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் வேலை செய்வதுதான். தட்டுத் தடங்கல் இன்றி, யந்திரங்களைப் போன்ற வேகத்துடனும், ஒழுங்குடனும், காலத்தை வீண் பேச்சில் செலவிடாமல், உழைத்து இவர்கள் மற்றவர்களைவிடக் கூடுதலாகவே சம்பாதிக்கின்றனர் என்பதை விளக்குகிறபோது தொழிற்சாலை அதிகாரி பூரிப்பெய்துகிறார். வேலை முடிந்து வெளிச் செல்லும்போதுதான் இவர்கள் பார்வை இழந்தவர்கள் என்பது தெரியும்.

சீரும் சிறப்புமாகத் திகழும் இந்த ஸ்தாபனத்தைச் சிறிய முறையில் ஆரம்பித்தாலும் பெரிய அளவில் வளர்த்து விட்டவர்களைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல வேண்டும். நகரத்தார் சமூகம் வங்கித் தொழிலில்தான் பல்லாண்டுகளாக ஈடுபட்டிருந்தது. ஆனால் காலப் போக்கில், தொழிலில் ஈடுபட வேண்டிய அவசியம் தோன்றி விட்டது நாட்டின் அதிர்ஷ்டம் என்றே கருதவேண்டும். திரு ஏ. எம். எம். முருகப்ப செட்டியாரின் பரந்த தொழில் நிர்வாக அறிவும், தீர்க்க தரிசனமும், திரு ஏ. எம். எம். அருணாசலத்தின் வியாபார நுணுக்க அறிவும், தினசரி நடவடிக்கைகளிலுள்ள ஆர்வமும், எல்லாவற்றுக்கும் மேலாக, உயர் நிர்வாகத்துக்குப் புகழ்பெற்ற டாக்டர் ஏ. ராமஸ்வாமி முதலியாரின் பழுத்த அநுபவமும், ஆங்கிலக் கம்பெனியின் தலைவராகச் சமீப காலம் வரையில் பணியாற்றி இந்திய ஸ்தாபனத்தின் நிர்வாகக் குழுவிலும் டைரெக்டராக இருந்துவரும் ஸர் ஐவன் ஸ்டெட்போர்டின் ஒத்துழைப்பும் இந்த ஸ்தாபனத்தின் வருங்கால மேன்மைக்கு அஸ்திவாரம் போல் அமைந்துள்ளன. அஸ்திவாரம் மட்டுமல்ல; அடுக்கு மாடிக் கட்டடமாகவே அமைந்திருக்கின்றன என்பதுதான் சரி. கடற்கரை ஸ்டேஷனுக்கு எதிரில் எழும்பிக் கொண்டிருக்கும் ஏழு மாடிக் கட்டடம் ''ட்யூப் இன்வெஸ்ட்மெண்ட்'' ஸ்தாபனத்தின் தலைமை அலுவலகம்தான். எதிர்காலம் எப்படி இருக்கும் என்று நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.

— எம். எஸ். சிவஸ்வாமி







1. இலங்கைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பொதுச் செயலாளர் திரு இ. மகாதேவன் அவர்களின் 'தென்னவன் பிரமராயன்' என்ற நாடகத்துக்கு இலங்கைக் கலைக் கழகம் பரிசளித்துக் கௌரவித்திருக்கிறது. இந்நாடக நூலின் வெளியீட்டுவிழா வைத்தீஸ்வர வித்தியாலயத்தில் நடந்தது.

2. திருவல்லிக்கேணி கடற்கரையில் ஆட்சி மொழியாக இந்தி திணிக்கப்படுவதைக் கண்டித்தும், ஆங்கில மொழி ஆட்சி மொழியாக நீடிக்க வேண்டும் என்பதை வலியுறுத்தியும் லட்சக்கணக்கான மக்கள் குழுமியிருந்த கூட்டத்தில் ராஜாஜி, திரு ஸி. என். அண்ணாதுரை, வெராஜ், அப்துல் சமத் ஆகிய தலைவர்கள் பேசினார்கள்.

3. விவேகானந்தா கல்லூரியின் சம்ஸ்கிருத விரிவுரையாளர் வரகூர் ஸ்ரீ கல்யாணசுந்தர சாஸ்திரிகள் அவர்களுக்குக் காஞ்சி ஆசார்ய ஸ்வாமிகள் அளித்துள்ள 'பாஷ்ய பாவக்ஞ' என்னும் பட்டத்தை ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர் அன்னாரிடம் சமர்ப்பித்தார்.

4. கவிச் சக்கரவர்த்தி கம்பன் பிறந்த தேரழுந்தூரில்





சமீபத்தில் கம்பர் விழா விமரிசையாக நடந்தது. இதில் பல அறிஞர்களும், கலைஞர்களும், மந்திரிகளும் கலந்து கொண்டனர்.

5. தென்னிந்திய புத்தகத்தொழில் கழகத்தார் தொடங்கியுள்ள 'வீட்டுக்கு ஒரு நூல் நிலைய'த்தைத் தமிழக கல்வி மந்திரி திரு எம். பக்தவத்ஸலம் ஆரம்பித்து வைத்தார்.






எடுப்பான ஆடைகள் - எங்கும் அணிந்து செல்லத்தக்கவை! நீங்கள் எங்கு சென்றாலும் தன்னம்பிக்கையுடனும், தோற்றப் பொலிவுடனும் விளங்க உங்களுக்கு சக்தி ஸூட்டுகள் இன்றியமையாதவை. இவை நாள்பட உழைப்பவை மற்றும் மடிப்பு கலையாமல் நிற்பவை. சக்தி ஸூட்டுகள், உருக்குலையாமல் காலையில் அணியும்போதிருந்த வனப்புடன், நாள் முழுவதும் விளங்குபவை.

கசங்காமல், சுருக்கம் விழாமல் எப்பொழுதும் புதுமை பளபளப்புடன் விளங்கும் சக்தி ஸில்க்குகளை அணிந்து நாள் முழுவதும் மகிழ்ச்சியுடன் திகழுங்கள்.

SHILPI - SM 292 A TAM


இல்லை...
அப்படியா?... யுவர் ஆனர்! என்னுடைய இரண்டாவது சாட்சியாகிய நாராயணனை அவர்களை அழைக்க விரும்புகிறேன்.
நாராயணன்! நாராயணன்!


மிஸ்டர் நாராயணன்! இந்த அம்மாளை உங்களுக்கு நினைவிருக்கிறதா?


அன்றைய உங்கள் ஹோட்டலில் அறை எடுத்துத் தங்கியது இந்த கேசவனுடைய, கருப்புக் கண்ணாடியணிந்த இவர்களைப் போன்ற ஒருவர். அப்படித்தானே?
ஆமாம்
அதுவும் இவனாக இல்லை
இல்லே.. ம்..
சார், சார்! என்னை ஏதேதோ கேட்டுக் குழப்பி விட்டீர்களே.


சாட்சிக்குச் சரியானபடி பாடம் சொல்லித்தரவில்லை
அப்படியெல்லாம் பேச வேண்டாம் சார். எனக்கு யாரும் எதுவும் சொல்லித்தரவில்லை. ஒரு வேளை எங்கள் ஹோட்டலில் வந்து தங்கியதும் அவனே ஒரு வேளை நான் வந்து சந்தித்ததும் உண்மை.
ஆமாமாம்! இந்த வழக்கின் அஸ்திவாரங்களே அசைகிறதே! யுவர் ஆனர், இந்தச் சாட்சியை மேலும் விசாரணை செய்வதை நான் ஆட்சேபிக்கிறேன்.


ஆட்சேபணை ஏற்றுக் கொள்ளப்பட்டது.
அடுத்தபடியாகத் தலைமை அவர்களை விசாரிக்க விரும்புகிறேன்.

தொடரும்

# உண்மை தெரிந்த பின்...

காளத்திநாதன்

மெயின் ரோட்டிலிருந்து பள்ளம் வெட்டிக் கொண்டு தனது கோணல் முகத்தைப் பூமியில் புதைத்து அழுது வடியும் அந்த ஒற்றையடிப் பாதை வழியாகப் போக யாருக்குமே மனசு வராது. அப்படியிருக்க, ஒரு சிலர் அந்த வழியாகத் தினமும் போய் வந்து கொண்டிருக்கிறார்கள் என்றால், அந்தப் பாதையின் முடிவில் புழுங்கிக் கொண்டிருக்கும் குப்பத்து ஜனங்கள் மோட்சத்தைத் தேடிப் பட்டணப் பிரவேசம் செய்து தீர வேண்டிய நிர்ப்பந்த நிலையில் இருந்ததே அதற்குக் காரணம்.

இப்படிக் குப்பத்து ஜனங்கள் பட்டணப் பிரவேசம் செய்யும் போதும், திரும்பித் தாங்கள் அவதரித்த குடில்களுக்கு வந்து சேரும் எந்த வேளையிலும் அர்ச்சனைகளைக் கேட்கத் தவறுவதில்லை. ஆரம்பத்தில் திரும்பிப் பார்த்து, 'த்சொ, த்சொ' போட்டவர்கள் பழக்கப்பட்டுப் போன பின்பு பார்த்தும் பார்க்காதது போல் நடந்தார்கள்.

பயந்து நடுங்கி வாய் பொத்தி அடக்க ஒடுக்கமாக நிற்கும் இந்த ராமாயி, பழிபாவம் அறியாத பச்சைக் குழந்தை என்று நினைக்கிறீர்களா என்ன? அதுதான் இல்லே!

இவள் இந்தப் பூமியில் அழுது கொண்டே பிறந்த பொழுது, அங்காளம்மாவின் நெற்றியில் பழைய காலணா அளவுக்குப் பிரகாசித்த குங்குமத்தை அழித்து அவளையும் அழ வைத்து விட்டாள்.

"இந்தப் பாவி பொறந்து என் புருஷனை விழுங்கி விட்டாளே! அந்த மவராசன் இருந்தா என்னை எப்படிப் பூப் போலக் காப்பாத்துவாரு! மூணு வருசத்துலே அவரு தங்கக் குணத்தைப் பார்க்கலியா? அவரு இருந்திருந்தால் என் கட்டைக்கு இந்தக் கதி வந்திருக்குமா?" என்று அங்காளம்மாவின் சிந்தனை ஓடும் போதெல்லாம் அவள் உட்கார்ந்து அழத் தொடங்கி விடுவாள்.

எதிரே அழவும் தோன்றாமல், 'அப்பா எப்படியம்மா இருப்பார்?' என்று கேட்கவும் கண் கலங்கிக் கொஞ்சவும் தோன்றாமல் ராமாயி திருதிரு வென்று விழித்துக் கொண்டிருப்பாள். அதை எப்படி அங்காளம்மாவால் சகிக்க முடியும்? "நீதான்டி இந்தக் குடும்பத்துக்கே கோடாலிக் காம்பா வந்து சேர்ந்தே. கொள்ளிக் கட்டையே, அப்பாலே போ, கழுதை!" என்று இழுத்துத் தள்ளுவாள்.



ராமாயிக்கு இது ஒன்றும் அதிர்ச்சியாக இருக்காது. பழக்கப்பட்டுப் போன விஷயம்.

ஒரு நாள் அங்காளம்மா அவளைச் சக்கையாக வெளுத்துக் கட்டி விட்டாள். குழந்தை அழுது கொண்டே ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருந்தாள். அப்பொழுதுதான் அந்தத் தாத்தா வந்தார், அன்பை வாரிப் பொழிந்தபடியே. பின்னாலிருந்து குரல் கேட்டது.

"ஏம்மா, குழந்தை! ஏன் அழறே?"

ராமாயிக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. தேம்பினாள்.

"நீ இங்கியா வந்து குந்திக்கிட்டு என் மானத்தை வாங்கறே? ஒன் காலை உடைச்சால்தான் சரிப்படுவே. ஒரு வேலைக்கும் துப்பில்லாட்டியும் என் வயித்தெரிச்சலையா கொட்டிக்கிறே?" என்று அங்காளம்மாள் ஆக்ரோஷத்துடன் அங்கே வந்து விட்டாள்.

கிழவனுக்குப் பாவமாகப் போய் விட்டது. ராமாயியை ஆதரவாக அணைத்துக் கொண்டான். "கொழந்தையை இப்படிக் கொல்லாதே. கடவுள் நமக்குக் குழந்தையைக் கொடுத்தது அதை வைச்சுக் காப்பாத்தத் தான். இப்படி அடிச்சுக் கொன்றால் கடவுள் நம்மைத் தண்டிச்சிடுவார்...." வார்த்தை நெருப்பைக் கொட்டத் தொடங்கிய கிழவன் தேக்கிக் கொண்டு துடித்தான்.

அங்காளம்மாவின் வெறுமை நெற்றியில் படர்ந்த கிழவனின் பார்வை, கொஞ்சம் கொஞ்சமாகத் தாழ்ந்து அவளது நொண்டிக் காலில் பரிதாபத்துடன் நிலைத்து நின்றது.

"இந்தக் கொழந்தைக்கு நான் வேலை தர்றேன். காலையிலே இங்கே வந்து கூட்டிப் போய், சாயந்திரம் கொண்டாந்து விடறேன். எவ்வளவு சேருதோ அதிலே பாதி கொடுக்கிறேன்..." என்று கிழவன் குழைந்தான்.

'அப்படி என்ன வேலை?' என்று அங்காளம்மா கேட்க வில்லை. அதைப் பற்றி எதற்கு வீண் கவலை? ஏதோ 'துட்டு' வருவதாக இருந்தால் சரிதான். "வேலைன்னு, அதிலே காசு பெயருமில்லையா?" என்று சந்தேகக் கடப்பாரையினால் கிழவனின் உள்ளத்தைப் பெயர்த்துப் பார்த்தாள்.

"பின்னே, பணம் இல்லாமேயா?"

"ரொம்ப சந்தோசம்.... ஒங்க தயவு!"

அப்பொழுதே கிழவன் ராமாயியை வேலைக்கு அமர்த்திக் கொண்டு போனான்.

அன்று மாலை இருபத்தேழு காசுகளுடன் ராமாயியைக் கிழவன் கொண்டு வந்து விட்ட போது, அங்காளம்மா உள்ளம் பூரித்தாள். மகளைக் கட்டித் தழுவிக் கொண்டு, "கரிக் கட்டை! நீ இனிமேல் பொழைச்சிக்குவே. கடவுள்தான் அந்தக் கிழவனை அனுப்பி வைச்சார்!" என்று ஆனந்தக் கண்ணீர் விட்டாள்.

என்ன வேலை செய்து மகன் இந்தப் பணத்தைக் கொண்டு வந்தான் என்று அப்பொழுதாவது கேட்க அங்காளம்மாவுக்குத் தோன்றவேயில்லை.

ஆனால், ராமாயியினால் அப்படியிருக்கமுடியவில்லை. அவள் சந்தோஷத்தில் துள்ளிக்கொண்டே சொன்னாள்: ''அம்மா! நானும் தாத்தாவும் என்ன செஞ்சோம் தெரியுமா? நெனைச்சாலே சிரிப்பு வருது. தாத்தா கண்ணை மூடிக்கினு குருடன்போல் வேஷம் போட்டாரு. நான் அவரு கையைப் பிடிச்சுக்கினு மொகத்தைத் தேவாங்குபோல் வெச்சுக்கினு மின்னாலே நடந்தேன். 'கண்ணில்லாத கபோதி ஐயா. கருணை காட்டுங்க புண்ணியவான்களே'ன்னு தாத்தா கெஞ்சினாரு. நானும் கூடச் சேர்ந்து கெஞ்சினேன். ஏமாந்து போன ஜனங்க ஒரு பைசா ரெண்டு பைசாவா போட்டாங்க....'' என்று பூரித்தாள்.

''எப்படியோ பொழைக்க ஒரு வழி தெரிஞ்சா சரி.....'' என்று சந்தோஷப்பட்டாள் அங்காளம்மா.

கிழவன் காலையில் ஆறு மணிக்கெல்லாம் ராமாயியை அழைத்துக் கொண்டு போய்விடுவான். இரவு ஏழு எட்டு மணிக்குத் திரும்பிக் கொண்டு வந்து விடுவான். ராமாயியின் கையில் 'தரித்திர பட்சம்' முப்பது காசுக்குக் குறையாது. இப்பொழுதெல்லாம் அங்காளம்மா அவள் மீது அன்பைப் பொழிந்தாள். ஒரு கடு சொல் கிடையாது!

''கண்ணில்லாத கபோதி சாமி! ஒரு காசு போடுங்க.... இந்தக் கொழந்தையைக் காப்பாத்தணும்.''

''நீங்க பெத்த புள்ளை மாதிரி சாமி! ஏழைக்கு மனசு இரங்கணும்....''

கிழவனும் ராமாயியும் தங்கள் நாடகத்தை நடித்துக் கொண்டிருந்தனர். அன்றைக்குக் கிழவனுக்கு வயிற்றெரிச்சல்தான்.

''சே! கஞ்சப் பசங்கள். இனிமேல் இந்தத் தெரு வேணும். பக்கத்துத் தெருவுக்குக் கூட்டிப் போ '' என்று கறுவினான் கிழவன்.

டாண்...டாண்...டாண்...!

''பள்ளிக்கூட மணியா? மூதேவி! ஒன்னை அந்தத் தெருவுக்கா இட்டுக்கினு போகச் சொன்னான் இந்தத் தெருவுக்கா இட்டுக்கினு வந்துட்டே? சரிசரி நகரு. இங்கே நாம நிக்கக் கூடாது. இனிமே இந்தப் பக்கம் கூட்டிக்கினு வந்துடாதே!'' என்று கண்களைத் திறந்து கொண்டு கிழவன் எரிந்து விழுந்தான்.

வித விதமான வண்ண உடைகளில் வண்ணத்துப் பூச்சிகளைப் போல் தன்னையொத்த குழந்தைகள் குதூகலத்துடன் குதித்தோடும் காட்சியைக் கண் இமைக்காமல் பார்த்தாள் ராமாயி. 'அம்மாடி! எம்மாம் பெரிய கட்டடம்...!'

மத்தியானம் கிழவன் பொரியுருண்டையும் வேர்க்கடலையும் வாங்கிக் கொடுத்தான்.

''தாத்தா!''

''தூக்கம் வருது; என்ன சனியனே?''

''கொஞ்சம் தண்ணி குடிச்சிட்டு வர்றேன்...''

''எங்காவது போய்த் தொலை. சீக்கிரம் திரும்பி விடு.''

நெஞ்சில் இடம் பிடித்துக் கொண்டு ஓங்கி நிற்கும் அந்தப் பள்ளிக்கூடத்தை உருக்கத்தோடு பார்த்துக் கொண்டு நின்றாள் ராமாயி. ஏக்கம் மார்புக் கூட்டை வெடிக்க வைத்தது.

'கடவுளே! கடவுளே! இதோ இவங்களைப் போல நானும் இந்தக் கட்டடத்துலே போய்ப் படிக்கமுடியாதா? நல்லா வட்சணமா உடுத்திக்கிட முடியாதா? நான் அதுக்குத் தகுதியே இல்லேங்கிறரே தாத்தா, அது உண்மைதானா!'

கண்களின் ஓரத்தை வழித்துக்கொண்டு இமையில் கசிந்த கண்ணீர் அவளது கன்னத்தை ஈரமாக்கி உருண்டது.



"ஏன் அழறே?"

"......"

"பசிக்குதா?"

"இல்லே. உங்களைப் பாத்தா எனக்கு அழுகையா வருது!"

"எதுக்கு?"

"எனக்கும் படிக்கணும்னு ஆசை..."

"ஒங்க தாத்தாகிட்டே சொல்றதுதானே"

"எங்க தாத்தாவை ஒனக்குத் தெரியுமா?"

"தெரியாது. என்னெப் படிக்க வெக்கிறது எங்க தாத்தா. அதனாலே சொன்னேன்..."

டன்......டன்.....

இடைவேளை முடிந்து மணியடித்துவிட்டதால் அந்தச் சிறுமி பள்ளிக்கூடத்துக்குள் ஓடி விட்டாள்.

இதற்குப் பிறகு ராமாயி அவளைப் பற்றித் தெரிந்து கொண்டாள். அவளுடைய பெயர் ராணி. அப்பா அம்மா இல்லே. தாத்தா மட்டும் இருக்கிறார். தாத்தாவுக்கு மில்லில் வேலே. ராணியைப் படிக்க வைத்து வாத்தியாரம்மாவாக ஆக்க வேண்டும் என்பது அவரது லட்சியமாம்.

"தாத்தாவுக்கு என் மேலே உசிரு. நான் படிச்சு வாத்தியாரம்மாவா வரணுமிங்கறதைத் தவிர வேறு ஆசை அவருக்குக் கிடையாது. நானும் அவரு மேலே என் உசிரையே வெச்சிருக்கேன்...." என்றாள் ராணி.

"நானும் அப்படித்தான். தாத்தாதான் எனக்கு எல்லாம்!" என்று ராமாயியும் பெருமைப்பட்டாள்.

"பின்னே அவரு ஏன் ஒன்னெப் படிக்க வைக்கலே?"

"இவரு எனக்குச் சொந்தத் தாத்தா இல்லே. எனக்கு அப்பா மூஞ்சி தெரியாது. அம்மா நொண்டி. நான் சம்பாதிச்சால்தான் ரெண்டு பருக்கை கிடைக்கும். இந்தத் தாத்தா எனக்குத் தொழில் குடுக்கிறாரு. அதோட அன்பா இருக்காரு. அதனாலே எனக்கு அவரு மேலே உசிரு..."

"அப்படி என்ன தொழில் செய்யறே?"

"அதான் பிச்சை யெடுக்கறது..."

"சேசே! பிச்சையா?"

"ஏன் அதுக்கென்ன?"

"ஒவ்வொருத்தர் கிட்டேயும் கைநீட்டிக் கெஞ்சறது அவமானம், கேவலம்!"

'ஆமாம். கேவலம்!'

காலைச் சூரியன் சிலிர்த்துக் கொண்டு புறப்பட்டான்.

"கரிக்கட்டை! இன்னும் என்னடி தூக்கம்? இப்படியா ஒடம்பு வெறைச்சிக் கெடக்கும்? எழுந்து பல்லே வெளக்கு..."

பக்கத்துத் தெரு குப்பை மேட்டிலிருந்து படைபடையாகப் பொறுக்கி வைத்திருந்த சாம்பல் கட்டியில் ஒரு துண்டை எடுத்துப் போட்டாள் அங்காளம்மா.

வழக்கப்படி கிழவனுடன் கிளம்பியவள் பகலுக்குப் பள்ளிக்கூடத்துப் பக்கம் தன் சிநேகிதியைச் சந்திக்க வந்தாள்.

"ஏன் கவலேயா இருக்கே? அழுதியா?" ராணி கரைத்தாள். "என்னைப் படிக்க வெக்க அம்மாவுக்கு ஆசையில்லே. திட்டரு" ராமாயிக்குத் தொண்டை கம்மிவிட்டது.

"அப்புடின்னு ஒங்க தாத்தாவெ படிக்க வெக்கச் சொன்னும் போச்சு. நான் வேணுமின்னு எங்க தாத்தாவை விட்டுச் சொல்லச் சொல்றேன்..."

"ஒங்க தாத்தா சொன்னால் போதுமா?"

"ஓ! எங்க தாத்தாவுக்குத்தான் படிப்பின் அருமை தெரியும். அவரு வந்து சொன்னால் ஒங்க தாத்தா சரின்னுடுவாரு...."

'இப்படியும் நடக்குமா? நடக்கவேணும் கடவுளே! நானும் படிக்க வேணும்... படிக்க!'

"இதோ பாத்தியா!"

ராமாயி தலையைத் தூக்கி ராணியைப் பார்த்தாள்.

"ஒனக்கு என் பழைய பொஸ்தகத்தைக் கொண்டாந்திருக்கேன். இந்த ஒடைஞ்ச பலகைலே அ, ஆ எழுதித் தரேன். அது போலேயே இந்தப் பலப்பத்தாலே எழுது. நாளைக்குக் காலம் கார்த்தாலே எங்க வூட்டுக்கு வா. எங்க தாத்தா கிட்டே சொல்லி ஒங்க தாத்தா ஒன்னெ படிக்க வெக்க ஏற்பாடு பண்ணலாம். அடுத்த வருசம் நீ ஸ்கூலில் சேர்ற வரைக்கும் நான் படிப்புச் சொல்லித் தர்றேன். நாளைக்கு வர மறந்துவிடாதே. கிழக்காலே தாத்திமேடு இருக்கே, அங்கே மூணாவது குடிசைதான் எங்க வூடு. இந்தா புடிச்சிக்க. பெல் அடிக்கிறாங்க. நான் போறேன். நாளைக்குக் கட்டாயம் வா!"

ஆற்றில் எதிரலையில் அகப்பட்டுக்கொண்டதுபோல் ஆனந்தத்தில் மூச்சுத் திணறினாள் ராமாயி. அந்தக் கிழிந்த புத்தகத்தையும் உடைந்த பலகையையும் ஒரு மரத்தடியில் மறைத்து வைத்துவிட்டு ஓடினாள்.

"எம்மா நேரம் மூதேவி! இந்தா இதைச் சப்பு!" கிழவன் ஒரு குச்சி ஐஸை அவளிடம் நீட்டினான்.

"தாத்தா....தாத்தா...."

"சொல்றதைச் சொல்லேன், மூதேவி!"

"எம்மேலே இவ்வளவு ஆசையா இருக்கியே தாத்தா, நீ என்னைப் படிக்கவெப்பியா?"

"மூதேவி! ஒனக்கு எத்தினி தடவை சொல்றது? நாமெல்லாம் பிச்சைக்காரக் கும்பல். படிக்கறதைப் பத்திக் கனவு காண முடியுமா? எனக்குக் கைநெறையச் சொத்து இருந்தால் ஒன்னெப் படிக்க வெச்சுப் பார்ப்பேன்..."

சாயங்காலம் கிழவன் அவளைக் கொண்டு போய்விட நடந்தபோது, "இன்னிக்கு நானே போய்க்கிறேன் தாத்தா" என்று தனது 'பாக'த்தை வாங்கிக் கொண்டு, மறைவிடத்திலிருந்து அந்தப் புத்தகத்தையும் பலகையையும் எடுத்துக் கொண்டு போனாள்.

"பொஸ்தகம் பலகை பாத்தியாம்மா, நான் படிக்கப் போறேன்..."

அதைக் கேட்ட அங்காளம்மாவின் உள்ளம் கொதி பாலேபோல் கொதித்தது.

சாப்பிடும்போது ராமாயி ராணியைப் பற்றிச் சொன்னாள். "அவ என்னெ எப்படியும் படிக்க வெப்பா அம்மா. அவங்க தாத்தா வந்து சொன்னால் நம்ம தாத்தா ஒத்துக்குவாரு. நீ வேணுன்னு பாரேன்..."

இலைகளினூடே காற்று சலசலத்துக்கொண்டிருந்தது. மரங்களில் இறங்கிக் கவிந்த இருள் தூர தூரத்துக்கும் வழியை மறைத்துப் பார்க்கும் சக்தியைக் கண்ணிடமிருந்து பறித்தது. வானத்தில் மின்மினிப் பூச்சிகளாய்

ஒரு கிளாஸ்

# கிஸான் ஸ்க்வாஷ்

## அருந்தி இளைப்பாறுங்கள்




சுவைமிக்கது; அலுப்பு நீக்குவது; ஆரோக்கியமானது. தானே கனிந்த கனிகளிலிருந்து தயாரானது. வைட்டமின் சத்து நிறைந்தது.

திடீரென்று வரும் விருந்தாளிகளுக்கென்றே தனியாக ஒரு பாட்டில் கிஸான் வைத்திருங்கள்.

ஆரஞ்சு, லெமன், மற்றும் ஆறு ரகங்களில் கிடைக்கிறது கிஸான் ஸ்க்வாஷ். மற்ற எல்லா ஸ்க்வாஷ்களையும்விட கிஸான் ஸ்க்வாஷ்தான் இந்தியாவில் அதிகமாக விற்பனையாகிறது.

கிஸான் ப்ராடக்ட்ஸ் லிமிடெட், பெங்களூர்

நட்சத்திரங்கள் தேஜஸ் குறைந்து தேய்ந்த நிலாத் துண்டு.

முக்கோணக் கல் அடுப்பில் எரிந்து சுள்ளிகள் உயிரை விட்டுக் கொண்டிருந்தன. அம்மா தூங்கட்டும் என்று காத்துக் கொண்டிருந்த ராமாயி 'விசுக்'கென்று எழுந்து, அடுப்பில் காகிதத்தைப் போட்டு வாயைச் செம்பாக்கிக் கொண்டு ஊதினாள். 'குப்' பென்று அடுப்புப் பற்றியதும் அதில் கை விளக்கைக் கொளுத்திக்கொண்டு புத்தகத்தைப் பிரித்துப் பார்த்தாள். நெஞ்சம் எப்படிப் படபடத்தது!

அவளுக்கு அதில் ஒன்றுமே விளங்கவில்லை. அவள் பார்த்திருக்கிற பல பொருள்களின் பொம்மைகள் இருந்தன. அவ்வளவுதான். 'இந்தப் புரியாத கோடுகள்தான் எழுத்துப் போலிருக்கு. ஸ்கோல் போயி இதெ கத்துக்கினு, நானும் படிச்சி வாத்தியாரம்மா ஆயிடுவேன்...'

உடைந்த பலகைத் துண்டில் ராணி எழுதிக் கொடுத்த 'அ, ஆ'வின் மேல் பலப்பத்தால் எழுதிப் பார்த்தாள் ராமாயி. முதலில் பலப்பக் குச்சியைப் பிடிக்கவே அவளுக்குத் தெரியவில்லை. பிறகு ஒரு மாதிரியாகப் பிடித்துக் கொண்டு கோடு இழுத்தாள். ஆர்வ மிகுதியால் அவள் கொடுத்த அழுத்தம் பலப்பத் துண்டை இரண்டாக்கிவிட்டது.

பளார்!

ராமாயியின் முதுகைப் பிளந்தது புளிய மரத்துப் பேய் அல்ல. பெற்றவள்தான்!

"இன்னால் என்னெய் விக்கற வேலே என்னு? இப்புடி ஏன் என் எயவெ கொட்டிக்கிறே! படுத்துத் தூங்குடி பொறம்போக்கே!" விளக்கை அசுரத்தனமா அவித்தாள் அங்காளம்மா.

கந்தல் பாயை இழுத்துப் போட்டுக்கொள்ளக்கூடத் தோன்றாமல், வெறுந் தரையில் சாய்ந்தாள் ராமாயி.

"ஏண்டி அழுறே? அடி பலமா பட்டுடிச்சா..."

"இது என்னம்மா அடி? நான் எவ்வளவோ பட்டிருக்கேன்... அம்மா... அப்பா இருந்தா என்னெ படிக்க வெச்சிருப்பாரு இல்லியாம்மா..." ராமாயி குலுங்கினாள்.

குடலை இழுத்து வெளியே போட்டாற்போல அங்காளம்மா துடித்தாள்.

அங்காளம்மா இன்னும் தூங்கிக் கொண்டிருந்தாள். கன்னத்தில் கண்ணீரும் காற்றில் பறந்த மண்ணும் ஐக்கியமாகி யிருந்தன. 'தூங்கட்டும். அதுக்குள்ளாற ராணியைப் போய்ப் பாத்துட்டு வரலாம். அவ தாத்தாவெக் கையோட கூட்டிவந்தா நம்ம தாத்தா கிட்ட சொல்லச் செய்யறதுக்கு சௌக்கியமா இருக்கும்...' ராமாயி எழுந்து நடந்தாள்.

"கரெக்டா வந்துட்டியே? இதுதான் எங்க ஊடு. உள்ளே வா..." ராணி ராமாயியின் கையைப் பிடித்துக் குடிசைக்குள் இழுத்தாள்.

"இதுதான் எங்க தாத்தா. மில்லுலே வேலே செய்யறாருன்னு நான் சொல்லலே..."

'இதுவா ஒங்க தாத்தா, அடி பாவி இதுவா ?'

கிழவன் 'கர்ர்' என்று முறைத்துப் பார்த்தான். ராமாயிக்குச் சர்வாங்கமும் நடுங்கிற்று. அவளுடைய அம்மா அவளைத் துணி துவைப்பது போல் அடித்துப் பிழிந்தபோது கூட அவள் இப்படி நடுங்கியதில்லை!

"இவ பேரு ராமாயி தாத்தா. இவெ அம்மா நொண்டி. யாரோ ஒரு தாத்தா இவளைப் பிச்சை யெடுக்க வைக்கிறாராம். அவருகிட்டே சொல்லி இவளெப் படிக்க வெக்கச் சொல்லணும். அதோட அவரையும் ஒரு வேலெ செய்ய வெக்கணும். நீ அடிக்கடி சொல்லுவியே தாத்தா, பிச்சை யெடுக்கறது கேவலம்னு. அவரு அந்த வேலெயெத்தான் செய்யறாரு. அவருக்கும் ஒங்க மில்லுலே ஒரு வேலெ வாங்கிக் கொடுத்திடு தாத்தா..."

ராணி பேசினாள்.

ராமாயி பதறினாள்.

கிழவன் பரிதாபமாகப் பார்த்தான். விழிகளின் வழியாகத் தன்மானம் பிதுங்கித் தவித்தது. 'ராமாயி! ஒன் கால்லே விழறேண்டி. என்னெக் காட்டிக் குடுத்துடாதே. நான்தான் ஒன்னோட சேர்ந்து பிச்சை எடுக்கிற தாத்தான்னு சொன்னியோ, என் உசிரை இந்த எடத்திலேயே விட்டுடுவேன்...ராணி யாருன்னு நெனச்சே? பிச்சைக்காரக் குடும்பத்துலே பொறக்க வேண்டியவளா? தெருத் தெருவா எரந்து அவளெ நான் வாத்தியாரம்மா ஆக்கப் பாடுபடறேன். என் கனவெக் கலெச்சுடாதேடி. ஒனக்குக் கோடி புண்ணியம்....' கிழவனின் விழிகள் கூறாமல் கூறின.

'என்னெ நம்பு தாத்தா... சத்தியமா ஒன்னெக் காட்டிக் குடுக்க மாட்டேன்...'

"ராணி ஒன் இஷ்டம் போலியே செய்யறேம்மா. நீ இங்கியே பத்திரமா இரு. இவளெ இவங்க தாத்தா கிட்டச் சொல்லி வுட்டுட்டு வரேன்...."

ராணி மகிழ்ச்சியில் துள்ளினாள். தலையைத் தொங்கப் போட்டுத் தேம்பியபடி கிழவனைப் பின் தொடர்ந்தாள் ராமாயி.

தெரு முனை திரும்பியதும், "என் குடும்பத்துக்கே உலெ வெக்கப் பாத்தியேடி! ஒன்னெ என்ன செஞ்சாத் தகாது?" என்று கிழவன் அவளை இரும்பாக இறுக்கிப் பிடித்தான்.

"என்னெ ஒண்ணுஞ் செய்யாதே தாத்தா. படிக்கணுமிங்கற ஆசையை நான் வுட்டுட்டேன். . பிச்சை யெடுக்க வர்றேன்...." ராமாயி கதறினாள். கிழவன் அவளைத் 'தர தர' என்று இழுத்துக் கொண்டு போய் அங்காளம்மாவின் காலடியில் தள்ளினான்.

"என்ன நடந்தது? என்ன செஞ்சிட்டா?"

"என்ன நடந்துதா? வளர்த்த கடா மார்லே பாஞ்சிடுச்சி. இந்த மூதேவி என் கொலத்தையே நாசமாக்கிடுவா. இனிமே நீங்க எக்கேடாவது கெட்டுப் போங்க. ஒங்க மொகத்துலே முழிக்கிறதே பாவம். பிச்சைக்கார நாய்ங்க...நான் இன்னைக்கே இந்த ஊரை வுட்டுத் தொலையறேன்...."

அடுத்த நாள்.

கொஞ்ச நாளாக விட்டிருந்த அங்காளம்மாவின் அர்ச்சனை புதிய ராக நயத்துடன் ஆரம்பமாகிவிட்டது.

"அந்தக் குழந்தைக்கு இந்தக் கலைத் திறமை கற்றுக் கொடுத்து மட்டும் வந்ததல்ல; மேதா விலாஸம் (genius) என்று எதையாவது சொல்லக் கூடுமானால் அது இது தான்!"

இப்படி ஒரு குழந்தையைப் போற்றினால் அந்தக் குழந்தையைச் சந்திக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்படுவது இயற்கை. இவ்வாறு போற்றியவர் பேராசிரியர் 'கல்கி' என்பதை அறிந்தால் அந்தக் குழந்தையைப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் முன்னிலும் பன் மடங்கு அதிகமானதில் வியப்புமில்லை. குழந்தையைத் தேடிக் கொண்டு சென்றி




னேன். "பேபி சரோஜாவின் வீடு இது தானே?" என்றேன். பதிலுக்குக் 'கலகல' வென்ற சிரிப்பொலி எழுந்தது.

"பேபிசரோஜாவின் பேபிகளைப்பாருங்கள், ஸார்!" என்று தமது குழந்தைகளை அழைத்துக்கொண்டுவந்தார் ஸ்ரீமதி சரோஜா.

"பாலயோகினி' படத்தில் நீங்கள் நடித்த போது நிகழ்ந்தவைகள் எதையாவது கூற முடியுமா?" என்று கேட்டேன்.

"போங்கள், ஸார்! பேபியாக இருந்த போது நடந்ததெல்லாம் யாருக்கு நினைவிருக்கும்?" என்று கேட்டுச் சிரித்தார் அவர்.

புராணப் படங்களுக்கு ரொம்பவும் மவுஸ் இருந்த அந்தக் காலத்தில் சமூகப் படங்கள் அதிகம் தலைதூக்க முடியவில்லை. நம் இந்துசமூகத்தில் நீண்டநாட்களாகநிலவிவரும் சாதிப் பிரச்னை, சமயப் பிரச்னை ஆகியவை யெல்லாம் படக் காட்சிகளில் வந்தால் மக்கள் ரசிப்பார்களா என்ற ஐயம் படாதிபதிகளின் மனத்தைக் குழப்பி வந்தது. ஆகையால் தான் அந்தக் காலத்தில் சமூகப் படம் தயாரிப்பதென்றால் மிகவும் தயங்கினார்கள். சமூகப் படம் எடுக்கப் பணத்தைவிடத் துணிச்சல் தான் அதிகமாகத் தேவைப்பட்டது.

டைரக்டர் கே. சுப்பிரமணியம் தமிழ்ப் படங்களின் விஷயத்தில் துணிச்சலான முயற்சிகளைச் செய்து வெற்றியும் அடைந்து வந்தார்.

1937-ம் ஆண்டு வெளியாகி வெற்றிகரமாகப் பல வாரங்கள் ஓடிய படமாகிய "பாலயோகினி"யைத் தயாரித்தார். திரை உலகத்துக்கு முற்றிலும் புதிய முகங்களைப் போட்டுத் தயாரித்த படம் அது. குழந்தைகளை வைத்துக் கொண்டு பெரும்பாலும் அவர்களுக்காகவே தயாரிக்கப்பட்ட படம்.

பேபி சரோஜாவைத் தவிர பாலசரஸ்வதி நொண்டிப் பெண்ணாக நடித்து எல்லோரையும் கண்ணீர் விட்டு உருகச் செய்தாள். அவளது நடிப்பைக் கண்டு உள்ளம் நெகிழாதவர்களே இல்லை.

இப்படத்தின் பாத்திரங்களைச் சிரமப்படுகிறவர்கள், சிரமப்படுத்தப்படுகிறவர்கள் என்ற இரண்டு பிரிவுக்கு உட்படுத்தலாம். ஆனால் குழந்தைகளை வைத்துக் கொண்டுதான் எல்லாமே நடந்தபடியால் அவர்களைப் பின்பற்றித்தான் நம் நினைவு சுற்றிச் சுற்றி ஓடுகிறது. குழந்தைகளைத் துன்புறுத்துவதற்கென்றே பெரியவர்கள் வந்தார்கள். பெரியவர்களால் துன்புறுத்தப்பட்டு உருக்கமாக நடிப்பதற்கென்றே குழந்தைகள் வந்து படத்துக்கு நல்ல பெயரை வாங்கித் தந்தார்கள்.

பல இடங்களில் விபரீதமாகப் பெரியவர்கள் மாதிரியே கூடப் பேசினார்கள்! உதாரணமாக திரைக் கதையில், ஒரு சந்தர்ப்பத்தில், "ஏன், ஸ்வாமி! பசியில் பிராமணப் பசி, அப்பிராமணப் பசி என்று இரண்டு விதம் உண்டா என்ன?" என்று சின்னஞ்சிறு பெண் ஒருத்தி கேட்கிறாள்!

"பாலயோகினி" படத்தின் முக்கிய நடிகரை நாம் மறப்பதற்கில்லை. அவர் அந்த ஒரு படத்தில்தான் நடித்தார்! கோபாலய்யர் என்ற பிரசித்தி பெற்ற பாத்திரத்தைத் தாங்கினவர் இதோ, பக்கத்திலிருக்கும் ஸ்ரீ ஆர். பார்த்தசாரதி அவர்கள் தான். 'பரதன்' என்ற புனைபெயரில் ஹாஸ்யக் கட்டுரைகள் எழுதிப் புகழ் பெற்றவர். இப்போது ஸ்ரீ ஆர். பார்த்தசாரதி அகில இந்திய காதி கமிஷன் டைரக்டராகப் பணி புரிந்து வருகிறார். அவரைச் சந்தித்து, "பாலயோகினி" படத்தைப்பற்றிஅவர் நினைவுகளைக் கூறும்படி கேட்டேன்.



"படத்தில் நடிக்கும் விருப்பமே எனக்கு என்றும் இருந்ததில்லை. நான் சட்டப்

## மறக்க முடியாத திரைப்படங்கள்

பரீட்சை எழுதிவிட்டுச் சும்மா இருந்த சந்தர்ப்பத்தை டைரக்டர் சுப்பிரமணியம் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு விட்டார். அவரும் நானும் பால்ய நண்பர்கள். 'நீ என்னுடன் வா' என்று கட்டாயப்படுத்தி அவர் என்னைக் கல்கத்தாவுக்கு அழைத்துப் போனார். 'நான் பெண்களுடன் நடிக்க மாட்டேன். எனக்குக் கூச்சம் அதிகம் என்றுதான் உனக்குத் தெரியுமே' என்றேன். (இப்படிச் சொல்லும் போது பார்த்தசாரதியின் முகத்தில் நாணம் படர்ந்தது. கூச்சத்துடன் தலை குனிந்து கொண்டார்!) உடனே சுப்பிரமணியம், 'உனக்கும் உன் கூச்சத்துக்கும் தக்க பாகம்தான் அது. நீ தாராளமாக ஏற்கலாம்!' என்று கூறி, கோபாலய்யர்பாத்





திரத்தை ஏற்று நடிக்கச் சொன்னார். அத்துடன், கதைக் குறிப்பைக் கொடுத்து அதற்கு வசனம் எழுதும் பொறுப்பையும் என் தலையிலேயே சுமத்தினார்'' என்றார் ஸ்ரீ பார்த்தசாரதி.

''உங்களுக்குப் 'பாலயோகினி' படப் பிடிப்பில் ஏற்பட்ட அநுபவம் ஏதாவ தொன்றைக் கூற முடியுமா?'' என்று கேட்டேன் நான்.

'' பூகம்பத்தில் கட்டடம் நொறுங்கி, அழிந்து போகும் காட்சி தத்ரூபமாக இருக்க வேண்டும் என்பது ஸ்ரீ சுப்பிரமணியத்தின் ஆசை. கல்கத்தாவில் எங்கோ ஒரு பகுதியில் ஒரு கட்டடத்தை இடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் கேள்விப்படவே, அங்கே படப் பிடிப்பை நடத்திக் கொள்ளச் சம்பந்தப்பட்டவர்களிடம் அநுமதி பெற்றுக் கொண்டு ஓடிவந்தார் ஸ்ரீ சுப்பிரமணியம். திரைக் கதையின்படி இடிந்த கட்டடங்களுக்கிடையில் அகப்பட்டு இறந்து போகுமுன்னர் நடிக நண்பரை மன்னிக்க வேண்டும் நான். அச்சமயத்தில், 'சீக்கிரமா மன்னிச்சுத் தொலையேண்டா! அசுவமேத யாகத்துக்கு நேரமாகிறது' என்று அந்த நடிக நண்பர் கேட்டுக் கொண்டது இன்னமும் என் நினைவில் பசுமையாக இருக்கிறது'' என்று கூறிச் சிரித்தார் பார்த்தசாரதி. பிறகு, ''ஷூட்டிங் கின்போது என்னைப் போட்டோ எடுக்கவேயில்லை. ஏனென்றால் நான் சினிமாவில் நடிப்பது என் வீட்டில் யாருக்கும் தெரியாது. 'ஷூட்டிங்' முடியும் முன்னரே என் புகைப்படம் ஏதேனும் பத்திரிகையில் வெளியாகியிருந்தால் என் நடிப்பைப் பாதியில் நிறுத்தும்படி யிருந்திருக்குமே!'' என்றார்.

'' 'பாலயோகினியின் முடிவு அருவருப்பை உண்டு பண்ணுவதாக இருக்கிறது' என்று ஆசிரியர் 'கல்கி' எழுதியிருந்தாரே; அதைப் பற்றித் தங்கள் அபிப்பிராயம்?' என்று கேட்டதற்கு ஸ்ரீ பார்த்தசாரதி அளித்த பெருந்தன்மையான பதில் இதுதான்:

''ஸ்ரீ கே. சுப்பிரமணியம் போன்ற என் சகாக்கள்கூட அந்தத் துன்ப முடிவை ஏற்கவில்லை. ஆனால் வசனம் எழுதிய என் அபிப்பிராயத்துக்கு மதிப்பளித்து என் இஷ்டத்துக்குப் படத்தை எடுத்தது அவர்களது பெருந்தன்மையைக் குறிக்கிறது.'' —விஜயம்

## பதினெட்டாவது அத்தியாயம்

கோடை விடுமுறைக்குப் பின் கல்லூரி திறக்கப்படுகிற முதல் நாளாகையினால் மைதானத்திலும் பச்சைப் பட்டு விரித்தாற் போன்ற புல்வெளிகளிலும், மரங்களின் அடியிலும், விரிவுரைக் கூடங்களின் வராந்தாவிலும், கல்லூரி முதல்வருடைய அறை முன்பும் மாணவர்களின் பெருங் கூட்டம் கூடியிருந்தது. கல்லூரிக் காம்பவுண்டு முழுவதும் புது மண வீடு போல் மகிழ்ச்சியும் ஆரவாரமும் நிறைந்திருந்தன. பட்டுப் பூத்தது போல் 'நெக் டை'யும் கஞ்சிப் பசை பளபளத்து மின்னும் 'பாண்ட்'டும் கோட்டுமாக விரிவுரையாளர்களும், பேராசிரியர்களும் குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டிருந்தார்கள். வெளியூர்களிலிருந்தும், உள்ளூரிலிருந்தும் பிள்ளைகளின் அட்மிஷனுக்குத் தேடி வந்திருக்கிற பெற்றோர்கள் கூட்டமும் ஒருபுறம் காத்திருந்தது. இரட்டைப் பின்னலும், ஒற்றைப் பின்னலும், இன்னும் பலவிதமான தலையலங்காரங்களுமாகப் பல வண்ணப் பட்டுப் பூச்சிகளைப் போல் மாணவிகள் அங்கும் இங்குமாக மான் குட்டிகளாய்த் துள்ளித் திரிந்து கொண்டிருந்தார்கள். பெரிய சித்திரத்தில் முக்கியமான வர்ணங்கள் தீட்டப்பட்டிருக்கிற இடங்கள் மட்டும் பளீரென்று பார்க்கின்றவனுடைய கண்களைத் தேடி வந்து பதிந்து கொள்ளுகிற மாதிரி அவ்வளவு



பெரிய காம்பவுண்டில் அத்தனை பெரிய கூட்டத்தில் மாணவிகள் நின்று கொண்டிருக்கிற இடங்கள் கலீர் கலீரென்று பொங்கும் சிரிப்பும், கிண்கிணிப் பேச்சுக்களும், கிளுகிளுக்கும் வளை ஒலிகளுமாகத் தனிக் கவர்ச்சியோடு இலங்கின. மஞ்சள் காவி பூசிய கல்லூரிக் கட்டிடங்களுக்குப் பின்னால் 'ஸீன்' கட்டித் தொங்க விட்டாற்போல் மேகக் கொத்துக்கள் பதிந்த மலைச் சிகரங்கள் அப்படியே கொஞ்சம் கொஞ்சமாக முன்னால் நகர்ந்து வருகின்றனவென அழகாகத் தோன்றின. பொன் உருகி மஞ்சள் வெள்ளமாய்ப் பொங்கினாற்போல் இலைகளே தெரியாதபடி மஞ்சள் நிறத்துக்குப் பூத்துக் கொட்டியிருந்த ஒரு வகை மரங்கள் கல்லூரிக் காம்பவுண்டில் அங்கங்கே நிறைந்திருந்தன. பச்சைப் புல்வெளிக்கும் அதன் மேல் பொன் பூத்தாற்போலப் பொங்கியெழுந்த இந்த மஞ்சள் மலர்த் தருக்களுக்கும் பொருத்தமாக இருந்தன. கல்லூரி அலுவலகத்தின் படிகளில் ஏறிக் கொண்டிருந்தபோது சத்தியமூர்த்தியைப் பலர் சிரத்தையோடு திரும்பிப் பார்த்தார்கள். தூய வெள்ளை உடையும், மலர்ச்சியும் அழகும் மிக்க முகமுமாக மின்னல் நடந்து போவது போல் படியேறிப் போகும் இவன் யாராயிருக்கலாம் என்று அடக்க முடியாத ஆவலோடு திரும்பிப் பார்த்தார்கள் சுற்றியிருந்தவர்கள். கல்லூரி முதல்வரின் அறையும், ஹெட் கிளார்க், ரைட்டர், காஷியர், டைப்பிஸ்ட் முதலியவர்கள் அமர்ந்திருந்த அலுவலக அறையும் தனித் தனியாக இருந்தாலும் உட்புறமிருந்தே ஓர் அறையிலுள்ளவர்கள் மற்றோர் அறைக்குப் போய் வர வசதியாக அமைக்கப்பட்டிருந்தது. சத்தியமூர்த்தி நேராக முதல்வருடைய அறைக்குத்தான் போனான். முதல்வர் யாரோ நாலைந்து மனிதர்களை எதிரே உட்கார்த்திப் பேசிக் கொண்டிருந்தார். சத்தியமூர்த்தி உள்ளே வந்து நிற்பதைக் கவனிக்கவே அவருக்குக் கால் மணி நேரத்துக்கு மேல் ஆயிற்று. அவன் பக்கமாகத் திரும்பி நிமிர்ந்து பார்த்தவர், ''ஓ.....'' என்று வியந்தவர் போல் சிரித்துவிட்டுச் சிறிது நேரம் நிரம்பவும் பரபரப்பாக இருப்பதற்கு அடையாளமாக ஓர் அர்த்தமுமின்றி மேஜை மேல் இந்தப் பக்கமாக இருந்த பைல் கட்டுக்கள் சிலவற்றை அந்தப் பக்கமாக நகர்த்தி வைத்து விட்டுப் பிறகு ஆத்திரத்தோடு கூப்பிடுகிறவராய் மணியை உள்ளங் கையால் இரண்டுதரம் ஓங்கித் தட்டியபின் சத்தியமூர்த்தியை நோக்கி மேலும் கூறினார்:

''எக்ஸ்க்யூஸ் மீ.......நௌ ஐ ஆம் வெரி பிஸி வித்.......தி.......நியூ அட்மிஷன்ஸ்........ஐூ ப்ளீஸ் மீட் மிஸ்டர் சிதம்பரம்.......அவர் காலேஜ் ஹெட் கிளார்க்..... ஹி வில் மேக் நெஸஸரி அரேஞ்மெண்ட்ஸ் டு ரெஸீவ் யுவர்.... ஜாயினிங் ரிப்போர்ட்''.......இவ்வாறு கூறியபடியே வலது கை விரலால் தாடி நுனியைத் திரித்து விட்டுக் கொள்ளலானார் முதல்வர். மிகவும் இரசிக்கத் தக்க பிரகிருதியா யிருந்த அவரை எண்ணி மனத்துக்குள் சிரித்துக்கொண்டே ஹெட் கிளார்க் சிதம்பரத்தைக் காணப் புறப்பட்டான் சத்தியமூர்த்தி. ஹெட் கிளார்க் வாயெல்லாம் பல்லாகத் தெரியச் சிரித்த முகத்தோடு அவனை வரவேற்றார்: ''என்ன சார் இது? விடிந்ததும் விடியாததுமாகப் புறப்பட்டுப் போய் அலைந்து வேறு ரூம் பிடித்துத் தங்கிவிட்டீர்கள் போலிருக்கிறதே? ஆனாலும் நீங்கள் இவ்வளவு அவசரப்பட்டிருக்க வேண்டியதில்லை. இன்னும் இரண்டு நாள் இங்கேயே தங்கிக் கொண்டு நிதானமாகப் பார்த்திருக்கலாமே...?'' என்று போலியாக வருவித்துக்கொள்ளப்பட்ட பொய் அநுதாபத்தோடு அவனை விசாரித்தார் ஹெட் கிளார்க்.

''அதைப் பற்றி என்ன வந்தது இப்பொழுது? இரண்டு நாள் பொறுத்துச் செய்ய வேண்டிய நல்ல காரியத்தை இன்றே செய்துவிட்டதற்காக வருத்தப்பட ஒன்றுமில்லை. பிரின்ஸிபால் உங்களைப் பார்க்கச் சொன்னார். நான் 'ஜாயினிங் ரிப்போர்ட்' கொடுத்துவிட்டு அட்டெண்டன்ஸில் கையெழுத்துப் போட வேண்டும்.'' — சிரித்துக் கொண்டே சத்தியமூர்த்தி இதைச் சொல்லிக் கொண்டிருந்தபோது முதல்வரின் அறையிலிருந்து மணி அடிக்கப் பெற்றுக் கூப்பிடும் ஒலியைக் கேட்டு ஹெட்-கிளார்க் எழுந்து ஓடினார். அவர் திரும்பி வருகிறபோது வரட்டும் என்று பக்கத்திலிருந்த நாற்காலி ஒன்றில் உட்கார்ந்தான் சத்தியமூர்த்தி. பெரிய பெரிய ஸ்டீல் பீரோக்களும், பைல்களும் புத்தகங்களும் அடுக்கிய அலமாரிகளுமாக நிறைந்திருந்த அந்தக் கூடத்தில் ஹெட் கிளார்க்கைத் தவிர வேறு சில அலுவலர்களும் அமர்ந்திருந்தார்கள். சாயம் பூசிக் கனிந்த கைவிரல் நகங்கள் டைப்ரைட்டர் மேல் சுறுசுறுப்பாக ஓடி மின்னும்படி டைப் செய்து கொண்டிருந்தாள் ஓர் ஆங்கிலோ இந்தியப் பெண்மணி. கல்லூரி முதல்வரின் அறைக்குள்ளிருந்து திரும்பிய ஹெட்கிளார்க் அந்த லேடி டைப்பிஸ்ட்டின் அருகில் சென்று ஏதோ நாலைந்து

# உங்கள் கேசத்தை அழகுபடுத்த நிரூபணமான பாமாலிவ் வழி



## பாமாலிவ் பெர்ஃப்யூம்டு கோகோனட் ஹேர் ஆயில்...




உங்கள் கேசத்திற்கு போஷாக்கு அளிக்கிறது. பாமாலிவ் உபயோகிப்பதால் நீண்ட, செழிப்பான கேசம் இயற்கையாக வளருகிறது. ரோஜா, லெவண்டர் அல்லது மல்லிகை—இம்மூன்று வாசனைகளில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.




## பாமாலிவ் கோகோனட் ஆயில் ஷாம்பு...

உயர்தரமான தேங்காய் எண்ணெயுடன் தனிப்பட்டு தயாரிக்கப்பட்ட பிரசித்தி பெற்ற கலவை. இது அழுக்கை சுத்தம் செய்யும் ஷாம்பு என்பதுடன், ஒரு கூந்தல் அலங்காரமும் ஆகும். பாமாலிவ்வின் செழிப்பான நுரை கூந்தலுக்கு ஊட்டத்தைக் கொடுப்பதுடன் உங்கள் தலையையும் கூந்தலையும் சுத்தமாக்கி பசுமை புத்துயிரூட்டுவதாலும், புதிய ஆரோக்கியமான கேச வளர்ச்சி ஏற்படுகிறது.

**நவநாகரீக இந்தியப் பெண்டிர் கூந்தல் அழகிற்கு விரும்பியெடுப்பது பாமாலிவ்**

அற்புதமான அமைப்புகள், அழகழகான
வர்ண விசித்திரங்களோடு கூடியதோர்
உடை உலகுக்கு அழைக்கிறோம் ...

# தாகர்ஸே

ஆடைகள்

நாகரீகத்தின் முக்கிய விருப்பம்

ஸான்போரைஸ்ட்
SANFORIZED
லேபில் உள்ளது.




**தாகர்ஸே க்ரூப் ஆலைகள்**

- தி க்ரௌன் ஸ்பின்னிங் & மான்யுபாக்சரிங் கம்., லிட்.,
- தி வெஸ்டர்ன் இந்தியா ஸ்பின்னிங் & மான்யுபாக்சரிங் கம்., லிட்.,
- தி இந்தியன் மான்யுபாக்சரிங் கம்., லிட்.,
- தி ஹிந்துஸ்தான் ஸ்பின்னிங் & வீவிங் மில்ஸ் கம்., லிட்.,

காகிதங்களைக் கொடுத்து விவரம்—சொல்லிவிட்டுப் பின்பு மீண்டும் தம் இடத்துக்கு வந்தார். மேசை இழுப்பறையைத் திறந்து ஏதோ அச்சிட்ட தாள் களை எடுத்தார்.

''இப்போது நல்ல வேளை இல்லை போலிருக்கிறதே. இராகு காலம் முடிந்ததும் நீங்கள் 'ஜாயினிங் ரிப்போர்ட்' டில் கையெழுத்துப் போடுகிறீர்களா?'' என்று சொல்லித் தயங்கினார் ஹெரட் ஜிளார்க். சத்தியமூர்த்தி இதைக் கேட்டு நகைத்தான்.

''துணிவோடும் நம்பிக்கையோடும் வாழ்ந்தால் எல்லா வேளையும் நல்ல வேளைதான். எல்லாக் காலமும் நல்ல காலம்தான். இந்த நூற்றாண்டில் வாழ்க்கையே ஓர் அவசரமான சந்தர்ப்பமாயிருக்கிறது. அப்படியிருக்கும்போது நேரத்தின் மேலும் காலத்தின் மேலும் விருப்பு வெறுப்புக் கொண்டு என்ன சாதித்துவிடப் போகிறோம்?'' என்று அவன் கூறியதைக் கேட்டு ஹெரட் ஜிளார்க் அவனைச் சந்தேகக் கண்களோடு உறுத்துப் பார்த்தார். 'ஆள் சுத்த சுயமரியாதைக் காரனாக இருப்பான் போலிருக்கிறதே' என்று அந்த ஹெரட் ஜிளார்க் தன்னைப் பற்றி அப்போது மனத்தில் வெறுப்பாக நினைப்பதை அவருடைய முகத்திலிருந்தே சத்தியமூர்த்தியால் புரிந்து கொள்ள முடிந்தது. ஆனால் ஹெரட் ஜிளார்க்கின் வாய்ச் சொற்கள் மட்டும் மிகவும் நாசூக்காக அவனைப் பாராட்டுவது போல் வெளி வந்தன. ''சார் ரொம்பவும் சீர்திருத்த மனப்பான்மை உள்ளவராக இருப்பீர்கள் போல் தோன்றுகிறது'' என்று சிரிப்போடு சிரிப்பாகச் சேர்த்து விஷமத்தனமாகக் கூறியிருந்தார் அவர். அவருடைய வாய் அப்படிச் சொல்லியிருந்தாலும் மனத்தில் உள்ளூற, 'பயல் பெரிய 'க'னா 'ம'னாவாக இருப்பான் போல் இருக்கே' — என்றுதான் அவர் நினைத்திருக்க வேண்டுமென்பதைச் சத்தியமூர்த்தியால் உய்த்துணர முடிந்தது.

''இந்த உலகத்தில் மனிதன் உயிர் வாழ்கிற காலமே நல்ல சொப்பனத்தைப் போல் மிக மிக வேகமாகவும் சுருக்கமாகவும் ஓடிவிடுகிறது. அதிலும் முக்கால் வாசி நேரத்தை இராகுகாலம் எமகண்டம் என்று ஒதுக்கிவிட்டால் முயற்சிக்கும் உழைப்புக்கும் மீதமிருக்கிற நேரம் தான் ஏது?'' என்று தன் கருத்தையோ தன்னையோ அவர் தப்பாகப் புரிந்து கொள்ளாத வகையில் மேலும் தெளிவாக விளக்கிச் சொன்னான் சத்தியமூர்த்தி. ஹெரட்ஜிளார்க் அவனுடைய விளக்கத்தைக் கேட்டுக் கொள்ளத் தயாராயில்லை.

''எனக்கென்ன வந்தது? உங்கள் விருப்பம் போல் செய்யுங்கள்'' என்று ஜாயினிங் ரிப்போர்ட்டையும், கல்லூரி நிர்வாகத்தினர் ஆசிரியர்களோடு செய்து கொள்ளும் வழக்கமான உடன்படிக்கைத் தாளையும் எடுத்து அவனிடம் நீட்டினார் ஹெரட் ஜிளார்க். அவற்றை வாங்கிப் படித்து விட்டுப் பூர்த்தி செய்ய வேண்டிய இடங்களை விரைந்து பூர்த்தி செய்து கையொப்பமிடுவதற்கு முன் 'யுவர்ஸ் ஒபிடியண்ட்லி'—(தங்கள் பணிவுள்ள) என்றிருந்த இடத்தை 'யுவர்ஸ் ட்ரூலி' (தங்கள் உண்மையுள்ள) என்று அடித்துத் திருத்தி விட்டுக் கையொப்பமிட்டான் சத்தியமூர்த்தி. அவன் கையொப்பமிட்டுக் கொடுத்தவற்றை வாங்கி மேலும் கீழுமாகப் பார்த்துவிட்டு அதே பழைய வஞ்சச் சிரிப்போடு உள்ளடங்கிய ஆத்திரம் தொனிக்கும் குரலில் அவனிடம் கேட்டார் ஹெரட் ஜிளார்க்:

> **பொன் விளக்கு**
>
> உண்மை பெரிய கோபுரத்தைப் போன்றது. கோபுரத்துக்கு அது கோபுரமாக இருக்கிறது என்பதால் தான் பெருமையேயழிய அதன் நிழல் பெரிதாக இருக்கிறது என்பதாலே பெருமையாகி விடாது. உண்மையாக வாழ்வதும் அப்படித்தான்.

''இப்படி அடித்துத் திருத்தியிருப்பதனால் நாங்கள் உங்களிடம் 'ஒபிடியன்ஸை' (பணிவு) எதிர்பார்ப்பதற்கில்லை என்று அர்த்தமா? அல்லது உலகத்திலேயே நீங்கள்தான் உண்மையுள்ளவர் என்பதை நாங்கள் கண்டிப்பாகப் புரிந்து கொண்டு ஒப்புக் கொள்ள வேண்டும் என்று அர்த்தமா?''

''பணிவுள்ளவர் போல் குழைந்து நெளிந்து பேசித் திரிகிறவர்களும், உண்மையில் அப்படியில்லாமல் ஏமாற்றுவதில்லையா? பணிவுள்ளவனும் உண்மையாக வாழாமல் இருக்கலாம். ஆனால் உண்மையாக வாழ்கிறவன் பணிவில்லாமல் இருக்க முடியாது. உண்மை என்பது எல்லா நல்ல குணங்களையும் இணைக்கிற ஒரு பெருங் குணம். பணிவு அப்படி இல்லை. பிறரைக் கவர்கிற சிறிய குணங்களில் பணிவும் ஒன்று. பல பெரிய குணங்கள் இல்லாதவனிடமும் பணிவு என்ற ஒரு சிறிய குணம் இருக்கலாம். ஆனால் உண்மை என்ற

ஒரு பெருங் குணமோ எல்லாச் சிறிய குணங்களையும் உடன் கொண்டது.''

''அதாவது...அந்தப் பெருங்குணம் உங்களிடம் இருப்பதாக நாங்கள் புரிந்துகொள்ளவேண்டும்!...இல்லையா?''

''ஒருவர் புரிந்து கொண்டு பாராட்ட வேண்டுமென்பதற்காக மட்டுமே உண்மையாக வாழ முடியாது! உண்மையாக வாழ வேண்டு மென்பதையே நோக்கமாக வைத்துத்தான் அப்படி வாழ முடியும்! உண்மையைப் பற்றியே சந்தேகமா யிருப்பவர்கள் உண்மையைப் புரிந்து கொண்டு பாராட்டுவார்கள் என்பதையும் எதிர்பார்க்க முடியாது. உண்மை பெரிய கோபுரத்தைப் போன்றது. கோபுரத்துக்கு அது கோபுரமாக இருக்கிறது என்பதால்தான் பெருமையே ஒழிய அதன் நிழல் பெரிதாக இருக்கிறது என்பதாலே பெருமையாகி விடாது. உண்மையாக வாழ்வதும் அப்படித்தான்.'' — இதைக் கேட்டு ஹெட் கிளார்க் முகத்தைக் கோணிக் கொண்டு இடுங்கிய கண் பார்வையால் அவனை வெட்டினார். 'பயல் திமிர் பிடித்தவனாகவும் இருப்பான் போலிருக்கிறதே' என்று இப்போது அவர் மனம் தன்னைப் பற்றி நினைப்பதாகச் சத்தியமூர்த்திக்குத் தோன்றியது. ஆனால் வெளிப்படையாக ஒன்றும் காட்டிக் கொள்ளாமல் ''ஏதேது உங்களிடம் பேசி ஒன்றும் மீதம் கொண்டு போக முடியாது போலிருக்கே'' என்றார் அவர். லேடி டைப்பிஸ்ட்டும், ரைட்டரும், தனக்கும் ஹெட் கிளார்க்குக்கும் நிகழ்ந்த இந்த விவாதத்தை அதுவரை சுவாரஸ்யமாகக் கவனித்துக் கொண்டிருந்தார்கள் என்பதைச் சத்தியமூர்த்தி அப்போதுதான் திரும்பிப் பார்த்துத் தெரிந்துகொண்டான். தான் 'ஒபீடியண்ட்லி' என்பதை அடித்துவிட்டு 'ட்ரூலி' என்று எழுதிக் கையொப்பமிட்டதை ஹெட்-கிளார்க் சிறிதும் விரும்பவில்லை என்பதை அவன் உணர்ந்தான். வழக்கமாக எல்லோரும் கையெழுத்துப் போட்டு விட்டுப் போகிற மாதிரித் தானும் போடாமல் அப்படித் திருத்திக் கையொப்பமிட்டது தன்னைப் பற்றி அவர் மனத்தில் ஒரு விரும்பத் தகாத அபிப்பிராயத்தை முதல் பார்வையிலேயே ஏற்படுத்தி யிருக்குமென்று அவனுக்குப் புரிந்தது. எல்லோரும் போகிற வழியில் போகாமல் தகுந்த காரணத்தோடு வழி விலகி நடக்கிறவனைப் பிறர் புரிந்துகொள்ள நீண்ட நாட்கள் பிடிக்கும் என்று தோன்றியது. 'ஜாயினிங்' ரிப்போர்ட் கொடுத்து முடிந்ததும் ஹெட் கிளார்க் அவனை அழைத்துப் போய் வைஸ் பிரின்ஸிபாலுக்கு (துணை முதல்வர்) அறிமுகம் செய்து வைத்தார். 'வைஸ் பிரின்ஸிபால் மற்ற ஆசிரியர்களை எல்லாம் அறிமுகம் செய்து வைத்த பின் 'தமிழ் டிபார்ட்மெண்ட்' அறைக்கு அவனை அழைத்துச் சென்று அவனுடைய 'ஹெட் ஆப் தி டிபார்ட்மெண்டு'க்கு அவனை அறிமுகம் செய்தார். மல்லிகைப்பந்தல் கல்லூரியின் தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர் காசிலிங்கனார் எம். ஏ., பி. ஓ. எல்., எம். லிட்., பி. எச். டி.. அவர்கள் அத்தனை பட்டங்களையும் தாங்கிக் கொள்ளக்கூட உடலில் ஆற்றலில்லாதவராய் எலும்பும் தோலுமாக மெலிந்து கோட் ஸ்டாண்டில் அப்படியே தூக்கி மாட்டிவிடலாம் போல அத்தனை ஒல்லியா யிருந்தார். தமிழை ஆங்கிலம் போலவும் ஆங்கிலத்தைத் தமிழ் போலவும் உச்சரித்துப் பேசினார் அந்தப் பேராசிரியர். அவரிடம் அரை மணி நேரம் உட்கார்ந்து உரையாடியதில் அவரை நன்றாக எடை போட்டு முடித்துவிட்டான் அவன். அவரைத் தவிர இன்னும் மூன்று விரிவுரையாளர்களும் இரண்டு டியூட்டர்களும் ஏற்கனவே அங்கே தமிழ்த் துறையில் இருப்பதாகத் தெரிந்தது. அவனுடைய புரொபஸராகிய 'ஹெட் ஆப் தி டிபார்ட்மெண்ட்' கனமான சோடாப் புட்டி மூக்குக் கண்ணாடியை அடிக்கடி கழற்றிக் கழற்றி மாட்டிக் கொண்டே, 'யூ ஸீ..... யூ ஸீ ... என்று ஆரம்பித்துத் தப்பித் தவறி ஒரு தமிழ் வார்த்தைகூட வந்துவிடாமல் ஆங்கிலத்தில் பொழிந்து தள்ளினார். அந்த அறையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தபோது நாலைந்து கல்லூரித் தோழிகளுடனே பாரதி அந்தப் பக்கமாக ஏதோ காரியமாய் வருகிறவளைப் போல் வந்து தான் அங்கிருப்பதைக் கவனித்துக்கொண்டுபோனதைச் சத்தியமூர்த்தியும் கவனித்தான். மறுபடியும் இரண்டு மூன்று முறை அதே போல ஆனால் உடனிருந்த தோழிகளின் தொகையை அதிகமாக்கிக் கொண்டு அவள் அந்தப் பக்கமாக வருவதும் போவதுமா யிருந்தாள். 'புதிய தமிழ் விரிவுரையாளர் மிகவும் நல்லவர்' என்று இந்தப் பேதைப் பெண் தன் தோழிகளைக் கூட்டிக் கொணர்ந்து என்னைக் காண்பித்துப் பெருமைப்பட்டுக் கொள்கிறாளோ?' என நினைத்தான் அவன். அன்று மாலை ஐந்தரை மணிக்கு நிர்வாகி பூபதி அவர்களின் வீட்டுத் தோட்டத்தில் கல்லூரி ஆசிரியர்களையும், அலுவலர்களையும் தேநீர் விருந்துக்கு அழைக்கும் 'சர்க்குலர்' ஒன்று வந்தது. அது




விஞ்ஞான முறையில் தயாராகும் லாக்டோ-காலமைன் உபயோகிக்கும்போது உங்கள் சரும எழில் மேம்பட்டு விளங்குகிறது. ● மறைந்து நின்று குணமளிக்கும் லாக்டோ-காலமைன் துரிதமாய் வேலை செய்யும் உயர் ரக காலமைன் அடங்கியது. களங்கங்களைக் களைந்து, வெயில், காற்று ஆகியவற்றால் முகம் கறுத்து விடாமல் காப்பாற்றுகிறது. ● உங்கள் மேனியெழிலை ஸாடின்போல் வழவழப்பாய் வைத்திருக்கும் லாக்டோ-காலமைனை முகவசீகரப் பொருளாக டாக்டர்கள் சிபாரிசு செய்கின்றனர். ● லாக்டோ-காலமைன் வரிசையில் மேலும் கிடைப்பவை: க்ரீம் மற்றும் டால்கம் பவுடர். லாக்டோ-காலமைன் எங்கும் கிடைக்கிறது

# லாக்டோ-காலமைன்

## உங்கள் ஒப்பற்ற எழிலின் அடித்தளம்

# இருமலை அகற்றச்

சாப்பிடுங்கள்

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் | சிவப்பு லேபில்

—வெறும் மருந்துமட்டுமல்ல, நம்பிக்கைக்குப் பாத்திரமான டானிக்குமாகும்!




வாழையடி வாழையாகக் குடும்பத்தினர் நல்லதென நம்பிக்கைகொள்ளச் செய்யும் பல நல்ல காரணங்களுள் நாலு இதோ:

1. இருமலை இமைப்பொழுதில் கச்சிதமாய்க் கரைக்கிறது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்.

2. கபம் அறுத்து, நுரையீரலைச் சுத்தப் படுத்தும் கிரியோஸோட், க்வயகால் அடங்கியது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்.

3. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் நோய் நிவாரணியும், நம்பிக்கைக்குகந்த டானிக்கும் ஆகும். நோயை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு உதவுகிறது.

4. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் பசியைத் தூண்டி, ஜீரண சக்தியை வளர்ப்பதுடன், ரத்தத்தைச் சுத்தப்படுத்தி, தாதுப் பொருள் நஷ்டத்துக்கு ஈடுசெய்கிறது.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் | சிவப்பு லேபில்



வார்னர் - லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி. (வரையறுக்கப்பட்டபொறுப்புடன் யு. எஸ். ஏயில் இணைக்கப்பெற்றது)

ஒரு 'கோ - எஜுகேஷன்' (ஆண்களும் பெண்களும் சேர்ந்து கற்கும்) கல்லூரி ஆகையால் ஆசிரியர்களாகவும் விரிவுரையாளர்களாகவும் சில பெண்மணிகளும் கூட இருந்தார்கள். தமிழ்ப் பகுதியில் மிஸ் வருணாம்பிகை என்று ஒரு பெண் விரிவுரையாளராக இருந்தாள். 'புரொபஸர் சார்...புரொபஸர் சார்'... என்று காசிலிங்கனாரைச் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தாள் அந்த இளம் ஆசிரியை. 'வருணம்! ... யூ ... ஸீ ...' என்று ஆரம்பித்துக் காசிலிங்கனாரும் அவளிடம் பேசுவதற்காகவே உண்டாக்கிக்கொண்டது போன்ற வாஞ்சையான குரலில் அடிக்கடி சிரத்தையாக ஏதோ பேசிக் கொண்டிருந்தார். அல்லது பேச முயன்று கொண்டிருந்தார். அங்கு வந்து சேர்ந்த முதல் விநாடியிலிருந்து ஒவ்வோர் அசைவிலும் பார்வையிலும் எதையும் தப்ப விட்டு விடாமல் அந்தக் கல்லூரியையும் அங்குள்ள மனிதர்களையும் கற்றுப் புரிந்து கொள்ளத் தொடங்கி யிருந்தான் சத்தியமூர்த்தி. தோற்றத்தில் அழகும் புத்தியில் திறமையும் உள்ள இளம் ஆசிரியர்கள் மாணவர்களைக் கவர்ந்து வசப்படுத்திக் கொண்டு விடுவார்களோ என்று பயப்படுகிற ஒரு முதல்வர், எல்லா வேளையிலும் இராகு காலத்தைத் தவிர வேறெதையும் அக்கறையோடு தேடிப் பார்க்க விரும்பாத ஒரு ஹெட் கிளார்க், தமிழை ஆங்கிலத்தைப் போலவும், ஆங்கிலத்தைத் தமிழைப் போலவும் உச்சரிக்கக் கூடிய ஒரு தமிழ்ப் பேராசிரியர், அடிக்கடி அடக்க முடியாமலும், தவிர்க்க முடியாமலும் ஏதோ புதுமையைப் பார்க்கிறவர்களைப் போல் தன் பக்கம் திரும்பிப் பார்க்கிற சக ஆசிரியர்கள் எல்லாரையும் மனத்தில் அளந்து நிறுத்துக்கொண்டிருந்தான் அவன். இடைவேளைக்குப் பின் தமிழ் 'டிபார்ட்மெண்ட்' அறையிலிருந்து புறப்பட்டு எல்லா ஆசிரியர்களும் பொதுவாகத் தங்கி ஓய்வு கொள்ளும் ஓய்வுக் கூடத்துக்குச் சென்றான் சத்தியமூர்த்தி. முதல் நாள் இரவு பஸ்ஸில் உடன்பயணம் செய்த பொருளாதார விரிவுரையாளர் தாமாகவே அவனைத் தேடி வந்து வலுவில் பேசத் தொடங்கினார். அவன் கேட்காமலிருக்கும்போதே அவராகவே கல்லூரி நிர்வாகி பூபதியைப் பற்றியும், முதல்வரைப் பற்றியும் ஏதேதோ அபிப்பிராயங்களைத் தெரிவிக்கலானார்.

''பூபதி ரொம்ப 'ஷார்ட் டெம்பர்ட்' (விரைவில் உணர்ச்சி வசப்படுகிறவர்) மேன். அவர் நல்லதைக் கொண்டாடும்போதும் பிறர் சந்தேகப் படும்படியாக அளவு மீறிக் கொண்டாடுவார். இது நல்லதில்லையே என்று பிறர் வெறுக்கிறவற்றை அவர் நல்லதில்லை என்று புரிந்து கொண்டு வெறுக்க அதிக நேரம் பிடிக்கும். திடீரென்று கல்லூரிக்கு வருவார். விரிவுரையாளர்களோ, மாணவர்களோ அறியாதபடி வகுப்பறைகளுக்கு வெளியே நின்று விரிவுரைகளைக் கேட்பார். எந்த விரிவுரையாவது அவரை மிகவும் கவர்ந்து விட்டதோ அந்த விரிவுரையை நிகழ்த்திய ஆசிரியனை அவர் கொண்டாடிப் புகழ்கிற வேகத்தைப் பார்த்து மற்றவர்கள் எல்லாம் அவனை வெறுத்துப் பொறுமைப்படுகிற அளவுக்குச் செய்து விடுவார். வெறுக்கத் தொடங்கினாலும் அப்படித்தான். ஒன்றை விரும்புவதிலும் சரி வெறுப்பதிலும் சரி அவர் போய் நிற்கிற எல்லை எதுவோ அது மற்றவர்கள் அணுக முடியாததாயிருக்கும். அவருடைய மகிழ்ச்சியையும் தாங்கிப் பொறுத்துக் கொள்ள முடியாது. கோபத்தையும் தாங்கிப் பொறுத்துக் கொள்ள முடியாது. 'மேன் ஆஃப் மூட்ஸ்'. நிரம்ப 'எக்ஸைட்மெண்ட்' உள்ளவர். குண்டூசி குத்துகிற நேரத்தில் மாறி விடுவார். ஏன் மாறினார் என்று காரணமும் கண்டு பிடிக்க முடியாதபடி மாறி விடுவார்.''

''அதனால் என்ன சார்? மனிதர்கள் தாங்களும் பலாபலங்கள் உள்ள வெறும் மனிதர்களாகவே இருக்கிற வரை இன்னொரு மனிதனைப் பற்றி இப்படி விமர்சனம் செய்து என்ன ஆகப் போகிறது?'' என்று அந்தப் பேச்சை அவ்வளவில் நிறுத்த முயன்றான் சத்தியமூர்த்தி. அப்படியும் அவர் தமது பேச்சை நிறுத்தவில்லை.

''உங்களுக்குத் தெரியுமோ மிஸ்டர் சத்தியமூர்த்தி? எல்லா லெக்சரர்களும் சேர்ந்து நம்முடைய பிரின்ஸிபாலுக்கு 'க்ரொகடைல்' (முதலை) என்று பேர் வைத்திருக்கிறோம். அந்த முதலையின் கும் பக்கம் போனால் அப்புறம் 'ஒரே கஜேந்திர மோட்சம்' தான். அப்படியே ஆளைக் கவ்விக் குதறி விடும் குதறி...கடிபட்டவர் எந்த நாராயணமூர்த்தியைக் கூவி அழைத்தும் பயனில்லை. ஹெட் கிளார்க் பெரிய முதலைக்கு அநுசரணையாக இருக்கும் ஒரு குட்டி முதலை...''

'ஆனால் ... இராகு காலம் குளிகை காலம் சரிபார்த்துக் கொண்டு அப்புறம் கடிக்கிற குட்டி முதலை' என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டு சிரித்தான் சத்தியமூர்த்தி. மல்லிகைப்பந்தல் கல்லூரியைப் பற்றி நாடு முழுதும் நல்ல பெயர் பரவி யிருந்தாலும் அங்கேயும்

உள் அரசியல் நிறைந்திருப்பது அங்கு வந்து சேர்ந்த முதல் தினமாகிய அன்றே சிறிது சிறிதாகப் புரிந்தது அவனுக்கு. அலைகளே இல்லாத சமுத்திரம் எங்குமே இருக்க முடியாதென்று முடிவுக்கு வந்தான் சத்தியமூர்த்தி. இடம் காற்று முதலியவற்றுக்கு ஏற்பச் சிறிய அலைகளாகவோ பெரிய அலைகளாகவோ எப்படியும் அலைகள் இருப்பதுதான் கடலின் இலட்சணம் போலும் என்று எண்ணி மன அமைதி பெற முயன்றான் அவன். 'முதல்தரமான மனிதர்கள் கருத்துக்களைப் பற்றிப் பேசி விவாதிக்கிறார்கள்.. சாதாரணமான மனிதர்கள் நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசி விவாதிக்கிறார்கள். மட்டரகமான மனிதர்கள் மட்டுமே தனி நபர்களைப் பற்றிப் புறம் பேசி விவாதிக்கிறார்கள்' என்று ஒரு சீனப் பழமொழி உண்டு. சத்தியமூர்த்தி இப்போது அந்தப் பழமொழியை நினைவு கூர்ந்தான். சமூகத்தில் ஒவ்வொரு மனிதனும் இன்னொரு மனிதனைப் பற்றிச் சுதந்திரமாகப் பேசி விமர்சனம் செய்யும் உரிமை தனக்கு வேண்டுமென்று ஆசைப்படுகிறான். அதே சமயத்தில் தன்னைப் பற்றிப் பிறர் அப்படி விமர்சனம் செய்ய ஆசைப்படுவதை மட்டும் அவனால் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை. பிறரைப் புரிந்து கொள்வதையும், பிறரைப் பற்றிச் சிந்திப்பதையும் சத்தியமூர்த்தி ஒருபோதும் வெறுத்ததில்லை. அவனே பலரைப் பற்றி அப்படிப் புரிந்து கொள்ள முயன்று சிந்தித்திருக்கிறான். ஆனால் ஒவ்வொருவரையும் பற்றி விமரிசிக்க இன்னொருவர் தங்களுடைய சொந்த விருப்பு வெறுப்புக்களைத் தராசாக ஆக்கியிருப்பது எவ்வளவுக்கு நல்லது என்று விளங்கிக் கொள்ள முடியாமல் தயங்கினான் அவன். சொந்த விருப்பு வெறுப்புக்களை அளவு கருவியாகக் கொண்டு நிறுக்காமல் சம்பந்தப்பட்டவர்களின் குணங்களையோ குணக்கேடுகளையோ நிறுத்து விமர்சனம் செய்வதை அவன் வெறுப்பதில்லை. ஒவ்வொரு மனிதனையும் பற்றிச் சமுதாயமே இப்படி ஒரு விமரிசனத்தைத் தயாராக வைத்திருக்கும். யாரும் அதைத் தவிர்க்க முடியாது. அதிலிருந்து தப்பவும் முடியாது. சிலரைப் பற்றி ஒரு சமுதாய விமர்சனமும் வெளிவராது. வேறு சிலரைப்பற்றி ஏதாவது ஒரு சமுதாய விமர்சனம், மொத்தமாக வெளிவராமலிராது. மனிதனை, நல்லவனாகவோ கெட்டவனாகவோ தீர்மானம் செய்கிற உரிமை நல்லதும் கெட்டதும் தன்னிடமே உள்ள ஒரு தனி மனிதனிடம் விடப்படுவதைக் காட்டிலும் பல தனி மனிதர்கள் சேர்ந்த சமூகத்தினிடம் விடப்படுவது உத்தரவாதமுள்ள காரியமென்று தோன்றியது. பொருளாதார விரிவுரையாளர் பேசிய பேச்சுக்கள், சொந்த விருப்பு வெறுப்பிலும் விரக்தியிலும் பேசப் பெற்றதாகப்படவே அதை அப்படியே எடுத்துக் கொள்ளலாகாது என்று எண்ணிப் போகப்போக இவற்றை எல்லாம் புரிந்துகொள்ள வாய்ப்பு நேரும்' என்பதாக நம்பினான் சத்தியமூர்த்தி. தன்னைப் போலவே புதிதாக வந்திருப்பவரும் பயந்த சுபாவமுள்ளவராகத் தோன்றுகிறவருமாகிய, 'பாடனி' விரிவுரையாளர் ஒரு மூலையில் 'புது மணப் பெண்' போன்ற வெட்கத்தோடு கூசிக்கொண்டே உட்கார்ந்து 'ப்ளாண்ட் அனடமி' என்ற 'பாடனி' புத்தகத்தைக் கர்ம சிரத்தையாகப் படிப்பது போல் பாவித்துக் கொண்டு அதன் மூலம் மற்றவர்களிடமிருந்து தம்மைப் பிரித்துக் காப்பாற்றிக் கொண்டவராக ஒதுங்கி இருப்பதைச் சத்தியமூர்த்தி கவனித்தான். இன்னும் நாலைந்து விரிவுரையாளர்கள் ஒரு பக்கம் கூட்டமாகச் சேர்ந்து உட்கார்ந்து கொண்டு 'கோடை விடுமுறைக்குப் பின் பிரின்ஸிபால் திடீரென்று ஏன் தாடி வளர்க்கத் தொடங்கினார்?' என்பதைப் பற்றி அரட்டையும் சிரிப்புமாக வம்பளந்து கொண்டிருந்தார்கள். அந்தப் பகுதியிலிருந்து குபீர் குபீரென்று எழும் சிரிப்பலைகளால் கட்டிடமே அதிர்ந்தது.

''எதை வளர்க்கலாம்? எதை வளர்க்கலாம்? என்று யோசித்துப் பார்த்தபின் முடிவில் தன்னால் எதையுமே வளர்க்க முடியாதென்று உறுதியாகத் தெரிந்து கொண்டு தாடியையாவது வளர்க்கலாம் என்று வளர்க்கத் தொடங்கி விட்டார் போலிருக்கிறது. 'பெர்ஸனாலிட்டி' இப்போ முன்னைவிடக் கொஞ்சம் 'இம்ப்ரூவ்' ஆகி யிருக்கு. 'மேஜிக்' செய்ய வருகிற நவீன மந்திரவாதி மாதிரி இப்போ 'முதலை'யைப் பார்த்தாலேபயமாயிருக்கு சார்..'' என்றுவிமர்சனம் செய்துகொண்டிருந்தார் ஒரு விரிவுரையாளர். சத்தியமூர்த்திக்கும் இந்த விமர்சனத்தைக் கேட்டுச் சிரிப்பு வந்தது. அதே சமயத்தில் 'நாளைய சமூகத்தை நன்றாக உருவாக்க வேண்டிய ஆசிரியர்கள் இப்படி வம்பும் அரட்டையுமாகத் தனி மனிதனின் பலவீனங்களைப் பற்றி விமரிசனம் செய்து தங்கள் நேரத்தைப்பாழாக்கிக் கொண்டிருக்கிறார்களே' என்று வேறு விதமாக மாற்றிச் சிந்தித்தபோது வேதனையாகவும் இருந்தது. (தொடரும்)

## பெட்டைக் கோழி பறக்காதது ஏன்?

பெட்டைக் கோழியைப் பார்த்திருப்பீர்களே. அழகான அகலமான இறக்கைகள் இருந்தும்கூட அவைகளால் பறக்க முடிவதில்லையே, அதன் காரணம் தெரியுமா உங்களுக்கு? தெரியாதல்லவா? அப்படியானால் மொராக்கோ தேசத்துப் பாட்டிமார்கள் தங்கள் பேரன்களுக்குச் சொல்லும் இந்தக் கதையைப் படியுங்கள்.

ரொம்ப ரொம்ப வருஷங்களுக்கு முன்னாலே பறவைகளெல்லாம் கூடி மெக்காவுக்கு யாத்திரை போவதென்று தீர்மானித்தன. மெக்கா என்பது முகம்மதியர்களின் புண்ணிய ஸ்தலம். நபிகள் நாயகம் பிறந்த இடம் மெக்கா. இந்த நீண்ட புனிதமான பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் நடந்தன. எந்தெந்த நகரங்களின் மீதாகப் பறந்து செல்ல வேண்டும் என்பதையெல்லாம் முன்கூட்டியே திட்டமிட்டு வைத்தன பறவைகள். எல்லாம் முடிந்தது... "ஆண்டவனின் விருப்பம் நல்லபடியாக இருக்குமானால் நாம் நாளைக்குக் கிளம்பலாம்" என்று மனநிறைவு கொண்டன பறவை இனங்கள்.

ஆனால் அகம்பாவம் கொண்ட பெட்டைக் கோழிகள் ஆண்டவனை விடத் தாங்கள் உயர்ந்தவர்கள் என்ற கர்வத்தில் "ஆண்டவன் விரும்பினாலும் விரும்பா விட்டாலும் நாம் நாளைக்குக் கிளம்பத்தான் போகிறோம்" என்று வீராப்புப் பேசின.



மறுநாள் பொழுது புலர்ந்தது. குறிப்பிட்ட நேரத்தில் பிரயாணத்துக்குப் பறவைகள் அணி வகுத்து நின்றன. பெட்டைக் கோழிகளும் கூட நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு பறப்பதற்குத் தயாராக நின்றன. உயரே கிளம்புவதற்கான அறிவிப்புக் கொடுக்கப்பட்டது. எல்லாப் பறவைகளும் தங்கள் இறக்கைகளை விரித்தபடி ஜிவ்வென்று ஆகாயத்தில் எழும்பின. ஆனால் பெட்டைக் கோழிகளோ? ஐயோ பாவம்! அவைகளின் அழகிய இறக்கைகள் உடலின் பக்கத்தோடு ஒட்டிக் கொண்டிருந்தன. அவற்றை அசைக்கவே முடியவில்லை. அவைகளால் பறக்கவே முடியவில்லை. மேலே மேலே ஆகாயத்தில் அழகாகப் பறந்தபடி மெக்கா நகரை நோக்கிச் செல்லும் மற்ற பறவைகளைப் பார்த்துக் கொண்டு நின்றன கோழிகள். அவைகளின் முட்டாள்தனமான தற்பெருமைக்குத் தண்டனை கிடைத்துவிட்டது.

பெட்டைக் கோழி பறக்கும் தன்மையை இழந்ததற்காக மொராக்கோ தேசத்தில் வழங்கும் இந்தக் கதையின் கர்வம் கொள்ளக்கூடாது என்பதை விளக்குகிறதல்லவா? இதோ அருகில் நிற்கிறானே ஒரு மனிதன், அவனைப் பார்த்தால் சென்னையில் ரிக்ஷா இழுப்பவனைப் போலிருக்கிறதல்லவா? ஆனால் இந்த மனிதன் மொராக்கோ தேசத்தில் உள்ள 'ஸைத்தா' என்ற ஊரைச் சேர்ந்தவன். அங்கு தண்ணீருக்கு ரொம்ப ரொம்பப் பஞ்சம். ஆகவே ஆட்டுத் தோலால் ஆன பையில் குடி தண்ணீரைச் சுமந்து தெருவில் விற்றுக் கொண்டு போவார்கள். தண்ணீர் வேண்டுவோர் அவனிடம் காசு கொடுத்து ஒரு குவளை வாங்கிக் குடிப்பார்கள். அவன் உடம்பில் எத்தனை விதமான குவளைகளைத் தொங்கவிட்டுக் கொண்டிருக்கிறான் பார்த்தாயா? சின்னக் குவளை, குட்டிக் குவளை, நீண்ட குவளை—இப்படிப் பல்வேறு திறுசுகளில் மெடல்களைப் போல உடல் எங்கும் குவளைகளை அணிந்து கொண்டிருக்கிறானில்லையா? இவனைப் பார்த்தால் நம் ஊர் ரயில்வே ஸ்டேஷனில் தள்ளு வண்டியில் தண்ணீர்ப் பானையுடன் தம்ளர்களில் உன் தாகத்துக்குத் தண்ணீர் தருவதற்கு வருவானே ஒருவன் அவன் நினைவு வருகிறதல்லவா? உங்கள் ஆல்பத்துக்கு, மொராக்கோ தேசத்து நடமாடும் தண்ணீர்ப் பந்தலான இந்த மனிதனையும் சேர்த்துக் கொள்ளுங்கள்.



# உலகத்தின் கதை 5

## 100,000,000 ஆண்டுகளுக்கு முன்னால்!

'ஆம்பிபியன்கள்' என்ற நீரிலும் நிலத்திலும் வாழ்ந்த ஜீவராசிகளின் காலத்தின் ஒரு நிலையில் பூமி மெல்ல மெல்ல உஷ்ணமடையலாயிற்று. சதுப்பு நிலங்கள் காய்ந்து கட்டாந் தரையாக ஆரம்பித்தன. நீரில் வாழ்ந்த ஜீவராசிகள் இந்த நிலையில் தங்கள் பெரும் பொழுதை நிலத்திலேயே கழிக்கலாயின. ஆம்பிபியன்களின் இடத்தை ஊர்ந்து செல்லும் ஜீவராசிகள் (ரெப்டைல்ஸ்) ஆக்ரமித்துக் கொள்ளலாயின. பல்லிகளைப் போன்ற ராட்சச ஜந்துக்கள் தோன்றலாயின. இவைகளில் சில ஐம்பதடி உயரங்கூட இருந்தன. இவைகளில் பெரும்பான்மையான மிருகங்கள் தண்ணீரின் தேவையில்லாமல் தரையிலேயே வாழ்ந்தன. ஆனால் இவைகள் கனமான ஓட்டோடு கூடிய முட்டைகளையிட்டுக் குஞ்சு பொரித்தன. இந்த வகைப் பிராணிகளில் அதிபயங்கரமானவை 'டினோஸார்' என்பவைதான். இந்த நிலையில் பூமியின் நடுவில் கொதித்துக் குமுறிக் கொண்டிருந்த உலோகக் குழம்புகள் ஆங்காங்கே பூமியின் மேல் பரப்பை உடைத்துக் கொண்டு பயங்கரமான எரிமலைகளாக நெருப்பைக் கக்கி வழியத் தொடங்கின. ஆவேசமான எரிமலைக் குமுறல்களினால் ஊர்ந்து செல்லும் ஜீவராசிகளின் காலம் முடிவுற்றது. உடலில் ரோமத்தோடு கூடிய முட்டையிடும் ஜந்துக்கள் மட்டும்தான் தப்பிப் பிழைத்தன. இவைகளே பின்னால் குட்டி போட்டுப் பால் கொடுக்கும் மம்மல்களாயின.

சுமார் 100,000,000 வருஷங்களுக்கு முற்பட்டதாகக் கருதப்படும் 'ரெப்டைல்ஸ்'களின் காலத்தில் வாழ்ந்த சில ஜீவராசிகளையே இங்கு காணுகிறீர்கள். (1) நத்தை, ஊஞ்சல் போன்ற 'அம்மானிட்' என்றழைக்கப்படும் மொலுஸ்குகள். (2) இந்தக் காலத்தில் வாழ்ந்த 'ஆர்கியோப் டரிக்ஸ்' என்னும் முதல் பறவை. இருபது முதுகெலும்போடு கூடிய நீண்ட வாலிருந்ததாம்- இதற்கு (3) தாவரங்களைத் தின்று உயிர் வாழ்ந்த 'பிராண்டாஸார்' என்ற மிகப் பெரிய



'டினோஸார்'. பிரம்மாண்டமான இந்த ராட்சத ஜந்து நீரிலுள்ளும் நிலத்திலுமாக வாழ்ந்தன. பார்ப்பதற்குப் பீதியை உண்டாக்கும் தோற்றத்தோடு கூடியவை. (4) முதுகின் நெடுகிலும் பெரிய முட்களோடு கூடிய 'ஸ்டெகோஸார்' என்ற விநோதமான பிராணி. யானையின் பாதங்களையும் அதைவிடப் பெரிய அளவிலும் இருந்தது இந்தப் பிராணி. (5) மீன்கள் மற்றும் ஊர்வனவற்றை உண்டு உயிர் வாழ்ந்த கடல் வாழ் 'ரெப்டை'லான 'பிளிஸியோஸார்'. (6) வௌவாலைப் போன்ற உருவமுடன் கூடிய 'டெர்ரோடாக்டில்'. பறவையைப் போன்ற தலையும் அலகில் பற்களையும் பாருங்கள். (7) மாமிசம் சாப்பிடும் ஆதி மம்மல் இனத்தைச் சேர்ந்த 'குரோடென்ட்' என்னும் பிராணி.


1


2


3


4


5


6


7



# வெனிஸ் ஓவியன்

சோமு

இத்தாலி தேசத்தின் எழில் நகரங்களிலே, தெப்பத் திருநகரமாகத் திகழ்ந்து தண்ணீருக்குள் மிதந்து கொண்டிருக்கும் அந்த அற்புத வெனிஸ் நகரத்தின் புனல் வீதிகளிலே, எங்களுடைய 'கண்டோலா'ப் படகு மிதந்து சென்று கொண்டிருந்தது. அப்போது முழு நிலவு பொழியும் பௌர்ணமிக் காலம். எங்களுடைய படகைச் சுற்றி எங்கு பார்த்தாலும் நூற்றுக் கணக்கான சிறு சிறு படகுகள் மிதந்து கொண்டிருந்தன. ஆனால் அவற்றில் அமர்ந்து சென்றவர்கள் எங்களைப் போன்ற யாத்திரிகர்கள் இல்லை. வெனிஸ் நகரத்தின் இன்பத்தை அனுபவித்துக் கொண்டே தங்கள் காதலியர்களோடு இன்ப வெள்ளத்தில் மிதக்கும் காதலர்கள் அவர்கள்!

இத்தாலி தேசத்தின் பல பகுதிகளிலிருந்தும் வந்தவர்கள்.

நூற்று ஐம்பது கால்வாய்களே அந்த

ஒரு சிறுகதை

நகரத்தின் நூற்று ஐம்பது தெருக்கள்! வீடுகள் அத்தனையும் தண்ணீருக்குள் நனைந்துகொண்டே நின்று வர்ண விசித்திரமான விளக்குகளோடு எங்களை நோக்கிக் கண் சிமிட்டின. ஒவ்வொரு வீட்டு வாசலும் ஒரு படித்துறையாகக் காட்சி தந்தது! அந்தப் படித்துறையே ஒரு பரிசல் துறையாகவும் விளங்கியது! ஏனென்றால் வீட்டு மக்கள் வெளியே போய் வருவதற்கான படகுகள் ஒவ்வொரு படிக்கட்டிலும் கயிற்றினால் கட்டப்பட்டு அலை வீச்சிலே ஆடிக் கொண்டிருந்தன! எங்கள் படகோட்டி ஏதேதோ ஆழ்ந்த காதல் உணர்ச்சியோ



வெளியிடும் கண்டோலாப் பாட்டுக்களைப் பாடிக்கொண்டே படகைச் செலுத்தினன்.

குளிர்ந்த நிலவும், குளுகுளு என்ற கடற்காற்றும், சுற்றிலும் பிரளயமாக நின்ற தண்ணீரும் எங்களைச் சூழ்ந்து மிதந்து கொண்டிருந்த காதலர்களின் வண்ணச் சிறு படகுகளும், ''காண்டோலியர்ஸ்'' என்று அழைக்கப்படும் அந்த விசித்திரமான படகோட்டிகள் பாடிய இனிமையான காதற் பாட்டுக்களும் சேர்ந்து அப்படியே எங்கள் இதயத்தை மயக்கின! மது பானம் என்றல் நாவினல் சுவைத்து உட்கொள்ளுகிற ஒரு திரவப்பொருள் மட்டும் தானு? இல்லை. கண்ணினல் கண்டும், காதினல் கேட்டுக் கொண்டும் அப்படியே சித்தமெல்லாம் மயங்குகிற ஒரு மதுபான அனுபவமாக இருந்தது அந்த நிலவு யாத்திரை!

படகோட்டி இப்போது பேச ஆரம்பித்தான்:

''இதோ! இந்த மாளிகை தான் நெப்போலியனுடைய அரச இல்லம். இதுதான் மகா கலைஞன் வெரோனீசி உருவாக்கி நிறுத்திய கலை நிலையம். இதோ இந்த மாளிகையிலே தங்கியிருந்து கொண்டுதான் 'வாக்னர்' தமது அற்புதமான இசைப் படைப்புகளை ஆக்கித் தந்

ரெக்ஸ்

அருந்தி...




இலவசம்! ரெக்ஸ் ஸ்குவாஷ் சிவப்பு மற்றும் பொன்னிற மூடிகள் ஆறு தருவோருக்கு அழகியதோரு ரெக்ஸ் ப்ளோ டிஸ்பென்ஸர் தரப்படும்.

குளுமையுடன்

இருங்கள்



கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட.

CPY-18 TAM

தார். இதோ இங்கேதான் புகழ் பெற்ற ஓவியன்....''

படகோட்டியின் பேச்சு வேகமாக மேலே மேலே சென்று கொண்டிருந்தது. வெனிஸ் நகரத்திலே பிறந்து வளர்ந்து வாழ்ந்து மடிந்த பல்லாயிரம் கலைஞர்களையும் அவர்களுடைய கலைப் படைப்புக்களையும் பற்றி வர்ணித்துக் கொண்டே சென்றான் அவன். சிந்தனையை மயக்குகிற எழிற் பானத்தின்மோனப்போதையிலே மயங்கியிருந்த எங்களுக்குப் படகோட்டியின் பேச்சு ஏதோ ஒரு சொப்பனத்திலிருந்து கேட்பது போல இழைந்து கொண்டிருந்தது. திடீரென்று பேச்சை நிறுத்தினான் அவன்!

''நண்பர்களே! இதுவரை நான் சொல்லி வந்தது எல்லாம் வரலாற்றுச் செய்திகள். இப்போது உங்களுக்கு ஒரு கதை சொல்லட்டுமா?''

கதையென்றதும் நாங்கள் ஒரு கால்வாயிலிருந்து இன்னொரு கால்வாய்க்குத் திரும்பும் அந்தப் படகைப் போல இருக்கையிலிருந்து திரும்பி அந்தப் படகோட்டியைப் பார்த்தோம். என்னோடு இருந்த ஆஸ்திரேலிய நண்பர் ஒரு பெரிய ஆராய்ச்சியாளர். அவர் கேட்டார்:

''கதையென்றால் சரித்திர நிகழ்ச்சியா? அல்லது உன்னுடைய கற்பனையா?''

படகோட்டி எங்களைப் பார்த்துச் சிரித்தான். பிறகு கேட்டான்:

''உங்களுக்குச் சரித்திரம் பிடிக்குமா அல்லது கற்பனை பிடிக்குமா?''

என்ன மறுமொழி சொல்வது என்று நாங்கள் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டிருந்தபோது என்னுடைய ஐரோப்பிய நண்பரின் மனைவி சொன்னாள்:

''கதையைச் சொல்லு. அது சரித்திரமா அல்லது சொந்தக் கற்பனையா என்பதைப் பிறகு எங்களுடைய தீர்மானத்துக்கு விட்டு விடு! கதை முடிந்ததும் அதை நாங்களே கணித்துக் கொள்கிறோம்!''




பெப்லாடியோ என்ற அந்த வெனிஸ் ஓவியன் அந்த நகரத்து மக்களுக்கு ஒரு பெரிய புதிராக இருந்தான்.

சித்திரம் வரைகிற கலைஞர்கள் எல்லாம் தங்களைச் சுற்றி அலைய வருகிற மனித சமூகத்தினிடத்தில் எத்தனை வாஞ்சையோடு பழகுகிறார்கள்! தாங்கள் சந்திக்கும் ஒவ்வொரு மனிதரும் அவர்களுக்கு ஒரு மன எழுச்சி அல்லவா! மனித மனத்தின் ஆழத்திலே மறைந்தும் மங்கியும், தெரிந்தும் தெரியாமலும், பாதி வெளிப்படையாகவும், பாதி மறைமுகமாகவும் காட்சி தருகிற எழில் உணர்ச்சிகளையும், பாசங்களையும், ஆசைகளையும், வேதனைகளையும், இன்ப நினைவுகளையும் துயரங்களையும், பெருமிதங்களையும் உவகைகளையும், நாட்டங்களையும் — மனித இதயத்தின் கோடிக் கணக்கான சலனங்களையும் இறலிலே பிடித்து வர்ணத்திலே அடைத்துச் சுவர்களிலும் பலகைகளிலும் நிலைநிறுத்தும் கலையிலே, சித்திரக்காரர்களுக்கு எண்ணம் வழங்குகிற வற்றாத ஊற்றுக்கள் அல்லவா மக்கள் சமூகம்! இந்த உணர்ச்சிக் கருவூலத்தைக் காணும்போதெல்லாம் எத்தனை ஆர்வத்தோடும் ஆவலோடும் கூர்மையாக விழியைத் தீட்டிக் கொண்டு ஆராய்ந்து பார்ப்பார்கள் ஓவியர்கள்! ஆனால் பெப்லாடியோ அப்படி இல்லை. அவன் தன்னுடைய கண்களையே திறக்க மாட்டான்.

பெப்லாடியோவின் மகள், ஜெனிகா தந்தையின் கையைப் பற்றிக்கொண்டு சொல்வாள்:

''அப்பா! இப்போது நாம் நிலவு விடுதிக்குள்ளே நுழைகிறோம். நம்மைச் சுற்றி நூறு நூறு காதலர்கள் கூடி நின்று நடனம் ஆடுகிறார்கள். அப்பா! கண்ணைத் திறந்து பாருங்கள்! ஆயிரம் விளக்குகள், ஆயிரம் நிலவுகளாக ஒளி வீசிக் கொண்டிருக்கின்றன. இதயத்திலே மதுவைக் கொண்டு கொட்டுகிற இன்ப இசை எத்தனை சுகமாக வந்து கொண்டிருக்கிறது! அதோ பாருங்கள்! இசையின் தெளிவுக்கும் வளைவுக்கும் தக்கவாறு காதலர்கள் எல்லாம் தங்கள் தங்கள் காதலிகளைக் கரம் பற்றி ஆலிங்கனம் செய்தவாறு நடனம் புரிகிறார்கள் அப்பா! பார்த்தீர்களா, அப்பா! அப்பா! கண்ணைத் திறந்து கொண்டு நடந்து வாருங்கள், மெதுவாக நடந்து வந்து இங்கே உட்கார்ந்து கொண்டு, உட்கார்ந்து கொண்டு — அப்பா, கண்ணைத் திறவுங்கள் அப்பா!''

அறுபத்தைந்து வயதுக்கு மேல் இருக்கும் அந்த முதிய ஓவியனுக்கு, காலம் தப்பிப் பிறந்த அவனுடைய மகள் ஜெனிகாவுக்கு இருபது வயதுகூட இராது. அலை வீசிக் கொண்டு நிற்கும் ஓர் உல்லாசத் தடாகத்தைப் போன்று பருவமும் அழகும் மேனியெல்லாம் பொங்கிக் குலுங்கிக் கொண்டிருந்த எழிற் கன்னி அவள். அவளுடைய தாயார்? சித்திரக் கணவனையும் அழகுக் குமரியையும் இந்தத் தெப்பத் திருநகரத்திலே மிதக்க விட்டு விட்டு மேலுலகம் சென்று மறைந்து விட்டாள் அவள்!

''கண்ணைத் திறந்தீர்களா அப்பா! அதோ பாருங்கள்! டானியோவும் அவனுடைய காதலி தெரிஸாவும்! அதோ பெர்னார்டோ! அவனோடு ஆடுபவள் லிலியா! இதோ நமக்கு அருகிலே உருஸியோ. அவனுடைய மிடுக்கான ஆட்டத்திலே பின்னிக் கொண்டு துவள்கிறாள் டயானா. அப்பா! இதையெல்லாம் பாருங்கள் அப்பா! 'இன்ப உலகம்!' என்ற உங்களுடைய சித்திரத்துக்கு இவர்கள் எல்லோருந்தானே எண்ணம் வழங்கவேண்டிய, கருத்துத் தரவேண்டிய பாத்திரங்கள்!''

பெப்லாடியோ கண்களை மெதுவாகத் திறந்தான். சிரித்தான். மறுபடியும் கண்களை மூடிக்கொண்டு விட்டான்!

''மகளே! என்ன சொல்கிறாய்? என்னுடைய இன்ப உலகத்துக்குரிய கதா பாத்திரங்களா இவர்கள்? என்ன சொல்கிறாய் நீ!''

மறுபடியும் கிழவன் முறுவல் செய்தான்!

''இந்த ஒரு நடனத் துணுக்கு முடிகிற வரையாவது மரியாதைக்காக இங்கே இருப்போம்!'' என்றாள் ஜெனிகா.

''சரி!'' என்று சிரித்தான் கிழவன்.

அந்த நடனத் துணுக்கு முடிந்ததும் அங்கிருந்து கிளம்பினார்கள் தந்தையும் மகளும்.

வெனிஸ் நகரத்தில் உள்ள நூற்றுக்கணக்கான இரவு விடுதிகளிலே ஒன்றிலிருந்து அடுத்ததற்குச் சென்றார்கள் தந்தையும், மகளும்!

"அப்பா! இதுதான் 'முழு நிலா இல்லம்' என்ற கனவு உலகம்! 'இந்த வெனிஸிலேயே மிகப் பெரிய கேளிக்கை நிலயம்' என்று நீங்களே ஒரு காலத்தில் பெருமையோடு பேசுவீர்களே. இந்த இன்ப நிலயத்திலாவது உங்களுடைய 'இன்ப உலகம்' என்ற ஓவியத்துக்குச் சில கதா பாத்திரங்கள் அகப்படமாட்டார்களா? கண்ணைத் திறந்து பாருங்கள், அப்பா!"

பெலாடியோ தனது அகன்ற பெரு விழிகளை ஒரு விநாடி திறந்தான்! பதினாயிரம் விளக்குகள் ஒரே பட்டப் பகலாக எரிந்து கொண்டிருந்த காரணத்தாலோ என்னவோ கண்கள் கூசுவது போல் இமைகளைப் பாதி திறந்தும், பாதி இடுக்கிக் கொண்டும் பார்த்தான். பார்வை கூசியது. இமைகளை மூடிக் கொண்டான். கூச்சம் அந்த விளக்குகளின் வெளிச்சத்தினாலா அல்லது அந்தக் காட்சியே அவனுக்குக் கண் கூசியதா?

"அப்பா! அதோ யாரோ ஒருவன் நடனம் ஆடுகிறான். அவனோடு—"

"மகளே! என்ன சொல்கிறாய்?"

"அப்பா! எத்தனை இன்பமாக ஒலிக்கிறது இந்த இங்கிதமான இசை! அதோ பாருங்கள்! இருவர் இருவராகக் கை கோத்துக்கொண்டு நூறு நூறு இளங் காதலர்கள்...."

"மகளே! இந்த விளக்கு வெளிச்சம் கண்ணைக் குத்துகிறதே அம்மா! இங்கேயா வந்து உட்கார வேண்டும் என்று சொல்லுகிறாய் இந்தக் கிழவனை?"

தந்தையும் மகளும் அடுத்த விடுதியை நோக்கி நடந்தார்கள்!




பெலாடியோ என்ற ஓவியன் வெனிஸ் மக்களுக்கு ஒரு புதிராக இருந்தான். யாராலும் அவனைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

இத்தாலி தேசத்தின் முக்கிய நகரங்களிலேயெல்லாம் பிரபுக்களின் மாளிகைகளிலும், நகரத்துக் காட்சி நிலயங்களிலும், வெனிஸ் வணிகர்களின் கலைக் கூடங்களிலும் எங்கே பார்த்தாலும் பெலாடியோ வரைந்த ஒப்பற்ற ஓவியங்கள் அமர சௌந்தரியத்தோடு உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வர்ணங்களிலே காட்சி தந்தன! எத்தனை சித்திரங்கள்! எத்தனை ஆயிரம் எழில் ஓவியங்கள்! ஆகா! மரணத்தை நோக்கி நடந்து செல்லும் மனிதன் நிலையான அமர வாழ்வையே தன் கரங்களிலே பிடித்து, இறகிலே கொடுத்து, வர்ணங்களிலே மடக்கிச் சுவர்களிலே நிலை நிறுத்திவிட்ட அற்புதம் அது! நிலையற்ற காலத்தை நிலைத்து நிற்கும்படி இறுக்கிப் பிணைத்து இருத்திவிட்டானே பெலாடியோ! ஆம்! அப்படித்தான் சித்திர ரசிகர்கள் அவனுடைய கலையை வியந்து பாராட்டினார்கள்! அப்படிப்பட்ட அதிசய ஓவியன், அவனா, இப்போது கண்களைத் திறக்காமல், மனித உருவங்களையே கண் திறந்து பார்க்காமல் அழகையும் கேளிக்கைகளையும் கண்டு இமைகளை மூடிக் கொள்கிறான்? என்ன ஆச்சரியம்!

அழகிலேயே நினைத்து, அழகிலேயே மூழ்கி, மூழ்கி, அழகிலேயே யாத்திரை செய்து வந்த பெலாடியோ இப்போது ஏன் இப்படி மாறிவிட்டான்?

நினைவு தெரிந்த நாளிலிருந்து அயரத்தையே அறியாதவன் பெலாடியோ! அவனுடைய இளம் பிராயத்தில் அவன் சுற்றாத ஊர் இல்லை. அவன் புகுந்தறியாத விடுதி கிடையாது! நாற்பத்தைந்து வயது வரை கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்று எங்கெங்கோ சுற்றித் திரிந்தான்; வரைந்த சித்திரங்களுக்கு ஒரு கணக்கு இல்லை; எழுதி முடித்த ஓவியங்கள் எண்ணில் அடங்காதவை! கடைசியில் இத்தாலி தேசத்தின் எங்கோ ஒரு மூலையிலே, ஏதோ ஒரு சிறு கிராமத்திலே ஒரு பெண்ணைச் சந்தித்தான்! இது வரை அவன் சந்தித்த பெண்களைப் போல் இல்லை அவள்! நகரங்களின் மிடுக்கும், பட்டணங்களின் படபடப்பும், செயற்கையின் மேனிப் பூச்சும், சிங்காரச் சிரிப்பும், குலுக்கு நடையும், தளுக்குப் பேச்சும் — எதுவுமே இல்லாத ஒரு நாட்டுப்புறத்துப் பெண் அவள்! நாற்பத்தைந்து வயது ஓவியன் இப்போது அவளுடைய சாந்தமான அழகைக் கண்டு மோகித்தான். மோகித்ததோடு நிற்கவில்லை. அவளைத் திருமணமே செய்து கொண்டான்! திருமணம் செய்ததோடு நிற்கவில்லை. தனது வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொண்டு, தனது சொந்த ஊரான வெனிஸுக்கே அவளைத் தன்னோடு அழைத்துக் கொண்டு வந்தான். ஜெலினா பிறந்தாள்! இறகினால் வரைந்து பார்க்கிற அழகெல்லாம் ஒன்று இரண்டு வடிவம் எடுத்து வந்தது போல் சுந்தரக் குழந்தையாகப் பிறந்தாள் ஜெலினா! சில ஆண்டுகள் மகளோடும் மனைவியோடும் வாழ்ந்தான்! பிறகு, அந்த வாழ்க்கையிலும் ஒரு சலிப்பு! மறுபடியும் ஊர் சுற்ற ஆரம்பித்தான் பெலாடியோ! பத்துப் பதினைந்து ஆண்டுகள் எங்கெங்கோ சுற்றினான்! அழகைத் தேடி, ஓவியத்துக்குக் கருத்து நாடி, ஐரோப்பா முழுதும் திரிந்தான்! மனைவியும் மகளும் வெனிஸ் நகரத்தில் பெலாடியோவின் புகழையும், ஓவியக் கீர்த்தியையும் தேச யாத்திரிகர்கள் சொல்லக்கேட்டு அந்த மகிழ்ச்சியிலே திளைத்து, அவ்வப்போது அவன் யாத்திரிகர்களிடம் கொடுத்தனுப்பும் விலைமதிப்பற்ற நவரத்தினங்களைப் பார்த்துப் பார்த்து, அவன் அனுப்பி வந்த பொற்காசுகளைக் கொண்டு வாழ்ந்து வந்தார்கள்!

"இவனுக்கு எப்போதுதான் பொறுப்புணர்ச்சி உண்டாகி வீடும் குடித்தனமுமாக இருக்கப் போகிறான்!" என்று நண்பர்கள் பேசிக் கொண்டார்கள்.

"எங்கே இருந்தாலும் குடும்பத்துக்குப் பணமும் வெகுமதியும் அனுப்பத் தவறுவதில்லையே!" என்பார்கள் சிலர்.

"மகளிடம் அத்தனை பாசம்! காலம் தப்பிப் பிறந்த பெண் குழந்தையிடம் அவனுக்கு அத்தனை நேசம்! நவரத்தினங்களும், முத்துமாலைகளும் நூற்றுக்கணக்கில் வந்து வந்து, அவனுடைய வீட்டில் குவிந்தவண்ணமாக இருக்கின்றனவே!" என்பார்கள் சிலர்.

ஊரும் உலகமும் இப்படிப் பேசிக் கொண்டது! மகள் ஜெனிகாவும் விவரம் தெரியாத வயதானதால் கவலையின்றி வெகுமதிப் பொருள்களோடு விளையாடிக் கொண்டே, கோலாகலமாக வளர்ந்தாள்! ஆனால் மனைவி?

தன்னையும் தனது ஒரே மகளையும் விட்டுப் பிரிந்து, தேசாந்திரியாகச் சுற்றி அலையும் கணவனைப் பற்றி, நாள்தோறும் வெனிஸ் நகரத்துக்கு வரும் யாத்திரிகர்கள் ஒரே கீர்த்திப் புராணமாகப் படிப்பதைக் கேட்டுக் கேட்டு முதலில் அவள் மகிழ்ந்தாள்; பெருமைப்பட்டாள். ஓரளவு செருக்கும் அடைந்தாள். ஊரில் உலகத்தில் இல்லாத ஒரு கணவன் தனது மணவாளன் என்று உவகை கொண்டாள். ஆனால் நாளாக, நாளாக?

பெலாடிபோலோவிடமிருந்து அடிக்கடி செய்தி வரும். யாத்திரிகர்கள் அவனிடமிருந்து அருமை மகளுக்காகக் கொண்டு வருகிற விலை மதிப்பற்ற பரிசுகளோடு, எண்ணற்ற பொற்காசுகளும் வந்து சேரும்! ஆனால் பெலாடிபோலோவின் மனைவியின் உள்ளத்தில் இந்தப் புகழையும், இந்தப் பரிசுகளையும், இந்தப் பொற்காசுகளையும் கடந்து, ஒரு பெரிய ஏக்கம்! ஒரு தாபம் படர்ந்தது!

ஆம்; பெலாடிபோலோவின் மனைவி வேறு எதையும்விட, வேறு எந்தச் சிறப்புக்களையும் செல்வங்களையும்விட, ஒன்றே ஒன்றைத்தான் மதித்தாள். அது அவளுடைய கணவனின் அன்பு. அவனுடைய பாசம். அவனுடைய இதயம் இனிக்கும் உறவு!

காதல் வேண்டாம். இன்பமொழிகள் தேவையில்லை. 'மலரும் மணமும்' என்றும், 'மணியும் ஒளியும்' என்றும், 'நகமும் சதையும்' என்றும், 'ஈருடலில் ஓருயிர்' என்றும் ஏதேதோ சொல்கிறார்களே கவிஞர்கள், அவற்றையெல்லாம்கூடப் பெலாடிபோலோவின் மனைவி விரும்பவில்லை. அவள் விரும்பியது பெலாடிபோலோவை! பொற்காசுகளை அல்ல!

'அன்பே' என்று கொஞ்ச வேண்டாம்! 'ஆருயிரே' என்று உருக வேண்டாம்! 'கண்மணியே' என்று காதல் பேச வேண்டாம். தான் கணவன், அவள் தனது மனைவி என்ற அந்த நினைவு இருந்தாலே போதும். அது இருக்கிறதா தன் கணவனுக்கு?

***　　　***　　　***

ஆண்டுகள் செல்லச் செல்லப் பெலாடிபோலோவின் மனைவிக்கு நோய் கண்டது. எத்தனை தான் தனது ஏக்கத்தையும், துயரத்தையும் மறைக்க முயன்றாலும் எப்போதாவது தனியாக இருக்கும்போது கண்ணீர் வரும். இதயத்தைப் பொத்தி அழுத்துவாள்! ஆனால் எந்த முயற்சியையும் மீறிக் கண்ணீர் விம்மும். மகளுடைய கண்ணில் படக் கூடாது என்று துடைத்துக் கொள்வாள்!

ஜெனிகாவோ? அவளுக்கு இது ஒன்றும் தெரியாது. வெனிஸ் நகரத்துக் கால்வாய்களிலே மிதக்கும் கண்டோலாப் படகைப் போல அவள் தன்னுணர்வின் மேற்பரப்பிலே மிதந்தாள். அதன் ஆழத்திலே நெளிந்த குமிழிகளும், சுழல்களும் அவளுக்குத் தெரியாது! என்றாலும் எப்போதாவது தன் அன்னை தன்னந் தனியாக இருந்து ஏதோ யோசிப்பதைப் பார்த்து விட்டால் ஜெனிகாவுக்கு ஒரு குழப்பம் ஏற்படும்.

"ஏனம்மா, அப்பா கொடுத்தனுப்பிய முத்துமாலையில் ஏதாவது சொத்தை இருக்கிறதா? யாத்திரிகர்கள் யாரும் அதைக் கொண்டு வரும் போது ஏதாவது மாற்றிச் செய்து விட்டார்களா? போலிகளைப் போட்டு விட்டு நல்லவற்றைத் திருடிக் கொண்டு விட்டார்களா?" என்று கேட்பாள். தாயாருக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியாது; ஆனாலும் ஒரு நாள் சொன்னாள்:

"அம்மா! இந்த இத்தனை முத்துக்களையும் விட உயர்ந்த ஒரு முத்து இருக்கிறது. அதை நமக்கு இன்னும் அனுப்பவில்லை உன் அப்பா!"

"என்னம்மா! அவ்வளவு உயர்ந்த முத்து என்றால் அது கிழக்கு தேசத்து முத்தா?

## சுதந்திர தாகம்

மிஸ்டர் குவின் என்பது அவர் பெயர். கம்பி மீது அநாயாசமாக நடந்து சர்க்கஸ் வித்தைகள் செய்து காட்டி எல்லோரையும் மகிழ்வித்து இருக்கிறார். இந்த வித்தையை கொண்டே கிழக்குப் பெர்லினிலிருந்து மேற்குப் பெர்லின் பகுதிக்கு தப்பி வந்துவிட அவர் முயன்றிருக்கிறார். மின்சாரம் பாயும் கேபிள் கம்பிகள் மீதாக நடந்து எல்லைக் கோட்டைக் கடந்து வந்துவிட நினைத்திருக்கிறார். இம்முயற்சி பேராபத்தானது என்பது அவருக்குத் தெரியும். கம்யூனிஸ அடிமைத் தளைகளைச் சகிப்பதை விட இந்த ஆபத்துக்கு உள்ளாவது எவ்வளவோ மேல் என்ற முடிவுக்கு அவர் வந்திருக்கிறார்.



மிக ஜாக்கிரதையாகக் கம்பத்தின் மீது ஏறி கேபிள் வழியாக அவர் நகர ஆரம்பித்தார். மேற்கு பெர்லின் எல்லைக்குள் வந்தாகி விட்டது. இச்சமயத்தில் 15 மீட்டர் உயரத்திலிருந்து அவர் தவறிக் கீழே விழுந்தார். இரண்டு கை எலும்பும் முறிந்து விட்டது. தலையில் பலத்த அடி. இத்துடன் அவர் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டார். அவருக்கு உயிர் கெட்டி. தெய்வாதீனமாகப் பிழைத்துவிட்டார். ஆனால் அவர் முன்போல பிரபல சர்க்கஸ் நிபுணராக விளங்க முடியுமா என்பது சந்தேகமே. சுதந்திர தாகம் மனிதனை எப்படியெல்லாம் ஆட்டிப் படைக்கிறது பாருங்கள்!

ஒருவேளை இந்தியாவில் விளைகிற முத்தாக இருக்குமோ? சொல்லம்மா. அந்த முத்து எங்கே இருக்கிறது?''

ஜெனிகாவின் தாயார் சிரித்தாள். துயரச் சிரிப்பு அது! சொன்னாள்:

''கண்ணே! அந்த முத்து வேறு எங்கும் இல்லை. உன் அப்பாவிடமே இருக்கிறது அது!''

ஜெனிகாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது!

''அப்பாவிடமா? அப்பாவிடமே இருக்கிறது என்றால் அப்பா ஏன் அதை அனுப்ப வில்லை இன்னும்? யாத்திரிகர்களிடம் அதைக் கொடுத்து விடுவதற்குப் பயப்படுகிறாரா? அத்தனை விலையுயர்ந்த முத்தா அது?''

''ஆமாம், மகளே! அந்த ஒரு முத்துக்கு விலையே இல்லை. அது விலைகளை யெல்லாம் கடந்த ஓர் ஒப்பற்ற முத்து கண்ணே!''




ஜெனிகா என்ற மலரும் பூங்கொடி இள வேனிற் காலத்தின் இன்பக் காற்றிலே நகை செய்தது! வெனிஸ் நகரத்து அழகுக் கதிரின் ஒளிச் சோலையிலே தளதளத்தது! ஆனால் உள்ளம் மட்டும் கடலின் உப்புக் காற்றுப் படாமல் நாட்டுப்புறத்து அன்னை ஒருத்தியின் அன்பு அரவணைப்பிலே பொதிந்து நின்றது.

பெலாடியோவின் மனைவி? அவளுக்கு நோய் அதிகரித்தது. இருமல் வந்தது. சுவா சத்திலே காசம் பாய்ந்தது! படுக்கையிலே படுத்தாள்.

ஜெனிகாவுக்கு இப்போது வேறு எந்த வேலைக்கும் நேரமில்லை. இரவும் பகலும் அன்னைக்குப் பணிவிடை செய்வதே அவளுக்கு வேலை. அன்னைக்கு வந்த நோய் அத்தனை கடுமையாக இருந்தது.

யாத்திரிகர்கள் வருவார்கள். பரிசுகள் தரு வார்கள். பிரயாணிகள் பலர் தூர தேசங் களிலிருந்துகூட வந்து பெலாடியோ என்ற புகழ்பெற்ற ஓவியனின் மனைவியையும் மகளை யும் கண்டு செல்வார்கள். சிலர் ஓவியனைச் சந்தித்து வந்ததாகச் சொல்லி அவனிட மிருந்து கொண்டு வந்த பொருள்களை வழங்குவார்கள்.

வெனிஸ் நகரத்து வாலிபர்கள் பலர் மிகுந்த அக்கறையோடு பெலாடியோவின் மனைவியைப் பார்க்க வந்து மகளோடு பேச முயற்சி செய்வார்கள். ஆனால் ஜெனிகா? அவளுக்கு வேறு யாரிடம் பேசவும், யார் கொண்டு வந்த எந்தப் பரிசுகளைப் பார்க்கவும் நேரம் இல்லை! அன்னையின் நோய் அத்தனை கடுமையாக இருந்தது. விநாடிக்கு விநாடி ஏதாவது மருந்து, சுடு தண்ணீர், கஞ்சி என்று கொடுத்துக் கொண்டே இருந்தாள் ஜெனிகா!

வைத்தியர் ஒருவர். மிகுந்த முதியவர். அடிக்கடி வருவார். ஏதேதோ மருந்துகள் தருவார். அவர் ஒருவரைக் காணும்போது தான் ஜெனிகாவின் முகம் மலரும்.

''ஜெனிகா! இன்று உன் தாயாருக்கு ஒரு புதிய மருந்து கொண்டு வந்திருக்கிறேன் அம்மா! உயர்வான கடல் முத்தை எடுத்து நீற்றிக் கிழக்கு நாடுகளின் முறைப்படி ஒரு நல்ல பஸ்பம் செய்து கொண்டு வந்திருக் கிறேன். இந்த மருந்தில் நிச்சயம் வாசியாகி விடும் அம்மா!''

இவ்வாறு சொன்னார் வைத்தியர். மிகுந்த அன்போடு அந்த மருந்தை வாங்கி இனிப்புப் பொடியில் விரவிக் கொடுத்தாள் ஜெனிகா!

''அம்மா! இது கிழக்கு நாடுகளின் முறைப் படி செய்த ஒரு புதிய பஸ்பமாம்! மிக உயர்ந்த கடல் முத்திலிருந்து—''

அன்னை விழிகளைத் திறந்தாள். மகளை மிகுந்த பரிவோடு பார்த்தாள்.

''கண்ணே! என்ன சொன்னாய்? இந்த மருந்து முத்து மருந்தா?''

''ஆமாம். உயர்ந்த முத்திலிருந்து....!''

இப்படிச் சொன்ன போது அன்னையின் முகத்தில் தெளிந்த ஒரு வேதனையைக் கண் டாள் ஜெனிகா! கார்முகில் படர்ந்த வானத் திலே மின்னல் துவளுவது போல, துயரமும் நோயும் படர்ந்திருந்த அன்னையின் முகத்திலே வேதனை ஒரு மின்னலாகத் துவண்டதைப் பார்த்தாள்! அந்த மின்னல் ஜெனிகாவின் யோசனையில் ஒரு விநாடி 'பளிச்' என்று வெளிச்சமாகத் துடித்தது. உடனே அன்னை யின் மனத் தத்துவம் புரிந்தது!

''அம்மா! இது வரை எத்தனை அசடாக இருந்திருக்கிறேன் நான்! அப்பாவிடம் ஒரு முத்து இருக்கிறது என்று சொன்னாயே, அம்மா! அது எனக்கு இப்போதுதான் புரி கிறது அம்மா! அம்மா, அம்மா, வைத்தியர் கொடுத்த இந்த முத்து மருந்தைவிட, பெரிய முத்து மருந்து அதுதான் அம்மா! உலகத்தி லுள்ள எந்த வைத்தியரின் எந்த மருந்தையும் விடப் பெரிய மருந்து அது என்பதை இப் போதுதான் புரிந்து கொண்டேன் அம்மா!''

ஜெனிகா கண்ணீர் வடித்தாள். அவ ளுடைய அன்னை தனது கண்களில் பொங்கி வரும் கண்ணீருக்கு அஷேர போட முயன்றாள்.

''அம்மா! அப்பா வந்து விடுவார் அம்மா! சீக்கிரத்தில் வந்து விடுவார் அம்மா! இன்றி லிருந்து மார்க் முனிவர் சதுக்கத்தில் அப்பா வின் வரவுக்காகவே பிரார்த்தனை செய்யப் போகிறேன் அம்மா நான்!''

*** *** ***

ஜெனிகாவின் பிரார்த்தனை பலன் அளித்தது. பெலாடியோ வெனிஸ் நகரத் துக்குத் திரும்பினான். ஆனால் அவன் திரும் பிய சில நாட்களில் அவனுடைய மனைவி இந்த உலகிலிருந்து பிரிந்தாள். எந்த ஒரு முத்துக்காக அவள் காத்திருந்தாளோ, அந்த முத்தைப் பெற்ற உவகை தாளாமல் அவள் கண்களை மூடினாள்!

நூற்று ஐம்பது கால்வாய்களும், மிகப் பெரும் கடலும் சூழ்ந்து நின்ற வெனிஸ் என்ற சுந்தர உலகிலே ஜெனிகாவும் பெலாடி யோவும் தனியாக விடப்பட்டார்கள்.

பெலாடியோ தனது மனைவியை அடக்கம் செய்து அந்தக் கல்லறையின் மீது ஒரு பெரிய கலைக்கூடம் எழுப்பினான்.

''மகளே! கலையின் எழிலுக்காகக் கருத்துக் களை நாடி நாடி எங்கெங்கோ திரிந்து உழன்

பெங்கால்
கெமிகல்ஸின்

# காந்தாரிடின்

கூந்தல் தைலம்

பட்டுப்போன்ற மிருதுவான
கூந்தல் வளமாக வளர்வதற்கு








# ஸில்வர் எக்ஸைட்

பாட்டரிகள் மற்றவை நின்ற பிறகும்
தொடர்ந்து இயங்குகின்றன

உங்கள் உள்ளூர் ஏஜண்டு:

தி ஜெனரல் எலக்டிரிக் கம்பெனி ஆப் இந்தியா
பிரைவேட் லிமிடெட், சென்னை

கிளைகள்: பெங்களூர், கோயமுத்தூர், சிகந்தராபாத்

ESSC.64 TM



# சில வருஷங்கள் கழித்துக் கேட்கக் கூடும்...

அப்பா, எனக்கு
ரூ. 10,000/- தரமுடியுமா?
உங்களுடைய மகனே
இந்தக் கேள்வியை

அவனுடைய வருங்காலம் உங்கள் பதிலைப் பொறுத்திருக்கிறது. சொந்தமாக ஒரு தொழிலை நடத்தி, அதன்மூலம் அவன் வாழ்க்கையில் முன்னேற வழி கிடைக்குமா?

திட்டமிட்டு சேமிக்கவேண்டும். உங்கள் வருமானத்தைச் செலவழிக்கும் முன்னரே அதிலிருந்து ஒரு பகுதியைச் சேமிப்புக்கென்றே தவறாமல் ஒதுக்கவேண்டும். இல்லாவிடில் சேமிப்பதற்கு எதுவும் மிஞ்சாமல் போக நேரிடும்.

## தி பாங்க் ஆப் இந்தியா லிமிடெட்

T. D. கன்ஸாரா, ஜெனரல் மானேஜர்

8/C/T30 TAH

றேன். இனி இந்த அனுபவங்களின் சேற்றிலிருந்து பல மலர்ச் செடிகள் முளைக்க வேண்டும். அந்த மலர்கள்தான் உன் அம்மையின் ஆன்ம சாந்திக்கு எனது காணிக்கை!''

இவ்வாறு சொன்னான் பெனாடியோ!

''கலைக் கூடத்திலே புதிய சித்திரங்கள் வரையப் போகிறீர்களா அப்பா?'' என்று ஆவலோடு கேட்டாள் ஜெனிகா.

''ஆமாம், மகளே! துன்பத்தின் கறையே படாத ஒப்பற்ற இன்ப உலகை எனது ஓவியத்திலே உருவாக்கித் துன்பத்திலே உழன்று மறைந்த உன் அன்னையின் உள்ளத்துக்குச் சாந்தி தரப் போகிறேன்!'' என்றான் பெனாடியோ.

அன்போடு மகளின் கரங்களைப் பிடித்துத் தன் கண்களிலே ஒற்றிக் கொண்டான்.

''அப்பா! அப்படியானால் இனிமேல் தினந்தோறும் நாம் இருவரும் இந்த வெனிஸ் நகரத்தின் இன்ப விடுதிகளுக்கும், களியாட்ட நிலையங்களுக்கும், போய் வருவோமா? அது தானே சித்திரத்துக்கு உரிய இன்ப உலகம்!'' என்று கேட்டாள் மகள்.

''இது வரை இல்லாத ஒரு புதிய அனுபவமாக இருக்கும் அல்லவா உனக்கு அது?'' என்று கேட்டான் பெனாடியோ.

''ஆமாம்!'' என்று தலையசைத்தாள்மகள்.

''அப்படியானால் ஒரே ஒரு நிபந்தனை. கல்லறையைச் சுற்றியுள்ள உட்சுவர்களிலே நான் 'இன்ப உலகம்' என்ற சித்திரக் காட்சியை வரைவேன். பகலில் இந்த வேலை. இரவெல்லாம் உன்னோடு வருவேன், கேளிக்கைக் கூடங்களுக்கு! தனியாக இருந்து பகலில் சித்திரம் வரைவேன். என்னுடைய சித்திரம் முழுதும் முடிகிற வரை நீ அதைப் பார்க்கக் கூடாது! அதுதான் நிபந்தனை!''

''பார்க்கக் கூடாதா?'' என்று கேட்டாள் ஜெனிகா.

''ஆமாம். சித்திரம் பூர்த்தியானதும் உன்னைக் கூப்பிட்டுக் காண்பிக்கிறேன். அரை குறையாகக் காண்பிக்க மாட்டேன். இந்த நிபந்தனை உனக்குச் சம்மதந்தானே?''

''சரி'' என்று சொல்லிக் கொண்டே இன்பத்திலே துள்ளினாள் ஜெனிகா.



''இன்ப உலகம்'' என்ற சித்திரம் கல்லறையிலே உருவாகி வந்தது. கதவுகளைப் பூட்டிக் கொண்டு பகல் முழுதும் வரைவான் பெனாடியோ. பிற்பகலில் கொஞ்சம் ஓய்வு. பிறகு இரவிலே மகளோடு வெனிஸ் நகரத்தின் விடுதிகளுக்குச் செல்வான். ஆனால்—?

கண்ணைத் திறக்க மாட்டான். இன்பக் காட்சியை வெல்லாம் பார்ப்பதே இல்லை பெனாடியோ! கேளிக்கைகள், நடனங்கள், உல்லாசக் களியாட்டங்கள் – எதையும் இமை திறந்து பாராமல் வளைய வரும் இந்த ஓவியனை வெனிஸ் மக்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. புரியாத புதிராக உலவி வந்தான் பெனாடியோ என்ற அந்த முதிய ஓவியன்! எல்லாரும் குழப்பம் அடைந்தார்கள்! மற்றவர்கள் மட்டுந்தானா? ஒரு நாள் ஜெனிகாவே கேட்டாள்:

''அப்பா! இன்பக் காட்சிகளையே பாராமல் எப்படி நீங்கள் இன்ப உலகை வரைந்து கொண்டிருக்கிறீர்கள் அப்பா?''

''மகளே! நிபந்தனையை மறந்து விட்டாயா? சித்திரம் முழுதும் முடிந்ததும் காண்பிக்கிறேன். அப்போது புரியும் உனக்கு!''

இவ்வாறு மறுமொழி சொன்னான் பெனாடியோ!

நாட்களும், வாரங்களும், மாதங்களும் ஓடிக்கொண்டே இருந்தன. இரவு விடுதிகளிலே நுழைவதும் திரும்புவதுமாக வெனிஸ் நகரத்தின் புதிரானது மகளைக் கையிலே பிடித்துக் கொண்டு உலவி வந்தது!

ஒரு நாள்! வெனிஸ் ஓவியர்களிலே மிகவும் இளைஞனான ஒருவன் பெனாடியோவையும் மகளையும் நோக்கி நடந்து வந்தான். துணிகரமாகக் கேட்டான்:

''பெரியவரே! நான் ஒரு ஆரம்ப ஓவியன். உங்களுடைய இன்பச் சித்திரங்கள் பலவற்றைக் கண்டு கண்டு அவற்றையே இலட்சியமாக வைத்துப் பயின்று வருகிறேன். அந்த உரிமையோடு உங்களை ஒன்று கேட்கிறேன். நீங்களும் உங்கள் அழகு மகளும் ஏன் இப்படிப் புதிர் போடுகிறீர்கள்? உங்களுக்குத் தான் கேளிக்கைகளில் விருப்பம் இல்லையென்றால், உங்கள் மகளையும் ஏன் இப்படி விளுக வறட்சியாக வளர்க்கிறீர்கள்?''

முதிய ஓவியன் அந்த இளைஞனை ஏறிட்டுப் பார்த்தான். வாலிபமும், அழகும், மிடுக்கான நடையும் ஒருங்கே வாய்ந்த அந்த இளைஞனைத் தனது அகன்ற விழிகளினால் ஒரு விநாடி ஆராய்ந்தான். கேட்டான்:

''தம்பீ! நீ அன்டானியோவின் மகனா?''

''ஆமாம். தந்தைக்கு வியாபாரம். எனக்குச் சித்திரத்திலே பைத்தியம்!''

''தம்பீ! உன்னை எனக்குப் பிடித்திருக்கிறது. சந்தோஷம். இத்தனை மனிதர்களில் நீ ஒருவன் இவ்வளவு துணிவோடு வந்து என்னிடம் கேட்டாயே, அதுதான் எனக்குத் திருப்தி! இத்தனை கூட்டத்தில் எல்லாரும் எங்களைப் பார்க்கிறார்களே தவிர, எந்த வாலிபனும் என் மகளைப் பார்த்துத் தன்னுடன் நடனம் ஆட வருகிறாயா என்று கேட்கவில்லையே! அப்படியிருக்கும் போது நாங்கள் எப்படி இந்தக் கேளிக்கைகளில் கலந்து கொள்ள முடியும்?''

இவ்வாறுசொல்லிச் சிரித்தான்பெனாடியோ.

பளிச்சென்று அந்த வாலிபன் பதில் சொன்னான்: ''நான் அழைக்கிறேன் உங்கள் மகளை இப்போது. நடனம் ஆடலாமா?''

''சரி'' என்றான் பெனாடியோ!

வெனிஸ் நகரத்தின் அந்த விசாலமான விடுதியிலே கேளிக்கையாட்டம் தொடங்கிற்று. இன்ப இசை இங்கிதமாக எழுந்து ஒலித்தது. அந்த நாட்டு வழக்கப்படி புதிய வாலிபனும் ஜெனிகாவும் கைகோத்து ஆடினார்கள்! முற்றிலும் புதிய பழக்கமானதால், ஜெனிகாவுக்

ருத் தனது கால்களை எப்படி நிலத்திலே பாவவேண்டும், எப்படி அடியெடுத்து வைக்க வேண்டும் என்று சரியாகப் புரியவில்லை. தடுமாறினான். அப்போதெல்லாம் அவனுக்குக் கால் பாவும் கலையை இலாகவத்தோடு கற்பித்தாள் இனோஸ்! இந்தக் காட்சியைத் தனது இரண்டு கண்களையும் அகலத் திறந்து இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான் பௌலாடியோ!



வெனிஸ் நகரத்து மக்கள் எல்லாரும் ஒரே வியப்போடு பேசிக் கொண்டார்கள். இதுவரை எந்தக் கேளிக்கைகளிலும் கண் திறவாமல் இருந்த பௌலாடியோ இப்போது உற்சாகத்தோடு கலந்து கொள்கிறான் என்றும், மகளின் நடனத்தைக் கண்டு களிக்கிறான் என்றும், கண்களை நன்றாகத் திறந்து பார்த்துக் களிக்கிறான் என்றும், ஊரெல்லாம் சொன்னார்கள்.

"அன்டானியோவின் பையன் தான் பௌலாடியோவின் மகளைக் கலியாணம் செய்து கொள்ளப் போகிறானும்!" என்ற வதந்தியும் ஊரெல்லாம் பரவ ஆரம்பித்தது. பௌலாடியோவின் செவிகளிலும் இந்த வதந்தி எட்டியது.

பௌலாடியோ ஒரு பொறுப்பு வாய்ந்த தகப்பனாக நடந்து கொள்ள எண்ணியிருந்தான். எனவே வதந்திகள் காட்டுத் தீப்போல் பரவுவதற்கு முன்பு தனது திட்டத்தை நிறைவேற்ற முடிவு செய்தான்.

"ஜெனிகா! மனித உள்ளங்களைப் புரிந்து கொள்ளக் கூடிய ஒரு மனிதன்தான் அம்மா நான்! அன்டானியோவின் பையனை நீ நேசிக்கிறாய். அவனும் உன்னை நேசிக்கிறான். இருவருடைய நேசமும் மனப் பூர்வமானது என்பதை நான் நன்கு அறிவேன். இந்நிலையில் ஊர் வதந்திகள் பெருகுவதற்கு முன்பு உங்களுடைய திருமணத்தை முடிக்கத் தீர்மானித்து விட்டேன். நீ என்ன சொல்லுகிறாய்?"

இவ்வாறு கேட்டான் பௌலாடியோ.

"அப்பா! உங்களுடைய சித்திரம்? இன்ப உலகை நீங்கள் இன்னும் பூர்த்தி செய்யவில்லையே அப்பா!"

"கண்ணே! உன்னை உன் காதலனிடம் ஒப்படைத்து விட்டால் போதும். என் இன்ப உலகம் தானாகவே பூர்த்தியாகி விடும்!"

"அப்பா! உங்கள் அன்புக்கு என்ன மறுமொழி சொல்லுவேன்? அன்பு என்பது விலைமதிப்பற்ற ஓர் ஒப்பற்ற முத்து என்பதை இன்றும் நன்றாகப் புரிந்து கொண்டு விட்டேன். அந்த முத்துக்கான் நீங்கள் எங்கள் இருவருக்கும் தருகிற விலை மதிப்பற்ற திருமணப் பரிசு!" இவ்வாறு பரவசத்தோடு பேசினாள் ஜெனிகா.

"மகளே! இன்று மாலை உன்னையும் உனது காதலனையும் அழைத்து எனது சித்திரத்தைக் காட்டப் போகிறேன். ஞாயிற்றுக் கிழமை காலையில் உங்கள் திருமணம் நடைபெறும்!"

"அப்படியானால் உங்கள் சித்திரம் திட்டத்தட்ட முழுதும் ஆகிவிட்டதா?" என்று கேட்டாள் ஜெனிகா.

"ஆமாம். ஆகி விட்டது. ஒரு சிறு பூச்சு மிச்சம் இருக்கிறது. அதை இரண்டு நாட்களில் முடித்து விடுவேன்!"

"அப்பா, இப்போதாவது சொல்லுங்கள், சித்திரத்தின் கருத்து என்ன என்பதை!"

"மகளே! உன் ஓவியக் கணவனும் நீயும் ஒன்றாக வந்து பார்க்க வேண்டிய காட்சியம்மா அது!"

*** *** ***

ஜெனிகாவின் அன்னையை அடக்கம் செய்துள்ள அந்தக் கல்லறைக் கூடத்தின் கதவைத் திறந்தான் பௌலாடியோ! மகளும் மருமகனும் உள்ளே நுழைந்தார்கள்.

"அற்புதம்!" என்றான் மருமகன்.

"அப்பா! என்ன தெய்விகமான இன்ப உலகம்! எத்தனை பரமானந்த நகரமாக இருக்கிறது இது!" என்று வியந்து நின்றாள் ஜெனிகா.

"ஆமாம், கண்ணே!. கிறிஸ்து பெருமானுடைய தெய்விக ஆட்சி இது. பாபத்தின் கறையே படியாத பேரின்ப உலகம் என்பது இதுதான். மற்ற மனித இன்பங்கள் அனைத்தும் பாபத்தின் கறை படிந்தவை!"

ஜெனிகாவும் அவளுடைய கணவனும் வியப்பிலே மூழ்கியவர்களாகச் சித்திரத்தையே பார்த்தார்கள்.

ஏசு பெருமான் பொன் மயமான ஆட்சித் தவிசிலே வீற்றிருக்கிறார். அவருக்கு இரு மருங்கிலும் அவருடைய ஞானச் சீடர்கள் இரு வரிசையாக அமர்ந்து அமைச்சு நடத்துகிறார்கள். சுற்றிலும் தேவதைகள், ஞானச் செல்வர்கள், குருமார்கள், புண்ணியசாலிகள், அருந்தொண்டர்கள் அணி அணியாக வீற்றிருக்கிறார்கள். 'சுவர்க்க பூமி' என்ற 'பேரின்ப உலகம்' சித்திரத்திலே வர்ணனைந்த நேர்த்தியோடு காட்சி தருகிறது! அந்தத் தெய்வத் திருக் கொலுவிலே மெய் மறந்து ஜெனிகாவும் அவளுடைய ஓவியக் காதலனும் அப்படியே மண்டியிட்டு வணங்கினார்கள்.

எழுந்து நின்ற ஜெனிகா அப்படியே திடுக்கிட்டவளாய்க் கேட்டாள்:

"அப்பா, என்ன இது! இன்ப உலகின் இரு மருங்கிலும் உள்ள அணி அணியான இருக்கைகள் அனைத்திலும் பல ஞானிகளை அமர்த்தியிருக்கிறீர்கள். இதோ ஒரு இடம் மட்டும் ஏன் இன்னும் காலியாக இருக்கிறது?"

இவ்வாறு கேட்டாள் மகள்.

"கண்ணே! முதலில் கணக்குப் பார்க்காமல் இருக்கைகளை வரைந்து விட்டேன். பிறகு அவற்றில் ஏசுநாதரின் சீடர்களில் ஒவ்வொருவராக அமர்த்திக் கொண்டு வந்தேன். கடைசியில் இந்த ஒரு இருக்கை மட்டும் அதிகப்படியாக மிஞ்சி விட்டது! இதில் எந்தச் சீடரை அமர்த்தலாம் என்று நானும் எத்தனையோ ஆராய்கிறேன். நாங்கள் புராணங்கள் எல்லா

வற்றையும் படித்துப் பார்க்கிறேன். புலப்பட வில்லை!" என்று சொன்னான் பெளாடியோ!

"அப்படியானால் இனி இந்தக் காலியான இடத்தை என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று கேட்டான் ஜெஸிகாவின் காதலன், இளம் ஓவியன்!

"இந்த இடத்திலே மெல்லிய இறகு கொண்டு ஒரு பறக்கும் உருவத்தை வரையப் போகிறேன்!" என்றான் பெளாடியோ.

"எப்போது அப்பா?" என்றாள் ஜெஸிகா.

"இன்றிரவுதான். இன்றிரவு நான் விடுதி களுக்கு வரப் போவதில்லை. நான் இதுவரை விடுதிகளுக்கு வந்ததன் நோக்கமே, நீங்கள் இருவரும் சந்திக்க வேண்டும் என்பதுதானே! அது நடந்து விட்டது. இனி எனக்கு அங்கே வேலையில்லை. இனி என் வேலை இங்குதான். நீங்கள் இருவரும் இன்றிரவு விடுதிகளுக்குச் சென்று விட்டுக் காலையிலே வந்து பாருங்கள்! சித்திரம் பூர்த்தியாகி யிருக்கும்!"

இவ்வாறு சொல்லி மகளையும் மருமகனை யும் அனுப்பி விட்டுச் சித்திரத்திலே ஈடுபட் டான் பெளாடியோ.

நெடிய பெரிய சுவரின் உச்சி மீது சித்திரம் வரைவதற்குச் சௌகரியமான முறையில் அமைக்கப்பட்டிருந்த உயரமான சாரத்தின் மேல் ஏறி அமர்ந்து கொண்டு, காலியாக விடப்பட்டிருந்த இடத்திலே இறகைக் கொடுத்தான் பெளாடியோ!

* * *     * * *     * * *

இரவு நகர்ந்ததும், இருள் விலகியதும் வானத்திலே இருட்டு மறைந்து ஒளி பிறந்த தும் ஒன்றும் பெளாடியோவுக்குத் தெரியாது!

கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்த ஜெஸிகாவும் கணவனும் திடுக் கிட்டார்கள்! தந்தை இன்னும் உயரமான சாரத்தின்மீதே அமர்ந்திருக்கிறான்.

"அப்பா! இன்னுமா வரைந்து கொண் டிருக்கிறீர்கள்? விடிந்து பகல் உதயமாகி..."

வார்த்தைகளை முழுதும் முடிப்பதற்குள் அப்படியே பதறினாள் ஜெஸிகா! பெளாடி யோவின் கையில் இருந்த இறகு நழுவி உயரத் திலிருந்து கீழே தரையிலே விழுந்தது.

"அப்பா!" என்று கூப்பிட்டுக் கொண்டே சாரத்தின் நூல் ஏணியிலே 'விறு' 'விறு' என்று தொத்தி ஏறினாள் ஜெஸிகா. கணவன் வேகமாக அவளைப் பின்தொடர்ந்தான்.

"அப்பா!" என்றாள் ஜெஸிகா!

அசைவற்ற வெறும் உடலாக அப்படியே அந்தச் சாரப் பலகையின் மீது சரிந்தது பெளாடியோ என்று அழைக்கப்பட்ட அந்தச் சரீரம்! சரிந்த உடலை இரண்டு கைகளாலும் ஏந்தி நிமிர்த்தினான் ஜெஸிகாவின் கணவன்! தான் வரைந்த சித்திரத்தைப் பார்த்துப் பரவசமாகப் புன்முறுவல் செய்தது பெளாடி யோவின் முகம்!

"அப்பா! அப்பா!" என்று கூப்பிட்டாள் ஜெஸிகா.

சித்திரத்தை நோக்கி மிகுந்த பிரயாசை யோடு கை விரலை அசைத்தது முதிய உடல்.

ஜெஸிகாவும் அவளுடைய கணவனும் அந் தச் சித்திரத்தைப் பார்த்தார்கள்.

**விஞ்ஞான விநோதம் :**

## 'நீர் பீரங்கி'



மேற்கு ஜெர்மன் நிலக்கரிச் சுரங் கங்களில் "நீர் பீரங்கிகள்" இனி அதிகமாக உபயோகிக்கப்படுமாம்.

அது என்ன 'நீர் பீரங்கி' என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

இந்த இயந்திரம் நிலக்கரியை வெட்டுகிறது. எப்படி? தண்ணீர் வெகு வேகமாகப் பீச்சப்படுவதால் நிலக்கரி பாளம் பாளமாகத் தகர்ந்து விழுகிறது! கீழே விழுந்த தண்ணீர் சேகரிக்கப்பட்டு மீண்டும் குழாய் மூலம் வேகமாகப் பீச்சப்படுகிறது. தகர்ந்து விழுந்த நிலக்கரிப் பாளங்கள் 'கன்வேயர் பெல்ட்' மூலம் மேலே நிலமட்டத்துக்குச் செல்கின்றன.

நிலக்கரியை இடித்துப் பெயர்ப்ப தால் அதிலிருந்து கிளம்பும் தூசு சுரங்கத் தொழிலாளியின் சுகா தாரத்துக்கு ஊறு ஏற்படுத்தி வந் தது. இத்தண்ணீர் முறையால் அப் பிரச்னை தீர்ந்துவிட்டதாம்!

காலியாக விடப்பட்டிருந்த இடத்திலே இப்போது என்ன கண்டார்கள்?

"பேரின்ப உலகம்" என்ற ஏகநாதரின் சுவர்க்க பூமியிலே முழங்கால் மண்டியிட்டு நின்றது பெளாடியோவின் ஓவியத் திரு வுருவம். கடைசி இருக்கைக்கு ஆள்தேடிய பெளாடியோ இப்போது தன்னையே அந்த இடத்தில் வரைந்து விட்டான், மண்டியிட்டு வணங்குவது போல!

"அப்பா!" என்று கூப்பிட்டுப் பெளாடி யோவின் உடலை அசைத்தாள் ஜெஸிகா. உயிர் பறந்து விட்டது. சுவர்க்க பூமியிலே தனக்கு இடம் பிடித்துக் கொண்டு விட்டது அது! நிலவுலகில் இனி இடமில்லை!

கண்கள் கலங்கின ஜெஸிகாவின் காதல னுக்கு.

"பறக்கும் தேவதையை வரையப் போவ தாகச் சொன்னார்! கண்ணே, தேவதை பறந்து விட்டது!"

இவ்வாறு சொல்லும் போது குரல் உணர்ச் சியின் பெருக்கால் நடுநடுங்கியது. சரிந்த வெனிஸ் ஓவியனின் உடலைச் சாரத்தின் அகன்ற பீடத்திலே சாய்த்து வைத்தான்.

'இன்ப உலகம்' என்ற அந்த ஓவியத்துக்கு எதிரே இப்போது ஜெஸிகாவும் அவளுடைய கணவனும் மண்டியிட்டு வணங்கினார்கள்! ஜெஸிகாவின் கண்களிலிருந்து பொங்கிய கண் ணீர் விலை மதிப்பற்ற முத்தாக, முத்து முத் தாக உதிர்ந்தது!




எப்பொழுதும்




கோல்டன்

# ஸாலட் ஆயில்




உபயோகித்து
உங்கள் உணவைத் தயாரியுங்கள்

காரத்திற்கும், இனிப்புப் பண்டங்களுக்கும் மிகச் சிறந்த சமையல் சாதனம்
சுத்தமாகப் பாக் செய்யப்பட்டு
3 வசதியான குடும்பத்திற்கேற்ற
சைஸ்களில் கிடைக்கின்றது.




தி ஈஸ்ட் ஏஷியாடிக்
கம்பெனி (இந்தியா)
பிரைவேட் லிமிடெட்,
சென்னை-1

JEP-EAC 11

# வீட்டைக் கட்டிப்பார் வரியைக் கொடுத்துப்பார்!

சென்னை, அதைச் சார்ந்த சுற்றுப்புறங்களுக்குச் சர்க்கார் விதிக்க உத்தேசித்திருக்கும் நிலவரி சம்பந்தமாக ஏற்படும் கஷ்டங்களைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

தற்போது உதாரணமாக ஒரு வீடு கட்ட வேண்டுமென்றால் நகர்ப்புறத்தில் ஒன்றரை இரெண்டு குறைந்தபட்சம் வேண்டும். அதன் குறைந்தபட்ச விலை ரூ. 10,000 ஆகிறது. (இது இடத்துக்கு இடம் மாறுபடலாம்) அடுத்தபடி கட்டடச் செலவு இன்றைய சாமான் விலைகளின்படி 15,000 ஆகும். ஆக ரூ. 25,000 மதிப்புள்ள கட்டடத்திலிருந்து மாத வாடகை ரூ. 100 முதல் 125 வரை கிடைக்கக் கூடும். அதிகபட்சமான ரூ. 125 வாடகை கிடைப்பதாகவே வைத்துக் கொண்டாலும்,

| | | |
|---|---|---|
| ஒரு வருஷத்துக்கு | | 1500.00 |
| கார்ப்பரேஷன் வரி | 350.00 | |
| ரிப்பேர்ச் செலவு | 250.00 | |
| வசூல் செலவு | 90.00 | |
| குண்ட்ரெண்ட் (சுமார்) | 0.50 | |
| ஆக | 690.50 — | 1500.00 |
| நிகரம் | | 809.50 |

மேற்படி நிகர வருமானமானது முதலீட்டுச் செலவுக்கு மூன்றே கால் சதவிகிதம் வட்டி கூடக் கணக்கு ஆகவில்லை என்பது நிதர்சனம். இது மத்தியதர வகுப்பார்களின் நிலையாகும்.

மற்றொன்றையும் கவனிக்கவேண்டியதாகிறது. ஒரே வீடு கட்டிக் கொண்டு இருப்பவர்களில் பெரும்பாலோர் வீடு கட்டவும் மனை வாங்கவும் கட்டடத் திர்மாண சொஸைட்டிகள், பண்டாபீஸ்கள், பாங்குகள் இவைகளில் கடன் வாங்க வேண்டியதாகிறது. இப்படி வாங்கும் கடனுக்கு ஐந்தரை முதல் ஏழரை சத விகிதம் வரை வட்டி செலுத்த வேண்டியதாகிறது. தனிப்பட்ட நபர்களிடமிருந்து ஒன்பது சத விகிதத்துக்குக் குறைந்து வட்டிக்குப் பணம் கிடைக்காது.




இச் சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறு நியாயமான அடிப்படையில் ஓர் அளவுக்கு வாடகையை உயர்த்தலாமென்றாலும் வாடகைக் கட்டுப்பாடு சட்டம் செலவு செய்த தொகைக்கு ஆறு சத விகிதத்துக்கு மேல் ஒரு வருஷ வாடகையை உயர்த்த இடம் தரவில்லை.

இந்தச் சூழ்நிலையில்தான் புதிதாக நிலவரி வேறு வந்திருக்கிறது. "மார்க்கெட் மதிப்பை" அனுசரித்து அரை சத விகிதம் வரி போடப் போவதாகச் சொல்லப்படுகிறது. இந்த மார்க்கெட் மதிப்பு என்பது இஷ்டத்த இழுப்புக்கு வரக் கூடியது.

இந்நிலையில் 'வீட்டைக் கட்டிப்பார் வரியைக் கொடுத்துப் பார்' என்ற புதுமொழி உருவானாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

சென்னை—4 வி. கிருஷ்ணனந்தம்
23—4—63

## தேசாய் அவர்களே...திரும்பிப் பாருங்கள்

அயல் நாடுகளுக்கு அதிகம் சென்று பழகிய நமது மதிப்புக்குரிய நிதி அமைச்சர் அந்த மோகத்தில், மேலை நாட்டைப் பின்பற்றச் சொல்கிறார். "ஒன்பது காரட்டில் அவர்கள் அணியும்போது நீங்கள் ஏன் பதினாறு காரட்டில் நகை பணியக்கூடாது?" என்று கேட்கிறார். 'கிப்பாஸ்' வேஷ்டியும், ஜிப்பாவும் அணிந்து, பாரதத்தின் பண்பாடு மிக்கவராகத் திகழும் நிதியமைச்சர், ஏன் கோட்டும் சூட்டும் போடக் கூடாது? அயல் நாடுகளில் ஒன்பது காரட்டில் நகை பணிவது உண்மையே. மறுப்பார் யாருமில்லை. அதே நேரத்தில் தங்கத்தை விட விலையுயர்ந்த பிளாட்டினத்தில் அவர்கள் நகை செய்து அணிகிறார்கள் என்பதை அறிய வேண்டும். 22 காரட்டில் செய்த செயினென்றுக்குக் கூலி பதினாறு மட்டுமே. ஆனால் இப்பொழுது வந்துள்ள 14 காரட்டு செயினென்றுக்குக் கூலி எவ்வளவு தெரியுமா? ரூபாய் ஐம்பது! வாங்கி என்ன பயன்? ஆபத்து நேரத்தில் விற்றுக் காசாக்க முடியுமா? முடியாதே! தாய் நாட்டுச் சூழலுக்கு ஏற்றவாறு சட்டத்தைத் தோற்றுவியுங்கள்.

நிதி அமைச்சர் தேசாய் அவர்களே, தேசத்தைக் கொஞ்சம் திரும்பிப் பாருங்கள். வேலையிழந்து, வீடிழந்து, விதியோரத்தைத் தஞ்சமடைந்து தவிக்கும் தங்க நகைத் தொழிலாளிகளைப் பாருங்கள். ஒட்டிய வயிற்றோடு ஓடாக நிற்கும் அவர்கள் இல்லக்கிழத்தியரைப் பாருங்கள். "பரம்பரைத் தொழிலையே பாழாக்கிவிட்டார்களே!" என்ற புலம்பல் இன்று வரை நிற்கவில்லையே! ரோம் நகர் பற்றி எரியும்போது நீரோ மன்னன் பிடில் வாசித்துக்கொண்டிருந்தானாம். இந் நிலையில் இருக்கும் நிதி அமைச்சர் அறிவுக்கு எட்டாத முறையில் ஆறுதல் சொல்லி வருகிறார். "தங்கம் தருகிறோம் — 14 காரட் நகை செய்யுங்கள்" என்றவர் இன்று "தங்கமில்லை-தேங்கிய நகைகளை (22 காரட் நகைகளை) உருக்கி 14 காரட்டாக மாற்றி நகை செய்ய ஆரம்பியுங்கள்" என்று வாய் கூசாமல் சொல்கிறார். உயரமான மனிதர் நமது நிதியமைச்சர். அதனால் மச்சிலைத்தான் பார்க்கிறாரே தவிர, குச்சிலைப் பார்க்கக் குனிகிறாரில்லை.

சென்னை
6—3—63

மு. பாரூக்

# ''பில்'லிலே பத்து;




## எஸ். சங்கரன்

**எழுத்தாளராகவும் புத்தகப் பதிப்பாளராகவும் ஒரே நபர் விளங்குவதில் உள்ள சிரமங்களை அனுபவபூர்வமாய் எடுத்துக் கூறும் திரு எஸ். சங்கரன் இன்றைய புத்தகப் பிரசுரத் தொழிலில் உள்ளகுறைபாடுகளை அஞ்சாமல் அலசுகிறார். இலக்கிய ஆர்வமுள்ளோர் சிந்திக்கவேண்டிய பிரச்னைகள் இவை.**



காரியாலயத்தில் ஒரு நாள் உயர் பதவியில் இருக்கும் என் பழைய நண்பர் ஒருவருடன் உரையாடிக் கொண்டிருந்தேன். தலை விரிகோலமாக ஒருவர் வந்தார்-அதாவது தற்கால நாகரிகப்படி வாரிய க்ராப்பைத் தாறுமாறாகக் கலைத்து விட்டுக்கொண்டு.

''ஓடிப்போன ஒய்யாரி வேண்டும்'' என்றார் அவர். இல்லையென்ற பாவனையில் தலையை ஆட்டினேன். பேசிக் கொண்டிருந்த நண்பரின் முகத்தில் ஒரு கேள்விக் குறி காணப்பட்டது.

''கணவனைக் கொன்ற காரிகை?'' —கேட்டது நவநாகரிக வாலிபர். அதற்கும் இல்லை என்று கையை விரித்தேன். நண்பரின் முகத்தில் நிழலாடிய கேள்விக் குறி இப்போது அச்சத்தைப் புலப்படுத்தும் பாவனையில் மாறியது.

''கொலைக் கத்தியாவது இருக்கிறதா...?''

''இருக்கிறது. இதோ தருகிறேன்'' என்று நான் சொன்ன பதிலைக் கேட்டு நண்பர் இடிந்தே போய் விட்டார். சந்தேகாஸ்பதமான நடவடிக்கைகள் எதிலேனும் நான் ஈடுபட்டிருப்பேனோ என்று அவர் நினைத்திருக்க வேண்டும். அதை அவர் சொல்லவில்லை. ஆனால் அவர் என்னைப் பார்த்த பார்வை அப்படித்தான் இருந்தது.

பளபளப்பான அட்டைப்படம் போட்ட புத்தகம் ஒன்றை எடுத்து வந்து வந்தவரிடம் கொடுத்தபோது நான் நண்பரது வெறுப்பு வியப்பாக மாறியதைக் கண்டேன். பின்னே இருக்காதா? கொலைக் கத்தியை எடுக்க உள்ளே போனவன் ஒரு புத்தகத்தைக் கொண்டு வந்து கொடுத்தால் விவரம் புரியாதவர்கள் வியப்படையத்தானே செய்வார்கள்?

குழம்பிக் கிடந்தவர் நெஞ்சைக் குளிர வைக்க முடியாவிட்டாலும் உண்மையைச் சொல்லி அவர் உள்ளத்து வேதனையை அதிகரிக்கத்தான் முடிந்தது என்னால்.

நண்பர் நல்ல இலக்கிய ரசிகர். தமிழார்வம் உள்ளவர். தமிழில் வெளிவரும் புத்தகங்களின் தரத்தை நான் சொல்லக் கேட்டு அவர் வேதனைப்பட்டார்.

என்றும் அழியாத இலக்கியங்களைப் படைக்கப் பயன்பட்ட தமிழ் இத்தகைய 'கொலைகார இலக்கியங்களை' உருவாக்கவும் பயன்படுகிறதே என்று எத்தனையோ காலமாக நானும்தான் ஏக்கப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறேன். என்ன பிரயோசனம்?

எழுத்தோடு தொடர்புள்ள பிரசுரத் தொழிலுக்கு எழுத்தாளன்வந்து விடக் கூடாதென்பது என் அனுபவபூர்வமான அபிப்பிராயம். வேடிக்கையாகத் தோன்றுகிறதல்லவா? உண்மை தெரிந்தால் வேதனைப்படுவீர்கள்.

எழுத்தாளனது இயல்பான ரசனைக்கு இதிலே இடம் கிடையாது. இலக்கிய ரசனையை மறந்து விட்டு இருந்தால்தான் இந்தத் தொழிலைத் திறம்பட நடத்த முடியும். கையைக் கடிக்காமல் காப்பாற்றிக் கொள்ள முடியும். ஏன் என்று கேட்கிறீர்களா?... இதோ பாருங்கள்.....

பிரபல 'ஆந்தைப் பதிப்ப'கத்தின் அதிபர் அவர். 'கைநாட்டு' என்ற பட்டயம் முகத்தில் ஒட்டிக் கொண்




**எழுத்தும் தொழிலும்**

# கையிலே பத்து”

டிருந்தாலும் கர்வமும் தொனிப்பதைப் பார்க்கிறீர்கள் அல்லவா? எழுத்தாளனை அவர் எப்படி நடத்துகிறார், பாருங்கள். அதோ வருகிறாரே அவர் அற்புதமாக எழுதும் திறம் படைத்தவர். ஆனால் அதிர்ஷ்டக்கட்டை; வறுமையின் உடன்பிறப்பு. பதிப்பாளரிடம் பெரிய காகிதக் கட்டு ஒன்றைக் கொடுக்கிறாரே, அது ஒரு மாத காலமாகச் சிந்தித்து இரவு பகலாகக் கண் விழித்து அவர் உருவாக்கிய இலக்கியம்.

பதிப்பாளர் அதனைப் பிரித்துப் பார்க்கக்கூட இல்லையே. பழைய பேப்பர் வாங்குபவனைப் போல் எடை போட்டல்லவா பார்க்கிறார் என்று திகைப்படையாதீர்கள். படித்துப் பார்க்க அவருக்கு அவகாசம் இல்லை. நேரம் இருந்தாலும் படித்து அதன் தரத்தை உணர அவருக்குத் தெரியாது. இதைக் கொண்டு எவ்வளவு பணம் பண்ணலாம் என்று கணக்குப் போடுவதற்குக் கையில் தூக்கிப் பார்த்து எடையைத் தீர்மானித்தாலே போதும்.

“நீ என்னய்யா வளவளன்னு எழுதிக்கிட்டு வரே. இதையெல்லாம் புத்தகமாப் போட்டா யாருய்யா வாங்குவாங்க?”—இது ஆந்தைப் பதிப்பக அதிபரின் முன்னுரை.

இலக்கியகர்த்தா குழைகிறார். அந்த மாதத்தை ஓட்டுவதற்கு அந்தக் காகிதக் கட்டைத்தானே அவர் நம்பியிருக்கிறார்? ஆந்தைப் பதிப்பகத்தார்தானே அதற்கு வழி செய்ய வேண்டும்?



பலவீனத்தைப் புரிந்துகொண்டு விட்டார் பதிப்பாளர். “அவுட்ரைட்டு கொடுங்கய்யா. நூறு ரூபாய் தருவேன். இப்போ பாதி. புத்தகம் வந்ததும் மீதி. என்னய்யா சொல்றே?” பதிப்பாளர் நூலின் உரிமையை முழுமையாகத் தனதாக்கிக் கொள்வதுதான் இந்த ‘அவுட்ரைட்’. புத்தகங்களின் விற்பனைக்கேற்ப விலையில் இத்தனை சதவிகிதம் என்று எழுத்தாளருக்கு ‘ராயல்டி’யாகக் கொடுப்பதும் உண்டு.

எழுத்தாளருக்கு இத்தாக்குதல் புதிய ஒன்றல்ல. இது குறித்து அவர் மனத்துக்குள் வேதனைப்படலாம். ஆனால் வெளிப்பட முடியாது. அந்த மாதத்துக்கு வழி செய்தாக வேண்டும். அவரை நம்பி நான்கு ஜீவன்கள் உள்ளன. சரியென்று தலையாட்டுகிறார். சில நோட்டுகள் கைமாறுகின்றன. ஒப்பந்தத்திலும் ஞாபகமாகக் கையெழுத்தை வாங்கிக் கொள்கிறார் ஸ்ரீமான் ஆந்தை.

“‘அன்புக் கோயில்’னு பெயர் வெச்சா ஒரு பயலும் வாங்க மாட்டான். ‘அர்த்தராத்திரிப் பிசாசு’ன்னு மாத்திப்பிடறேன்.” இது ஆந்தையின் முடிவுரை. “எப்படி வேண்டுமானாலும் செய்துகொள்ளுங்கள்” என்று கூறிவிட்டுப் போகிறாரே, அந்த எழுத்தாளர், அவர் உள்ளத்து வேதனையை உங்களால் உணர முடியுமா?




முடியாது. நிச்சயமாக முடியாது. அதற்கு நீங்களும் ஓர் எழுத்தாளராக இருக்க வேண்டும். இத்தகைய அனுபவம் உங்களுக்கும் ஏற்பட்டிருக்க வேண்டும்.

“வாங்க ...வாங்க .... வாங்க.” தம் இடத்தினின்றும் பரபரப்புடன் எழுந்து வந்து கம்சன் பதிப்பக முதலாளி ஒரு கரிய திருமேனியை வரவேற்கிறார். காரியாலயமே அமளிப்படுகிறது. மந்திரிக்குக்கூட அவ்வளவு மதிப்பு இருக்காது. பதிப்பாளர் விழுந்து விழுந்து உபசாரம் செய்கிறார். ‘விசிறியைப் போடு’ என்று ஒரு பையனை விரட்டுகிறார். காப்பி வாங்கி வரச் சொல்லி ஒருவனுக்குக் கட்டளையிடுகிறார். காலைப் பிடித்துவிடச் சொன்னாலும் தயாராக இருக்கும் பாவனையில் கம்சன் நிற்கிறார்.

அணைந்த திவட்டியைப் போல் காட்சி தரும் அந்தப் பெரிய மனிதர் யார்? அசடு வழியச் சிரிக்கும் அவருக்கு அறிவு வளர்க்கும் இடத்திலே என்ன வேலை? அதோ கம்சன் நுழைகிறார், பாருங்கள்.

''இந்த வருசம் உங்களை நம்பித்தான் ஏராளமான புத்தகத்தைப் போட்டு வைச்சிருக்கேன். நீங்க கை கொடுக்கல்லேன்னு என் கதி அவ்வளவுதான்.''

''லைபரிக்கு நெறையப் பணம் வந்திருக்கய்யா. லிஸ்ட் அனுப்பிச்சிட்டீங்க இல்லே?''

என்ன பேசுகிறார் என்று புரியவில்லையா? லைப்ரரி என்று அவர் வாயில் நுழையாவிட்டால் அதற்காக அவரைக் குறை கூறலாமா? 'லிஸ்டை'த்தான் அவர் 'லிஸ்ட்' என்கிறார். அதையெல்லாம் அவர் படித்துத் தொலைக்கா விட்டால் என்ன? லைப்ரரி கமிட்டிக்குத் தலைவராக இருப்பதற்கு அதெல்லாம் தடையா என்ன? ஆண்டுதோறும் புத்தகங்கள் வாங்குவதற்காக ஐம்பதாயிரம் ரூபாய் செலவு செய்ய அதிகாரம் அவரிடம் இருக்கிறதே. பிரமாத உபசாரம் நடக்காதா பின்னே?

''பில்லிலே பத்து; கையிலே பத்து தந்திடறேன். இப்பவே வேணுமானாலும் நீங்க வாங்கிக்கங்க.''

ஆமாம், இது என்ன? இது வியாபார ரகசியம். நீங்கள் தெரிந்துகொள்ளக் கூடாத விஷயம். வாருங்கள், போகலாம்.

''முந்நூறு காப்பி விற்றிருக்கிறதுன்னு கணக்குச் சொல்றீங்க. ராயல்டி கணக்கிலே முப்பது ரூபாய்கூடத் தரலியே! இது நியாயமா?'' 'அவுட்ரைட்டு'க்குத் தம்மை அடிமையாக்கிக் கொள்ளாமல், தமது படைப்பின் மூலம் ஏராளமான வருவாய் வரும் என்று எண்ணி 'ராயல்டி' அடிப்படையில் புத்தகத்தை வெளியிடக் கொடுத்த பிரபல எழுத்தாளர் ஒருவரின் புலம்பல் இது. மூன்று ரூபாய் விலையுள்ள புத்தகம் முந்நூறு விற்றிருந்தால் தொள்ளாயிரம் ரூபாய் வந்திருக்க வேண்டுமே. இந்தப் பாவி ஒரு நூறு ரூபாய்கூட நமக்குத் தரவில்லையே என்ற எரிச்சல் அவருக்கு.

''கவனமாகக் கணக்குப் போட்டுட்டீங்க. உருப்படியா பணமா வந்தது எவ்வளவுன்னு உங்களுக்கு எங்கே தெரியும்? பெரிய புத்தக வியாபாரிங்களெல்லாம் இப்போ தாங்களே புத்தகம் அச்சிட ஆரம்பிச்சுட்டாங்க. நமக்கு அவர்களிடமிருந்து வரவேண்டிய பாக்கிக்குப் பெரும்பாலும் அவங்க புத்தகம்தான் வருது. அதை வித்துப் பணமாக்கிக்கிடணும் நான். ஒழுங்காகப் பணம் அனுப்புறவங்க ஒண்ணு ரெண்டு தேறினால் பெரிசு.''—இது பதிப்பகத்தாரின் சமாதானம். அவர் சொல்வதிலும் உண்மை இல்லாமல் இல்லை. ஏதோ கொஞ்ச நஞ்சம் வருகிற பணத்திலே அவர் எவ்வளவு பிரச்னைகளைக் கவனிக்க வேண்டும்? பிரஸ், பேப்பர் கடைக்காரர், வீட்டுக்காரர், நிர்வாகச் செலவு — இவ்வளவு சோதனைகளையும் மீறியல்லவா 'எதையோ எழுதிக் கொடுத்து' விட்டுப் போய் விட்ட அப்பாவி எழுத்தாளனைப் பற்றி நினைக்க முடியும்?

ஆனாலும் இந்த எழுத்தாளர்கள் ரொம்ப மோசம். பணம் இல்லாத நேரத்தில்தான் 'பகவானை'ப் போல வந்து சோதிப்பார்கள்!

குழந்தைகளுக்குக் கொலைக் கதைகளையும் பெரியவர்களுக்கு விபசாரக் கதைகளையும் புத்தகமாகப் போட்டு அது போன்ற புத்தகங்கள்தான் விற்பனையாகும் என்று நிலை நாட்டிப் படிப்பவர்களுடைய ரசனையையே தாழ்த்தி விட்டார்களே! இதற்குக் காரணம் என்னவென்று சொல்வது?

புத்தகத் தொழில் இன்றுள்ள மோசமான நிலையில் இருப்பதற்குப் பதிப்பாளர்களை மட்டும் முழுக் குற்றவாளிகளாக்கிவிட முடியாது. எழுத்தாளர்களும் தங்கள் பங்கைக் குறைவின்றிச் செய்து முடித்திருக்கிறார்கள்.

எழுத்தாளர் பிரசுரத் தொழிலில் இருப்பதிலே இன்னொரு பெரிய சங்கடம் இருக்கிறது. எழுத்துலகத்திலே அவருக்கு நிறைய நண்பர்கள் இருப்பார்கள். அத்தனை பேருடைய முகமும் கோணாமல் நடந்துகொள்வது நடக்கக் கூடிய காரியமா?

நாம் எழுதுகிற எல்லாமே புத்தகமாக வெளிவரத் தகுதியுள்ளவை என்றுதான் ஒவ்வொருவரும் எண்ணுகிறார்கள். முதல் போட்டுத் தொழில் நடத்துபவன் அப்படி எண்ண முடியாதல்லவா? பதிப்புரை நான்கு வரிகூட எழுதத் தெரியாத பதிப்பாளர்கள்தான் தமிழ் நாட்டில் பெரும்பாலோர். தமது இலக்கியப் படைப்புகளுடன் படையெடுக்கும் எண்ணற்ற எழுத்தாளர்களை இவர்களால் எளிதாகச் சமாளித்து விட முடியும். வேண்டுமென்றால் வாங்கிக் கொள்ளலாம்; வேண்டாமென்றால் முகத்தில் அடித்தாற்போல் எதையாவது சொல்லி அனுப்பி விடலாம்.

எழுத்தாளர் — பதிப்பாளரால் அது முடியவே முடியாது. தமது இயலாமையைக் கௌரவமாக மறைத்துக் கொண்டு தாக்குதலைச் சமாளிக்க வேண்டும். இது ஒரு தனிக் கலை. எதிரி அதிகத் திறமையுள்ளவராக இருக்கும்போது எதிர்பாராத வீழ்ச்சியும் ஏற்பட்டு விடும். அப்போது எழுந்து நின்று ஈடு கொடுக்கா விட்டால் தலையெடுக்கவே முடியாது.

என்ன செய்வது? புத்தகத்தைப் போடச் சக்தி இல்லை என்று வெளிப்படையாகச் சொல்ல முடியுமா? மகத்தான படைப்பு என்று எண்ணிக் கொண்டிருப்பவரின் மண்டையில் அடித்தாற்போல் அந்த 'இலக்கியத்தின் உண்மையான மதிப்பை' வெளிப்படையாகச் சொல்லிவிட முடியுமா? அப்புறம் எழுத்தாள வட்டாரத்திலே எதிரிகள் அல்லவா பெருகி விடுவார்கள்?

எழுத்தும், பிரசுரத் தொழிலும் இணைந்த ஒன்றுதான். ஆனால் 'தோல்வி கண்ட மனிதனாகத் தெருவில் தலைகுனிந்து நடமாடும் நிலை' ஏற்படாதிருக்க வேண்டுமானால் அசாதாரண மன உறுதியும், அகட விகட சாமர்த்தியமும் வேண்டும். பழைய பேப்பர் வியாபாரிகூட இலக்கிய வியாபாரத்தை — அதாவது பிரசுரத் தொழிலை எளிதில் திறம்பட நடத்தி வெற்றி கண்டுவிட முடியும். ரசனையையும், இலக்கிய மதிப்பையும், கௌரவத்தையும், எல்லாவற்றுக்கும் மேலாக மனச்சாட்சியையும் புறக்கணித்து விட்டு இன்றுள்ள நிலையில் பிரசுரத் தொழிலை நடத்த ஓர் எழுத்தாளனால் முடியுமா? என்னுடைய அனுபவம் முடியாது என்றுதான் சொல்கிறது.

# இதோ வந்து விட்டது...



*புதிய* ராலீஸ் 16
வலைக்கண்
பாதுகாப்புள்ள
மேஜை விசிறி



**பளிச்சிடும் புதிய அம்சங்கள்:**

- புதிய 'வெபாஸிடர்' மோட்டார்
  உங்கள் அறைக்கு அதிகக் குளுமையூட்டி, உங்கள் மின்சாரச் செலவில் கால் பங்கை மிச்சப்படுத்துகிறது.
- புதிய 'பயோனே மாதிரி' ஸ்பீட் கண்ட்ரோல்கள்
  சுலபமான, தரமான முறையில் வேக மாறுதலை உறுதி செய்கிறது.
- புதிய அபிவிருத்தியடைந்த அமைப்பு
  ஆபத்தில்லாத புதிய வலைக்கண் பாதுகாப்பு மற்றும் பளபளப்பான, வழவழப்பான வளைந்த உருவமைப்பு.
- கண்கவர் வர்ண வகைகள்
  தவிர 2 வருடங்களுக்கு உத்தரவாதமுண்டு.
  மேலும் கிடைக்கும் மாதிரிகள்: ராலீஸ் 16" வலைக்கண் மேஜை விசிறி, ராலீஸ் 16" பெடஸ்டல் விசிறி, மற்றும் எக்ஸாஸ்ட் விசிறி.

**தயாரிப்பில் ராலிஸ் காட்டும் சிரத்தை உங்களுக்கு மேலும் சிறந்த விசிறியை அளிக்கிறது.**

*சென்னை, கேரளா மற்றும் தென் மைசூருக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்*

மெஸர்ஸ் மகமத் இப்ராஹிம் & கோ., பிரைவேட் லிமிடெட்

7/8, மவுண்ட் ரோடு, சென்னை - 2 — 113-H, பிரிகேட் ரோடு, பெங்களூர்

# அறிவுக் கனலே, அருட் புனலே!

ரா. கணபதி

14

கடலிலிருந்து எழுந்த மேகங்கள் மழையாகப் பொழிந்து நதி பிறக்கிறது. பிறந்த நதி கடலிலேயே கலக்க வருகிறது. ஆனால் கடலுக்கும் நதிக்குமிடையே ஒரு மேட்டைச் சமைத்துக் கொண்டு விடுகிறது. கடல் சும்மா இருக்கிறதா? தனது கோடானு கோடி அலைக்கரங்களை அசைத்து நதியை அழைத்தவாறேதான் இருக்கிறது. 'ஹோ' வென்று கூவிக் கூவித் தன் குழந்தை நதியைக் கூப்பிட்டபடியே தான் இருக்கிறது. தானே தத்தித் தத்தி வந்து அந்த மேட்டைத் தகர்க்கவும் செய்கிறது. பவதாரிணியும் இப்படித்தான் கதாதரரைத் தன்பால் அழைத்துக் கொண்டேயிருந்தாள்.

மறு நாள் காலை ஜமாபுகூரிலிருந்து மீண்டும் தக்ஷிணேசுவரத்துக்கு வந்தார் கதாதரர். ஏதோ ஒன்று அவரையும் அறியாமல் அவரை அங்கே இழுத்துக் கொண்டிருந்தது.

பகல் போஜன வேளை வரையில் கதாதரர் தக்ஷிணேசுவரத்திலேயே தான் இருந்தார். தமையனார் ஜமாபுகூர் வருவதற்கு அறிகுறியே காணவில்லை. 'ஓ, அண்ணா! இங்கேயே தான் இன்றும் உண்ணப் போகிறீரா? அப்படியானால் நான்....?'

பழைய வழக்கத்தை விடுவது கதாதரருக்கு இயலாததாக இருந்தது. எனவே பசி வயிற்றைக் கிள்ளத் தொடங்கியவுடன் அவர் ஜமாபுகூரை நோக்கி நடையைக் கட்டினார்.

அப்புறம் ஒரு நாளாச்சு, இரண்டு நாளாச்சு...ஒரு வாரமும் ஆகி விட்டது. 'டோல்' இருப்பதாக அண்ணாவுக்குப் பிரக்ஞையே இல்லை போலிருந்தது. அவர் ஜமாபுகூர் பக்கம் எட்டிக் கூடப் பார்க்கவில்லை. தம்பி என்ன செய்கிறானோ என்ற கவலை அவருக்கு இருப்பதாகவே தெரியவில்லை. அவரைக் குற்றம் சொல்லி என்ன பயன்? வெள்ளத்தில் எதிர் நீச்சுப் போடத் துரும்பினால் முடியுமா என்ன? தேவி மந்திரம் உபதேசிக்கப் பெற்ற தூய சாக்தராகிய ராமகுமாரைக் காளி மாதா தன்பாற் படுத்திக் கொண்டு விட்டாள். அவருக்குப் பாடசாலை, பையன்கள், கதாதரர் இந்த நினைவுகளே இல்லை.

ஒரு வாரமும் ஆனபின் கதாதரரால் சும்மா இருக்க முடியவில்லை. அண்ணனைக் காண—அண்ணனைக் காண மட்டும்தானா? — அவர் மீண்டும் தக்ஷிணேசுவரத்துக்குப் புறப்பட்டார்.

ராமகுமார் அவரிடம் சொன்னார்: ''குழந்தாய்! நான் தேவியின் பூஜாரியாக நிரந்தரமாக இங்கேயே இருக்கத் தீர்மானித்து விட்டேன். நீயும் எனக்கு உதவியாக என்னுடன் இரு. பிரசாதத்தில் பேதம் பார்க்காதே. நீ எவ்வளவோ பக்தி செய்வாயே, அந்த அம்பிகைக்கு நிவேதனமாகும் உணவல்லவா இது? நீ எவ்வளவோ பக்தி பண்ணுவாயே, அந்தக் கங்காதீர்த்தத்தில் பக்குவமானதல்லவா இந்த உணவு? மனக் கலக்கத்தை விட்டு என்னுடனேயே இரு. டோலைக் கலைத்து விடலாம்'' என்று.

கதாதரர் அண்ணாவின் முகத்தையே குழப்பத்துடன் பார்த்தார். அவருடைய இமைகள் துடித்தன; நாசி முனை துடித்தது; செம்பவள வாய் துடித்தது. தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் துக்கம் தொண்டையை அடைக்க அவர் சகோதரரைக் கேட்டார்:

''உண்மையாகச் சொல்லுங்கள் அண்ணா! நீங்கள் அம்பிகைக்குச் சேவை செய்ய வேண்டும் என்ற காரணத்துக்காகத்தான் இங்கே இருக்கிறீர்களா? அல்லது பாடசாலை படுத்து விட்டதால் எப்படியும் ஒரு ஜீவனோபாயம் வேண்

மென்று இங்கே தங்கியிருக்கிறீர்களா? நம்முடைய அப்பா ஒருபோதும் இது போல யாசகம் பெற்றதில்லையே. வேண்டாம் அண்ணா நமக்கு இந்தப் பிழைப்பு. பூஜைக்காகவே பூஜை செய்வோம்; பிழைப்புக்காக வேண்டாம்.''

கதாதரரின் வார்த்தையைக் கேட்ட ராமகுமார் அவமானப்படவில்லை. தமையனை எதிர்த்து அடக்கமின்றிப் பேசுவதற்காக கதாதரர்தான் அவமானத்தில் குன்றிப் போனார்.

ராமகுமார் ஏன் அவமானப்பட வேண்டும்? அவருடைய அந்தரங்க சுத்தம் அவருக்கே தெரியாததா என்ன? எனவே தம்பியிடம் துளிக் கூடச் சினமுற்று அவர், ''கதாயீ! நான்சொல்லி உன்னை நம்பவைப்பது இனி சாத்தியமில்லை. அம்பாளின் திருவுள்ளத்தையே தெரிந்து கொள்ளுவோம், வா. தர்ம பத்திரம் போட்டுப் பார்த்து இனி என்ன செய்ய வேண்டும் என்று முடிவு செய்வோம்'' என்றார்.



நாம் திருவுள்ளச் சீட்டு என்று காகிதத்தில் எழுதிக் குலுக்கிப் போட்டு எடுத்து முடிவு செய்கிறோமல்லவா? இதையே காகிதத்துக்குப் பதில் சத்தியமூர்த்தியான சிவனுக்குகந்த புனிதமான வில்வப் பத்திரத்தில் எழுதுவது வங்காள நாட்டு வழக்கம். தர்மபத்திரம் என்பது இதுவே.

தர்மபத்திரம் போட்டுப் பார்த்தார்கள். ராமகுமார் தக்ஷிணேச்வர ஆலயத்திலேயே அர்ச்சகராகத் தங்க வேண்டும் என்றுதான் அது கூறிற்று. வேறெப்படிக் கூறும்? கதாதரர் தக்ஷிணேச்வரத்தையே தமது இருப்பிடமாக்கிக் கொண்டு ராமகிருஷ்ண பரமஹம்ஸராக வேண்டுமல்லவா?

திரு உள்ளச் சீட்டுப் போட்டுப் பார்த்த பின் கதாதரரின் உள்ளம் சற்றே நிம்மதி பெற்றது. தமது தமையனார் தக்ஷிணேசுவரத்தில் இருக்க இசைவு தந்தார். தமையனார் தம்பியையும் உடன் இருக்கச் சொன்னார்.

''உணவு?'' என்றார் கதாதரர் குழந்தையின் பிடிவாதத்துடன்.

ராமகுமார் பரிவோடு சிரித்தார்.

''சரி, நீ பிரசாதத்தைச் சாப்பிட வேண்டாம். உக்கிராணத்திலிருந்து உனக்கு அரிசியும், பருப்பும், கறிகாயும் தரச் சொல்கிறேன். தூய்மையின் உருவான தேவி பாகீரதி அதோ காலடியில் ஓடுகிறாள். கங்கா தீர்த்தத்தில் நீயே சமைத்து உண்டு வா'' என்று கூறினார்.

கதாதரரும் இணக்கம் தெரிவித்தார்.

ரம்மியமான கங்காதீரம், ரமணீயமான சோலைச் சூழல், ரஞ்சகமான ஆலயம் — இந்தச் சுற்றுப்புறத்தில் ரஸிக இதயம் படைத்த கதாதரர் சிந்து

சிறிதாக உருகத் தொடங்கினார். மெல்ல மெல்ல தக்ஷிணேசுவரமே அவருக்கு வேறொரு கமார்புகூராயிற்று. ஒரு வித்தியாசம்: கமார்புகூரில் குழந்தை கதாதரன் இளைஞனானான். இங்கே இளைஞர் கதாதரர் மீண்டும் குழந்தையாக— ஜகன்மாதாவின் பச்சைக் குழந்தையாகப் — போகிறார்!

ராஸமணியின் இளைய மாப்பிள்ளையும், அவளது பூரண விசுவாசத்தைப் பெற்றிருந்தவருமான மதுராநாத விசுவாஸரின் கவனத்தைக் கவர்ந்தார் கதாதரர். அவரிடம் ஏதோ ஒரு விசேஷத் தூய்மை இருக்கிறது என்று கண்டுகொண்டார் மதுராநாதர். எப்படியேனும் கதாதரரை அர்ச்சகராக்கி விட்டால் பவதாரிணியின் சாந்நித்தியம் சிறப்புற விளங்கும் என்று அவர் நம்பலானார். அந்த நம்பிக்கை பாரதம் செய்த பாக்கியமாகும். முத்தைத் தங்கத்தில் இழைக்கும் பொற்கொல்லர் போல, கதாதரரைத் தேவியிடம் ஈடுபடுத்திய மதுராநாதரைப் பரமஹம்ஸ பக்தர்கள் ஒரு நாளும் மறக்க மாட்டார்கள்.

பரமஹம்ஸ பக்தர்கள் என்றும் நினைவில் இருத்தும் இன்னொருவரும் இச்சமயத்தில் தக்ஷிணேசுவரத்துக்கு வந்து சேர்ந்தார். கதாதரரின் அத்தங்காள் பிள்ளையும் அவரை விட நாலைந்து பிராயம் சிறியவருமான ஹிருதயராம் முகோபாத்தியாயர்தான் அவர். 'ஹிருதயர்' என்று செல்லமாக அழைக்கப்பட்டவர்.

தக்ஷிணேசுவரத்தில் குரு மஹராஜின் இதயக் கடலின் ஆழத்தில் புரண்ட நீரோட்டம் பற்றியும் அங்கு கொழித்த முத்தும் பவளமுமான அநுபவங்களைப் பற்றியும் நாம் அறியும் அநேக விவரங்கள் ஹிருதயர் மூலமாக வெளி வந்தவையேயாகும். வேலையில்லாதிருந்த ஹிருதயர் தக்ஷிணேசுவரத்தில் ராமகுமாருக்கு உதவியாக இருப்பதற்கென வந்து சேர்ந்தார். வாட்டசாட்டமாக வளர்ந்திருந்த அழகர் ஹிருதயர் கதாதரரிடம் பேரன்பு பாராட்டி வந்தார். அவருடைய நிழல் போல எப்போதும் பின்தொடர்ந்து வந்தார். எனினும் கதாதரர் எங்கே போனார் என்று தெரியாமல் அவ்வப்போது ஹிருதயரிடமிருந்து நழுவிவிடும் சந்தர்ப்பங்களும் உண்டு. 'சின்ன மாமா தன்னை ஏய்த்து விட்டுத் திடீர் திடீரென்று காணாமல் போய் விடுகிறாரே! எங்கே செல்லுவாரா யிருக்கும்? அப்போது என்ன செய்வாரா யிருக்கும்?' என்று குழப்பிக் கொண்டார் ஹிருதயர்.

குழந்தைப் பருவத்து ஆசைகள் மீண்டும் கதாதரருக்கு உண்டாயின. கங்கையின் கசிந்த களிமண்ணைக் கொண்டு வந்து கங்காதரனின் பதுமை ஒன்றைச் செய்தார். உடுக்கையும் சூலமும் ஏந்திய சுந்தரமூர்த்தியாக அவன் அவரது கைகளில் நெகிழ்ந்து உருவானான். 'பசுவேறும் தங்கள் பரமனை' மண்ணில் கண்டு தாமும் நெகிழ்ந்து அவனுக்கு ரிஷப வாகனம் அமைத்துக் கொடுத்தார் கதாதரர். பிறகு அந்தப் பதுமையையே பூஜிக்கலானார். அப்போது அவ்வழியே வந்த மதுராநாதர் கதாதரரையும் அவர் வழிபட்ட பதுமையையும் கண்டார். இப்படித் தெய்விகம் பிலிற்றும் பதுமை அவருக்கு ஒரு புதுமையாக இருந்தது.

ஹிருதயரிடம் அவர் அது போன்ற அழகிய பதுமை எங்கு கிடைக்கும் என்று விசாரித்தார்.

''சின்ன மாமா எங்கு இருக்கிறாரோ அங்கு கிடைக்கும் — அவருக்கு மனசு இருந்தால்'' என்றார் ஹிருதயராமர்.

மதுராநாதருக்கு ஆச்சரியமாகி விட்டது! அந்த அழகிய பதுமையை அவர் ராணி ராஸமணிக்கு அனுப்பிவைத்தார். ராணியும் அதன் அழகை வியந்தாள். அந்த அழகைப் படைத்தவர் கதாதரர் என்றறிந்து அதனினும் வியந்தாள். இதன் மீது, கதாதரரை அர்ச்சகராக அமர்த்த வேண்டும் என்ற தமது விருப்பத்தை மதுராநாதர் ராணியிடம் தெரிவித்தார்.

உடல் தளர்ந்து வந்த ராமகுமாருக்கு மதுராநாதரின் யோசனை மிகவும் பிடித்திருந்தது. தம்பி பூஜை செய்யத் தாம் மேற்பார்வையிடுவது மிகவும் சௌகரியமாயிருக்கும் என்றே அவர் கருதினார். ஆனால் விந்தையிலும் விந்தையாக கதாதரருக்கு அந்த யோசனை துளிக்கூடப் பிடிக்கவில்லை. காளி மாதாவின் பூஜையே வாழ்க்கை என்று பிற்காலத்தில் இருக்கப் போகும் அவர் முதலில் அதற்கு மனம் கொள்ளவில்லை. காரணம், அவர் தமது அந்தரங்கசுத்தத்தைத் தாமே அறிந்திராததுதான். முன்பு தமையனிடம் கேட்டதை இப்போது தம்மிடமே கேட்டுக் கொண்டார். 'பவதாரிணிக்குப் பூஜை புரிகிறேன் என்றால் அது உண்மையில் சர்வேசுவரிக்குச் செய்யும் சேவையா, அல்லது ராஸமணிக்கும், மதுராநாதருக்கும் செய்யும் சேவையா?''

இந்தத் தமது சஞ்சலத்தை ராமகுமாரிடமும் கூறினார் கதாதரர். அதிலிருந்து மதுராநாதரின் கண்ணிலேயே படாமல் இருக்கலானார்.

# நான்கு முக்கியத் தேவைகள்

உணவு, உடை, உறையுளைப்போன்று ஆயுள் இன்சூரன்சும் முக்கியத் தேவைகளுள் ஒன்று. குடும்பம் தலைவரை இழந்து தவிக்க நேர்ந்தால், அக்குடும்பத்திற்கு உணவு, உடை, உறையுள் ஆகிய இம்மூன்றையும் வழங்க உறுதி தருகின்றது ஆயுள் இன்சூரன்சு. சந்தர்ப்பம் உங்களுக்கு உதவாமல் போகலாம். ஆகவே, உங்கள் வரவுசெலவுக் கணக்கில் ஆயுள் இன்சூரன்சிற்கு முதலிடம் கொடுங்கள். ஆயுள் இன்சூரன்சு புறக்கணிக்கப்பட்டால், உங்கள் குடும்பத்தின் எதிர்காலமும் புறக்கணிக்கப்பட்டுவிடும் என்பதை நினைவுகொள்ளுங்கள்.

ஆயுள் இன்சூரன்சு முகவரை (ஏஜெண்டை) நாடுவீர் இன்றே.



## ஆயுள் இன்சூரன்சு

போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை.

ASP/LIC/98

# சுந்தரியின் சிற்பங்கள்



'ரெம்பிராண்ட்' வரைந்த ஓவியம் ஓர் அற்புதம் என்றால் அந்த ஓவியத்தை ஒரு கோடியே பதினைந்து லட்சம் ரூபாய் கொடுத்து வாங்கத் துணிகிற கலை ஆர்வம் இருக்கிறதே, அதுவும் ஓர் அற்புதம்தான்.

இத்தகைய கலை ஆர்வம் மனிதனை ஆட்கொண்டிருப்பதால்தான் அவன் விலங்கினங்களைக் காட்டிலும் மேம்பட்டவனாகிறான். இந்தக் கலை ஆர்வத்தைத் தூண்டுகிற கலைஞரும் போற்றப்படவேண்டியவர்கள். 'மலைப் பிரதேசக் குடும்பத்தினர்' என்ற தமது சிற்பத்தின் அருகில் தோற்றமளிக்கும் ஸ்ரீமதி சுந்தரி சுவாமிநாதன் மேனாடுகளில் பயிற்சி பெற்றுத் தமது கலைத் திறனை வளர்த்துக் கொண்டவர். இவரது சிற்பங்களின் கண்காட்சியைச் சமீபத்தில் டில்லியில் அமைச்சர் திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் திறந்துவைத்தார். பாரத நாட்டின் பெண் குலத்துக்கும் பெருமை தேடித் தருகிற வகையில் ஸ்ரீமதி சுந்தரி சிறப்பெய்த வாழ்த்துகிறோம்.

என்றாலும் அவரால் தக்ஷிணேசுவரத்துக்கு அந்தக் கங்கையில் ஒரே முழுக்குப் போட்டுவிட்டுக் கமார்புகூர் செல்லவும் முடியவில்லை. சூரியனிலிருந்து பிரிந்த கிரகங்கள் மீண்டும் அதனோடு சேருவதில்லை; ஒரேயடியாக அதனை விட்டுப் பிரிந்து போவதுமில்லை; ஏதோ ஒரு குறிப்பிட்ட தூரத்தில் விலகி நின்று அப்படியே சூரியனை அவை சுற்றிச் சுற்றி வருகின்றன அல்லவா? இதே போன்ற ஆகர்ஷணமும் விலக்கமும் தான் அப்போது பவதாரிணிக்கும் கதாதரருக்கும் மிடையே இருந்து வந்தது.

ஆனால் இந்தக் கிரகம் மூலப் பொருளில் ஒன்றுபடுவதால் உற்பாதம் எதுவும் நேராது. ஏனெனில் இது உண்மையில் 'சாயா கிரகம்' எனப்படும் நிழல்தான்! நிழலும் அந்த நிழலுக்குக் காரணமான வஸ்துவும் ஒன்றுவதால் என்ன நேரிட்டு விடும்?

எவ்வளவுதான் கதாதரர் 'அஞ்ஞாத வாசம்' செய்தாலும் ஒருநாள் மதுரா நாதரின் பார்வையில் அகப்பட்டுக் கொண்டார். ஹிருதயருடன், கதாதரர் உரையாடிக் கொண்டிருந்த போது தூரத்திலிருந்து அவரைக் கண்டார் மதுராநாதர். கதாதரர் வழக்கம் போலவே நழுவப் பார்த்தார். அதற்குள் மதுராநாதரின் பணியாள் ஓடி வந்து அவரை அடைந்தான். "பாபு உங்களைப் பார்க்கப் பிரியப்படுகிறார்" என்று அவரிடம் கூறினான்.

அப்படியும் கதாதரர் தயங்கியே நின்றார்.

"என்ன மாமா இப்படிச் செய்கிறீர்கள்?" என்று கேட்டார் ஹிருதயர் பயந்துபோய்.

"அவர் எதற்குக் கூப்பிடுகிறார் என்று தெரியும். பூஜாரி யாகுமாறு என்னை அவர் கேட்டுக் கொள்ளப் போகிறார்" என்றார் கதாதரர்.

"இருக்கட்டுமே! அதனாலென்ன? தெய்வப் பணி செய்ய உங்களுக்குக் கசக்கிறதா, என்ன?"

"அதப்படியில்லை ஹிருதயா! இது மானுடர்களுக்குச் செய்யும் ஊழியமாகிவிடுமோ என்று பயப்படுகிறேன். அதோடு தேவிக்கு நான் பூஜை செய்வதென்றால் அவளுக்குச் சாத்தியுள்ள திருவாபரணங்களுக்கெல்லாம் பொறுப்பேற்றாக வேண்டும். பொன்னையும் பொருளையும் பெரிதாக மதித்து வைத்துக் காக்கும் லௌகிக வாழ்வுக்கும் இதற்கும் இம்மியும் வித்தியாசமில்லை" என்றார் கதாதரர்.

தெய்வப் பணியே மானுடப் பணியாகிவிடுமோ என்று பயந்த இதே கதாதரர்தான் பிற்காலத்தில் மானுடப் பணியே தெய்வப் பணி என்று மூரசறையப் போகிறார். அந்தப் பணிக்காகத் தமது பிரிய சிஷ்யர் விவேகாநந்தர் ஆத்ம மோட்சத்தையும் தியாகம் செய்ய வேண்டும் என்று கட்டளையிடப் போகிறார். பொன்னையும்பொருளையும் சேர்த்து, ஆனால் சேர்ப்பவன் அதனிலிருந்து விலகியிருந்து மக்கள் பணிக்காக அவற்றை நிர்வகிக்கும் 'துறவற இல்லற'த்தை விவேகாநந்தருக்கு அளிக்கப் போகிறார்!

கதாதரர் எதிர்பார்த்ததையேதான் அவரிடம் கூறினார் மதுரா நாதர். மதுராநாதரிடம் கதாதரர் நகை நட்டுக் கணக்கெல்லாம் எடுத்துச் சரிபார்க்கும் காரியம் தம் இயல்புக்கு ஒத்து வராது என்று தெரிவித்தார்.

"அதனால் என்ன? உங்களுக்கு அந்தக் கவலை வேண்டாம். ஹிருதயராம் அதைக் கவனித்துக் கொள்ளட்டும். இப்போதைக்கு உங்கள் தமையனாரே பூஜையும் புரியட்டும். ஆனால் நீங்கள் தேவியின் திருவுருவத்துக்கு

உங்கள் கையால் அலங்காரம் செய்ய வேண்டும். நீங்கள் செய்த பதுமையைக் கண்ட நானாக உங்கள் கலையுள்ளம் எனக்குப் புரிந்துவிட்டது. எனவே, இந்தப் பொறுப்பை நீங்கள் தயவு செய்து ஏற்றுக் கொள்ள வேணும்'' என்றார் மதுரா நாதர்.

அன்னை குழந்தைக்கு அலங்காரம் செய்வது தனி அழகு. குழந்தை அன்னைக்கு அலங்காரம் செய்வது அதை விட அழகு. அந்த அழகுப் பணிக்கு கதாதரரால் ஒப்புதல் அளிக்காதிருக்க முடியவில்லை.

நதியும் கடலும் நெருங்கத் தொடங் கின. கடலின் ஓர் அலை மடிந்து விழும் போது அதிலிருந்து குதித்தெழுந்து உதிரும் ஓரிரு நீர்ச் சுடர்களும் நதிக் கரத்தின் விரல் நுனியைப் பட்டும் படா மல் தீண்டி விட்டன.

அன்றைக்கு ஜன்மாஷ்டமி.

கண்ணன் பிறந்தான் - எங்கள்
கண்ணன் பிறந்தான்....
கங்கையும் வந்தாள் - கலை
மங்கையும் வந்தாள் இன்பக்
காளி பராசக்தி அன்புடன் எய்தினள்

என்று கவி பாரதி பாடியது போலவே கங்கைக் கரையில் காளி மாதாவின் திருக் கோயிலில் கண்ணையனின் ஜயந்தி கொண்டாடப்பட்டது.

தக்ஷிணேசுவர ஆலயம் சமரசத்துக்கு ஒரு சின்னம். பவதாரிணியை முக்கிய மான தெய்வமாகக் கொண்டு அங்கு ராதா கோவிந்தனும், துவாதச லிங்கத் திருமேனியரும் எழுந்தருளி யிருந்தனர்.

கோகுலாஷ்டமி ஆன கையோடு நந்த உற்சவம் என்று ஒன்று கொண் டாடுவது அந்தச் சீமையில் வழக்கம். தக்ஷிணேசுவரத்தில் நந்தோத்ஸவத் தன்று அபிஷேகஆராதனைகள் முடிந்தன. ராதாதேவியை மஞ்சத்திலிட்டு விட்டு எம்பிரானையும் விடாயாற்றுவதற்காக சந்நிதியிலிருந்து எடுத்து வந்தார் அந்தக் கோயிலின் அர்ச்சகரானக்ஷேத்திரநாதர்.

குளிர் பூங்காற்று வீசும்போது பேரிடி இடிப்பது போல அப்போது அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. க்ஷேத்திர நாதர் கோவிந்த விக்கிரகத்தைக் கை தவறவிட்டார். அது தரையில் 'ணங்' கென்று விழுந்தது. ஆஹா, என்ன அ ப ச ா ர ம்! 'பொன்றச் சகடம் உதைத்த' பொற் பாதம் உடைந்து விட்டது. அவ்வளவு பெருடைய உள்ள மும் துணுக்குற்றது.

ராஸமணி விம்மி வேர்த்துப் போனாள். இனி செய்ய வேண்டிய தென்ன என்றறிய சாஸ்திரக்ஞர்களை வரவழைத்தார் மதுராநாதர். அவர்கள் தங்கள் புத்தியையும், புத்தகங்களையும் புரட்டிப் புரட்டிப் பார்த்தார்கள். 'பின் னமான பிரதிமை பூஜைக்குரியதல்ல. கங்கையில் விஸர்ஜனம்செய்துவிடவேண் டியதுதான்' என்று கூறிவிட்டார்கள்.

மதுராநாதருக்கு அவ்வாறு செய்ய மனசு வரவில்லை. அப்போது அவருக்கு கதாதரரின் நினைவு வந்தது. இவர் சாஸ்திரங்களை அறிந்திராவிடினும் தெய் வீகத்தை அறிந்தவர் என்ற திட புத்தி மதுராநாதருக்கு உண்டு. எனவே அவரிடம் யோசனை கேட்டார்.

விழா வைபவத்தைப் பார்த்துப் பார்த்து உள்ளம் பூரித்திருந்த கதா தரர் ஓர் உன்னதமான மன நிலையில் இருந்தார். அந்த உயர் நிலையிலிருந்த வாறு அவர் ராஸமணியை நோக்கினார்.

''ராணியின் மாப்பிள்ளைக்குக் கால் முறிந்து போகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். ராணி என்ன செய் வார்? மாப்பிள்ளையைக் கங்கையில் ஆழ்த்திவிட்டு வேறு மாப்பிள்ளை தேடு வாரா?'' என்றார்.

கூடியிருந்தோர் விலவிலத்துப் போய் விட்டார்கள். விலவிலப்பிலேயே ஓர் ஆனந்தப் புல்லரிப்பும் விரவியிருந்தது.

''கோவிந்தனின் முறிந்த திருப் பாதத்தை மூர்த்தியுடன் பொருத்திப் பூஜையைத் தொடருவோம்'' என்றார் கதாதரர் சஞ்சலமில்லாமல்.

அழுத்தமாக வெளியான சத்தி யத்தை யாராலும் ஏற்காதிருக்க முடிய வில்லை. ''உடைந்த காலை யார் பொருத்துவது? நீங்களேதான் செய்ய வேண்டும்'' என்று கதாதரரைக் கேட் டுக் கொண்டார் மதுராநாதர்.

அவரும் வெகு சாமர்த்தியமாக, பிர திமை பின்னமுற்றதே தெரியாதவாறு ஒடிந்த பகுதியை இணைத்துக் கொடுத் தார். தக்ஷிணேசுவரத்தில் இப்போ துள்ள ராதாகாந்தனுடைய விக்கிரகம் பிரதிஷ்டையாகும் வரை பின்னமான மூர்த்தம்தான் பூஜையிலிருந்து வந்தது.

அஜாக்கிரதையாக நடந்துகொண்ட தாக க்ஷேத்திர நாதர் வேலை நீக்கம் செய்யப்பட்டார். ராதா — கோவிந்த னைப் பூஜிக்க கதாதரர் நியமனம் செய் யப்பட்டார்.

பிற்காலத்தில் ஒருவர் ஸ்ரீ ராம கிருஷ்ணரிடம், ''ஏன் ஸ்வாமி, இந்த ஆலயத்திலுள்ள கோவிந்தஜி பின்ன மானவர் என்கிறார்களே, வாஸ்தவமா?'' என்று கேட்டார்.

தவ முனிவர் முறுவல் பூத்தார்.

''பூரணப் பொருளான என் நார ணனையா பின்னமானவன் என்கிறீர் கள்?'' என்று கேட்டார். (தொடரும்)

ராதா கோவிலில்
ம் பன்னிரண்டு மணி
த்தது.
ம் தரையில் துண்டை
ந்து உறங்கிக் கொண்
ந்த ராயப்பன் தூக்கி
ரிப் போட்டுக்
ாண்டு எழுந்திருந்
ன். ஆழ்ந்த நித்திரை
ரணமாக இதுகாறும்
டங்கிக் கிடந்த வயிறு
் பசி' என்று ஓல
ட்டது. 'பாண்ட்'
க்கெட்டில் கையை
ட்டுத் துழாவினான்.
ாத்தக் கையிருப்பு
நபத்தெட்டு பைசா;
; கால் ரூபாயும் மூன்று
ா பைசாக்களும்தான்
பனிடமிருந்தன.

ஜலஜா தியேட்டரில்
ன்று புதுப் படம் வெளி
கிறது. 'நால்வர் கண்ட
ர்' என்கிற படத்தைப்
ர்க்காமல் அவனால்
ப்படி இருக்க முடியும்?




எதிரே இருந்த டீக்கடைக்குப் போய் ஒரு பளா தண்ணீர் வாங்கி முகத்தைக் கழுவிக் ாண்டிருந்தான். அங்கேயே மாட்டியிருந்த கண்ணாடியின் எதிரில் போய் நின்று ாண்டி'ன் இடது பக்கத்துப் பைக்குள் கையை விட்டான். ஒரு வாசனைத் தைலப் ட்டிலும், விரல் நீளச்சீப்பு ஒன்றும் வெளிப் ட்டன. அதைக் கொண்டு தன் தலைவலங் ாரத்தைக் கச்சிதமாக முடித்தான்.

எதிரே இருந்த பஸ் ஸ்டாண்டில் பத்துப் பன்னிரண்டு பேர்வழிகள் 'க்யூ'வில் வரிசை ாக நின்று கொண்டிருந்தார்கள். அந்த வரிசையை நோக்கி நடந்தான் ராயப்பன். ார்ப்பதற்கு நாகரிகமாகவும் தாராள மன ள்ளவர்களாகவும் தோற்றமளிக்கும் மூன்று ர்களை நோக்கிச் சென்றான்.

''சார்! யாரோ பர்ஸைப் பிக்பாக்கெட் டித்து விட்டான்/சார். எனக்குத் திருப்பரம் ாந்த ஊர் சார். இந்து ரூபாய் சேர்ந்து ட்டது. நீங்க ஒரு நாலணா கொடுத்து உதவி ல் டிக்கெட் வாங்கி ஊருக்குப் போய் விடு பன் சார். ப்ளீஸ்...!' என்று 'டிப்டாப்' ாக இருந்த ராயப்பன் அரைகுறை ஆங்கிலத் ல் கேட்டான்

''நோ, சார்!'' என்று கையை விரித்து ட்டார் ஒருவர். இன்னொருவரிடமும் ாய்த் தன் ஆங்கில ஞானத்தைப் பிரயோ த்தான். அவரும் உதட்டைப் பிதுக்கினார். ன்றாமவரிடம் போய்க் கேட்டபோது அவர் ாஞ்சம் சாமர்த்தியமாக, ''திருப்பரத்துக்கு ரண்டு ஸ்டேஷன் முந்தியே டிக்கெட் வாங் க் கொள்'' என்று கூறி விட்டார்.

ஏமாற்றம் கப்பிய முகத்துடன் நடந் தான் ராயப்பன். சோர்வுடன் நடந்தவன் ேதா தோன்றவே தானும் அந்த 'க்யூ'வில் ாய் நின்றுகொண்டான்.

இச்சமயம் ஒரு குருட்டுப் பிச்சைக்காரன் கயில் ஓர் அலுமினியக் கிண்ணத்துடன் 'க்யூ'வை நாடி வந்தான்.

''சாமீ! தருமவான்களே! இரண்டு கண்ணும் தெரியாதவங்க. ஏதாவது தருமம் செய்யுங்க...'' என்றான் நெஞ்சம் குரலில்.

'டொக், டொக்' — நாலைந்து பேர்கள் அவனுக்குப் பிச்சை அளித்தனர். குருட்டுப் பிச்சைக்காரன் 'க்யூ'வில் நின்ற ராயப்பனின் எதிரிலும் வந்து நின்று சுலோகம் பாடினான்.

ராயப்பனின் கண்கள் பிச்சைக்காரனின் அலுமினியக் கிண்ணத்தினுள் சுழன்றன. என்ன ஆச்சரியம்! அதில் இரண்டும் ஒன்றுமான பல நயா பைசாக்களுக் கிடையில் ஒரு முழு அரை ரூபாயும் இருந்ததே!

''சாமீ!...'' என்றான் பிச்சைக்காரன்.

''டேய்! கால் ரூபாயாக இருக்கிறது. மூன்று பைசா போகப் பாக்கி இருக்குமா உன்னிடம்?'' என்றான் ராயப்பன்.

இதற்குள் ஒரு பஸ் அங்கே வந்து நிற்கவே 'க்யூ'வில் நின்றோர் முண்டியடித்துக் கொண்டு அதனுள் ஏறிக் கொண்டனர். ராயப்பனும் பிச்சைக்காரனும் மட்டுமே அங்கே நின்றிருந்தார்கள்.

''இருக்கும் சாமி. பார்த்து எடுத்துக்குங்க'' என்று கூறினான் பிச்சைக்காரன், வெகுளியாகத் தன் அலுமினியக் கிண்ணத்தை ராயப்பனைப் பார்த்து நீட்டியபடியே.

''இந்தா, கால் ரூபாய்!''

''இப்படிக் கொடுங்க அதை!'' என்று கூறிக் கையை நீட்டிக் கால் ரூபாயை வாங்கிக் கொண்டான் பிச்சைக்காரன்.

அலுமினியக் குவளைக்குள் கையை விட்டான் ராயப்பன். நயாப் பைசாக்களைப் பொறுக்க அவன் பிச்சைக்காரன் அல்லவே. வெடுக்கென்று தனக்கு வேண்டிய அந்த அரை ரூபாய் நாணயத்தை மட்டும் எடுத்துக் கொண்டு ஜலஜா தியேட்டரை நோக்கிச் சவாரி விட்டான்.

மணி இரண்டு அடித்து ஐந்து நிமிஷம் ஆகிவிட்டது. தியேட்டரில் ஐம்பத்து மூன்று நயா பைசா 'க்யூ' மடமடவென்று முன்னே நகர்ந்தது. அவனுக்கு முன்னே இருந்த ஆள் வரையில் டிக்கெட் வாங்கி விட்டார்கள்.

''இன்னும் ஒரே ஒரு டிக்கெட்தான் ம்..... சீக்கிரம்!'' உள்ளேயிருந்து குரல் கத்தியது.

''ஒண்ணுதான் சார் கொடுங்க!'' என்று கூறி அந்த அரை ரூபாயையும் மூன்று நயா பைசாக்களையும் கவுண்டருக்குள் வைத்தான் ராயப்பன். வைத்த வேகத்தில் அரை ரூபாய் வெளியே தள்ளப்பட்டது.

''செல்லாத காசு. வேறே கொடு!'' என்று குரல் அதிர்ந்தது.

"டீச்சர்! நீங்க கண்டிப்பா வரணும்" என்று சொல்லியவளாய்க் கல்யாணப் பத்திரிகையைக் கவிலா நீட்ட, சாரு வாங்கிக் கொண்டாள்.

"அடுத்த இன்விடேஷன் உன் கல்யாணத்துக்கு!" என்று சாரு சிரித்து, அழைப்பிதழை உறையினுள் வைத்தாள்.

"போங்கோ, டீச்சர் ... நான் அக்காவைப் போல் சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கொள்ள மாட்டேன்...."

சாரு அவளையே பார்த்தாள்.

"பின்னே என்ன செய்வாயாம்?"

"உங்களைப் போல எம். ஏ. பாஸ் செய்து விட்டு...."

"செய்து விட்டு...?"

"டீச்சராயிடுவேன்...ஞாபகம் வைச்சுக்குங்கோ, பதினெட்டாம் தேதி கல்யாணம். பதினேழாம் தேதியே நீங்க எங்க வீட்டிலே அட்டெண்டன்ஸ் கொடுத்துவிடணும்....." கவிலா கைநிறைய அழைப்பிதழை வைத்துக் கொண்டு பறந்தாள்.

அவள் போன பிறகு சாரு வெகு நேரம் தான் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு அசையவில்லை.

இந்தக் கவிலாவுக்கு இப்போது பதினேழு வயது ஆகிவிட்டது. இவளைவிட ஜா மூன்று வயது பெரியவள். தங்கையைப் போலவே மூன்று வருடங்களுக்கு மு னால் அவளிடம் படித்தவள். ஜானுவுக்கு முன்னால் படித்தாள் அவளுடைய அக்கா, மாலதி. மாலதியைவிட நான்கு வயது பெரியவளான பார்வதி சாருவுடன் சேர்ந்து படித்தாள். பார்வதி இப்போ ஜம்ஷெட்பூரில் இருக்கிறாள். ஒரு பிள்ளையு ஒரு பெண்ணும். சாரு ஆசிரியை வேலைக் வந்த ஆண்டில்தான் மாலதி ஸ்கூலை விட் விட்டுக் கல்யாணம் செய்து கொண்டாள் அப்பப்பா! நாள் எப்படிப் பறக்கிறது! அவ கள் முன்னால் சின்னஞ் சிறு பெண்களாக பாவாடையும், தாவணியுமாக ஓடி ஆடி பெண்களெல்லாம் இப்போது எப்படி ஆ விட்டார்கள்!

இன்றைய கவிலாவும் நாளைக்குத் தம தமக்கைகளைப் போலாகி விடுவாள்.

நாட்கள் ஓட ஓட இவர்களுடைய வய ஏறுகின்றதுவே, அதுபோலத்தானே அவளு டைய வயதும் ஏறுகிறது?

இதை நினைத்துப் பார்த் போது சாருவின் நெஞ் வலித்தது. 'உன் வய மூப்பதடீ' என்று உள்ளே மனம் நையாண்டி செ தது. சாரு தன் கைகளை பார்த்தாள். பழைய மாதிறம் போய்க் கறுப்பே



ிட்டன; அவளுடைய முகம் முன்னைப் போலவா இருக்கிறது? நெற்றியில் வயதின் ரேகைகள் பதிந்து விட்டன. மாம்பழக் கன்னங்கள் உலர்ந்த மாங்கொட்டைகளாகி எத்தனையோ வருஷங்களாகி விட்டன. ரச மில்லா விட்டால் வாழ்க்கை இப்படித்தான் உயிரில்லாமல், உப்புச் சப்பில்லாமல், வெளி உலகத்துக்காக வாழும் வாழ்க்கையாகி, எதிலும் திருப்தியோ நிறைவோ இன்றி, எதிலும் தோல்வி மனப்பான்மையும் ஏமாற் றமுமே தோன்றி, புறப்படும்போது எதிர் பார்த்த முடிவை அடையாமல் திடீரென்று மண்ணில் புதைந்து விடும் நதியைப் போலாகி விடும்....

சாரு அலுத்துக் கொண்டாள். அவள் மற்றவர்களுடைய விவாகப் பத்திரிகைகளைப் பார்த்துக் கொண்டு இருக்க வேண்டியது தான். அழைப்பிதழ்களில் காணப்படும் பெண்களுக்கோ, பிள்ளைகளுக்கோ வாழ்த்துத் தந்திகள் அனுப்ப வேண்டியவள்தான். அவள் பெயர் எங்கே எந்த அழைப்பிதழில் வெளி யாகப் போகிறது?

" என்ன சாரு, நேரமாகிவிட்டது தெரிய வில்லையா?" என்ற குரல் திடீரெனக் கேட் கவே, சாரு எண்ணங்களிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு நிமிர்ந்து பார்த்தாள்.

மிஸஸ் பங்கஜம் நின்று கொண்டிருந் தாள். உடலெல்லாம் தாய்மை வழிந்தோடி யது. புது ரத்தம் ஓடின கவர்ச்சியில் கண்கள் மின்னின. வெற்றிலைச் சிவப்பில் உதடுகள் ஆரவாரித்தன.

"என்ன ரொம்பப் பசிக்கிறதா? என் னையே முழுங்கப் பார்க்கிறியே!"

"ஒன்றுமில்லே, பங்கஜம்! நீ எப்படி மாறியிருக்கே இந்த ஐந்து மாசத்திலேன்னு நெனைச்சேன்...."

"சரி, சரி! ஹெம்பு.... நானே அதைப் பத்தி நினைக்க வில்லையாம், உனக்கென்ன கண்மா வலியா....?"

சாரு மெல்ல எழுந்தாள்.

பங்கஜம் கொடுத்து வைத்தவள்.

"அவர் எங்கேயாவது 'டூர்' போய் விட் டாரா?" என்று சாரு கேட்டாள், நடை பாதையில் நடக்கும் போது.

"இல்லியே.. ஊரிலேதான் இருக் கிறார். 'இது' ஆகிற வரைக்கும் நாம் 'டூர்' போக முடியாதுன்னு எழுதிக் கொடுத்து விட்டார். அவர் கூடவே இல்லா விட்டால் என்னை நான் சரியாகப் பார்த்துக் கொள்ள மாட்டேனாம். எப்படி யிருக்கு கதை!"

"நீ அதிர்ஷ்டக்காரி" என்று சாரு முணு முணுத்தாள்.

"என்னடி, முணுமுணுக்கிறே...?"

"இப்போ நாம் சினிமாவுக்குப் போகி றோமே, அவர் உன்னைக் கோபித்துக் கொள்ள மாட்டாரா? உடம்பைக் கெடுத்துக் கொள் கிறேனென்று சங்கடம் இருக்காதா?"

"இதைப் பத்தி யெல்லாம் நீ ஏன் கவலைப் படறே.... நீ அதிர்ஷ்டக்காரி தனிக்காட்டு ராணி!"

பங்கஜம் இதுபோல எத்தனையோ தடவை சொல்லி யிருக்கிறாள்.

சாரு அதிர்ஷ்டசாலியா? பங்கஜமும் கேலி செய்கிறாளே?

தன் தலை அங்குமிங்குமாக நரைத்திருப் பது திடீரென அவள் நினைவுக்கு வந்தது.

சாரு அதிர்ஷ்டசாலியா?

உடலைக் காலம் தின்று தின்று, கரைந்துக் கரைந்துக் குச்சியும் தோலுமாகி விட்ட சாரு வுக்கும் அதிர்ஷ்டத்துக்கும் எத்தனை தூரம்?

சினிமா முடிந்து வெளியே வந்ததும் பஸ் கிடைத்துவிட்டது. ஓர் ஆங்கிலப் படம் அது. ஒருத்தி தன் வயதுக்காலத்தில் இளம் பருவ வாழ்க்கையை எண்ணி வாடுகிறாள். அவள் வீட்டில் கும்மாளமிட்டுக் கொண்டு வரும் இளம் தம்பதி அவளுடைய உள்ளத்தைக் கிளறி விட்டார்கள். தன் எண்ணங்களைக் கிழவியால் தடை செய்ய முடியவில்லை. இப் படி ஓடுகிறது படத்தின் கதை.

கிழவியாவது எல்லாவற்றையும் அனுப வித்துக் கிழவியானவள். ஆனால் சாரு எதை யுமே அனுபவிக்காமல் கிழவியாகிக் கொண்டு வருகிறாள்.

சீ! என்ன வாழ்வு வேண்டியிருக்கிறது?

பஸ் நின்றதும் இருவரும் இறங்கினார்கள்.

"சாப்பிட்டு விட்டுப் போயேன், சாரு!" என்று பங்கஜம் அழைத்தாள்.

"வேண்டாமடீ ... நேரமாகி விட்டது."

சாரு இப்போது தன் னந் தனியாக நடக்க லானாள். ஊர் அடங்கி விட்டது. ஒன்பதரை



# நெஞ்சோடு நெஞ்சம்

வி. ஆர்

குழந்தைகள்: ஒரே தங்கை: அவளும் புருஷனுடன் இருக்கிறாள் கல்கத்தாவில். ஐந்து குழந்தைகள்....''

''ரொம்பச் சந்தோஷம்....''

''இப்போது எனக்கு ஆயிரத்து நாற்பது ரூபாய் சம்பளம். கழிவு எல்லாம் போக அறுநூறு ரூபாய் தேறுகிறது. பிதுரார்ஜிதமாக ஒன்றுமில்லை. பல வருஷ காலம் ஊர் ஊராகச் சென்றதில் பிரயாணப்படியிலேயே என் செலவு நடந்து விட்டது. நாற்பதாயிரம் ரூபாய்க்கு ஒரு வீடு வாங்கியிருக்கிறேன். ரொக்கமாக முப்பதாயிரம் இருக்கு. ஒரு லட்சத்துக்கு இன்ஷியூர்.....''

''இதை யெல்லாம் உத்தேசித்து நான் உங்களுக்கு எழுதவில்லை....''

''இருக்கலாம். என் கடமை என்னைப்பற்றி விவரமாகச் சொல்ல வேண்டியது அல்லவா?''

''உங்களைப் பற்றிய தகவல்கள் வேண்டியதுதான். ஆனால் உங்களுடைய உடைமைகளில் எனக்கு....''

''அக்கறை இப்போது இல்லா விட்டாலும் நாளைக்கு ஏற்படலாம் இல்லையா?''

''நான் ஒன்று கேட்கிறேன். தவறாக எடுத்துக் கொள்ள மாட்டீர்களே....?''

''மிஸ் சாருமதி...! நீங்கள் கேட்காவிட்டால்தான் எனக்குத் தவறாகப்படும்.''

''நாற்பது வயது வரையில் நீங்கள் மணம் செய்து கொள்ளாமலிருக்கக் காரணம் ?''

''உங்கள் விஷயத்தில் என்ன காரணமோ, அதுவேதான் இருக்கலாம்....!''

''என் விஷயமே அலாதி. நான் ஏழை. அழகு இல்லாதவள்; ஒரு தொழிலில் இறங்கி விட்ட என்றால் அதிலிருந்தும் விடுவித்துக் கொள்ளச் சாத்தியமில்லாமல், அதிலேயே ஊன்றிக் கொள்ளவும் முடியாமல் போய் விட்டது.''

''அதே காரணங்கள்தான்... இன்றுதான் எனக்கு இந்தச் சம்பளமும் பதவியும். அன்று நாற்பது ரூபாயில் இல்லியில் நான் ஒரு தரித்திரன். ஒரு தங்கையும் தம்பியும் தோளின் பாரங்கள். எவளும் பெண் கொடுக்க முன்வரவில்லை. முப்பது வயதுக்கு அப்புறம் நான் நீ என்று வந்த போது கல்யாணம் தேவையா என்ற கேள்வி முளைக்க ஆரம்பித்து விட்டது....''

''இப்போது அந்தக்கேள்விக்குப் பதில்..?'' சாரு அவருடைய பதிலுக்கு ஆர்வமாகக் காத்திருந்தாள்.

''மனிதன் தனியாகப் பிறக்கிறான்.... தனியாகப் போகிறான். இந்த இரண்டுக்கும் நடுவே அவன் தனியனாக இருக்க ஆசைப்படுவதில்லை.... அவனுடைய தனிமை அவனையே அரிக்க ஆரம்பிக்கிறது. அவனுடைய உள்ளத்தோடு மனசோடு உறவாட இன்னொரு உயிரைத் தேடுகிறான். இயற்கையின் நியதியில், ஆணுக்குப் பெண் உயிர் தான் தேவைப்படுகிறது!'' என்றார்.

சாரு ஒரு கணம் கல்லாய்ச் சமைந்து நின்றாள். ஒருவருக்கு இன்னொருவர் துணை. நெஞ்சோடு நெஞ்சம் உறவாட உறவு. அடங்காமலேயே தீர்ந்து விட்ட உடலின் தாகங்களுக்குப் பிறகு உள்ளத்தின் தாகம் பிறக்

கிறது: அது தீர இந்த ஓர் உறவுதான் கனி யாக இருக்க முடியும்.

சாரு தன் முடிவைத் தன் பார்வையா லேயே உணர்த்தி விட்டாள்.

ஆனால் மகாதேவன் மேலே தொடர்ந்தார். "இது வரையில் நான் சொன்னதெல்லாம் நம்பிக்கைக்கு அஸ்திவாரமாக உங்களுக்குத் தோன்றியிருக்கலாம். இதுவரை நான் சொல் லாத ஒன்றும் இருக்கிறது. நீங்கள் செய்யக் கூடிய முடிவை அதுதான் தீர்மானிக்கும்...."

சாருவின் கண்களில் ஆவல் பொங்கியது. பயம் கூடவே பிரதிபலித்தாலும் நம்பிக்கை தளரவில்லை.

"இரண்டு மூன்று வருடங்களாக எப்போ தாவது மார்வலி வருகிறது. பெரிய டாக்டர் களிடம் சிகிச்சையும் பெற்றேன். அவர்கள் உயிருக்குப் பயமே இல்லை என்கிறார்கள். இருந்தாலும் நீங்கள் இதை முன்கூட்டியே அறிந்து கொள்ள வேண்டும் இல்லையா?"

சாரு ஒருகணம் ஸ்தம்பித்துப் போனாள். அந்த மனிதருடைய களங்கமற்ற பேச்சு அவளைக் கவர்ந்தது. உறவாட அப்பழுக்கற்ற நெஞ்சு இந்த ஒருவரிடம்தான் கிடைக்கும்.

"விதியைக் கண்டு பயப்படுகிறவள் நான் இல்லை...."

"இன்னொரு சமாசாரம். நான் இறந்து போனாலும் உங்களுக்குச் சொத்து முழுதும் கிடைக்காது. ஆபீஸ் பிராவிடன்டு பண்டில் உள்ள பணம் மட்டும்தான் உங்களுக்கு .."

சாருவுக்குக் கோபம் வந்தது. "உங்கள் உடைமைகளில் எனக்கு அக்கறையில்லை என்று தான் சொல்லி விட்டேனே! எனக்கு வேண் டியதெல்லாம் தனிமைக்குத் துணைதான்...."

**சா**ருவின் தனிமை அடுத்த மாதம் முதல் வெள்ளிக்கிழமை உதயத்தில் அஸ்தமித்து விடும். இன்னும் இருபது நாட்கள். இருபது யுகங்கள்.

பதினாறு கழிந்தன. இன்னும் நான்கு நாட்களே. இதுவரை அவள் ரகசியமாகவே வைத்திருந்தாள். பங்கஜத்திடம் கூடச் சொல்ல வில்லை.

புதன் கிழமை. கமலாவிடம்தான் முதலில் சொல்ல வேண்டும் என்று அவளுக்குத் தோன் றியது. சொல்லியனுப்பக் கமலா, "என்ன டீச்சர்?" என்று ஓடோடியும் வந்தாள்.

பத்திரிகையில்லாத கலியாணம்; வாயா சொல்ல வேண்டிய நிர்ப்பந்தம். எப்படியே தடுமாறிக் கொண்டே சொன்னாள்.

கமலா திகைத்து நின்று விட்டாள். அ னால் தன் காதுகளை நம்ப முடியவில்லை அவள் மனக் கண் முன் நின்ற ஒரு லட் உருவம் உருக்குலைந்து போய் விட்ட அவள் பார்ப்பதாகச் சாரு எண்ணினாள்.

"ரொம்ப சந்தோஷம் டீச்சர்."—கொ யால் இழுத்துப் போட்ட சிரிப்பையும், அ ஒளித்து வைத்த ஏமாற்றத்தையும் உணர் போது, சாருவுக்கே நெஞ்சு வலித்தது.

கமலா விடைபெற்றுப் போனதும், "நீங் தானே மிஸ் சாருமதி?" என்று கேட்டபடி காக்கி உடையில் ஒருவன் வந்தான்.

"ஆமாம்......"

"நான் ஆபீசர் மகாதேவனின் டிரைவ நீங்கள் உடனே என்னுடன் வரவேண்டும்...

அவள் அவசரம் அவசரமாய்க் கைப்பை எடுத்துக் கொண்டு அவன் பின்னால் விரைந் காரினுள் ஏறிக் கொண்டாள்.

**ஆ**ஸ்பத்திரியில் தன்னந் தனியாக ம தேவன் கிடந்தார். நாசித்துவாரம் வழியாக பிராண வாயு இறை இறையாக ஏறியது மூடிய கண்கள் திறக்கவில்லை.

நாளை மறு நாள் நெஞ்சோடு நெஞ்ச உறவாட இருக்க, இவர் இங்கே இப்படி....

என்றுமே பிறருக்காக அழாத சாரு விக் விக்கி அழுதாள்.

"ஹார்ட் அட்டாக்" என்று ஒரு டாக்ட இன்னொருவரிடம் சொன்னது காதில் விழு தாலும் சாரு எப்படி இருக்கிறது என் கேட்க வில்லை.

ஒன்பதரை மணிக்கு மகாதேவன் இ சாகக் கண் திறந்தார். தம் முன்னே, படுக் யில் கை ஊன்றி, முகம் கலங்க, கண்ணீரி தன்னைக் கரைத்துக் கொண்டு உட்கார் இருக்கும் சாருவைப் பார்த்தார்.

அடுத்தகணம் அவருடைய கண்க வெடித்தன. நீர் ஊற்றாகப் பெருக்கெடுத்த

"சாருமதி, என்னை மன்னித்து விடம்மா.

கெஞ்சிய குரலின் எதிரொலி அடங்குவத குள், முகம் விகாரமாக ஆகிவிட்டது.

தனிமை முன்னாலும் பின்னாலும் குழ சாரு நடக்கலானாள்.

TAH

# சுறுசுறுப்பான மாணவர்கள் எப்பொழுதும் அதிகப்படியான வெண்மைக்கு டினோபாலையே உபயோகிக்கிறார்கள்



**வெண்மையின் இரகசியம்**

வெள்ளைத் துணிகள் கண்ணைப் பறிக்கும் தனி வெண்மை அடைவது, சதா டினோபாலே உபயோகிப்பதால்தான் என்ற இரகசியத்தைச் சுறுசுறுப்பான எல்லா மாணவர்களும் அறிவார்கள். புடவைகள், சேலைகள், ஷர்ட்டுகள், டிரௌஸர்கள் முதலியவற்றிற்கு எப்பொழுதும் டினோபாலே உபயோகியுங்கள். டினோபால் மிகச் சிக்கனமானதுங்கூட —ஒரு வாளி நிறையவுள்ள துணிகளை வெண்மையாக்க ஒரு ¼ தேக்கரண்டி டினோபால் போதுமானது. டினோபால் வெண்மையுள்ள நாள்வரை நீடித்திருப்பதால், துணிகளைத் துவைக்கும் போதெல்லாம் டினோபால் கரைசலில் தோய்க்கவேண்டிய அவசியம் இல்லை.

டினோபால் என்ற வார்த்தை ஜே. ஆர். கெய்கி, எஸ். ஏ. பாஸ்ல், ஸ்விட்ஸர்லாந்து என்பவர்களுடைய ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்காகும்.

ஒரு சிறிதளவு

**டினோபால்**

வெள்ளைத் துணிகளை மிக வெண்மையாக்கப் போதுமானது.



தயாரிப்பாளர்கள் :
சுஹ்ரித் கெய்கி லிமிடெட், வடோதரா, பரோடா

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
சுஹ்ரித் கெய்கி ட்ரேடிங் லிமிடெட், த. பெ. 965, பம்பாய்-1. பி. ஆர்.

SISTA'S · SG · [illegible]

### அத்தியாயம் பதின்மூன்று

## நிலவறை தானம்

பத்தினிக் கோட்டம்

ஜெகசிற்பியன்

**வீ**ரச் செருக்குடன் நிமிர்ந்து நின்ற நிழலுருவம் விளக்கேந்திய சிலையின் நிழலை மையப்படுத்தி அதன் வலமாகவும் இடமாகவும் உலாவியவாறு, தன் எதிரே நீண்ட தாடியை வருடிக் கொண்டு நின்ற நிழலுருவத்துப் பக்கம் திரும்பிக் கரகரப்பான குரலில் பேசியது: ''என்னுடைய சக்திக்கு இயன்ற அளவு நான் இந்தக் காரியத்தைச் சரியாகவே செய்து முடித்து விட்டேன். ஏறத்தாழ முப்பதாயிரம் வீரர்களுக்குப் போதுமான போர்க் கருவிகளையும் பிற சாதனங்களையும் கொண்டு வந்து சேமித்து விட்டேன். இவ்வளவுதான் இப்போதைக்கு என்னால் செய்ய முடிந்தது. இதற்குமேல் சேமிக்க இடமும் இல்லை, காலமும் இல்லை, சூழ்நிலையும் ஒத்து வராது. இவற்றை வைத்துக் கொண்டு வெற்றிக்குப் பாடுபடுவது இனி அவர்கள் பொறுப்பு.''

சாளரத்துக்கு வெளியே சுவரோரம் ஒடுங்கி முடங்கி நின்று கொண்டிருந்த ஆபத்துதவி இளங்காரிக்குடையான் இந்தப் பேச்சைக் கேட்டு வியப்பின் எல்லையைத் தொட்டான். அவன் உடல் பீதியால் நடுங்கியது. தன் கண்ணையும் காதையும் கூர்மையாக்கிக் கொண்டு அந்தக் கலைக்கூடத்தின் குறுக்குச் சுவரில் தெரிந்த நிழலுருவங்களை மீண்டும் உன்னிப்பாகக் கவனித்தான்.

பின்னால் கைகளைக் கோத்தவாறு உலாவிக் கொண்டிருந்த நெடிய நிழலுருவம் யோகியின் வடிவிலே நின்ற நிழலுருவத்தின் அருகில் போய்த் தழுதழுத்த குரலில் கூறியது: ''கலைஞரே! தங்களின் ஆர்வ மிக்க ஒத்துழைப்பாலும் உயரிய யோசனைகளாலும்தான் இந்தச் சிரம சாத்தியமான காரியத்தை என்னால் சாதிக்க முடிந்தது. தங்களுக்கு நான் பெரிதும் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன்.''

வருத்தம் தோய்ந்த மென்னகையொளி. அந்தத் தாடியுருவம்தான் அப்படிச் சிரித்தது. ''நான் செய்த உதவிகளுக்குப் பின்னொரு காலத்தில் எவ்வித பலனையும் எதிர்பார்க்காமல் இப்போதே அவற்றுக்குரிய கூலியாக வெறும் 'நன்றி'யை மட்டும் பெற்றுக் கொண்டு அமைதியடையச் சொல்கிறீர்கள்; அப்படித்தானே, நண்பரே?''

இரண்டு நிழலுருவங்களும் ஒன்றையொன்று தழுவிக் கொண்டு கலகலவெனச் சிரித்தன.

சிறு பொழுதுக்குப் பின் அந்த நெடிய உருவம் மீண்டும் பேசியது: ''அப்படியல்ல, கலைஞரே! போர்க் கருவிகளைச் சேமிக்க வேண்டும் என்று நான் திட்டமிட்டபோது அவற்றை எங்கே பத்திரப்படுத்திப் பாதுகாப்பது என்று தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தேன். என் அரண்மனையையோ அல்லது வேறு இடங்களையோ அதற்கெனப் பயன்படுத்தினால் அந்த இரகசியம் எப்படியும் அம்பலமாகி விடலாம் என்றும் பயந்தேன். இந்நிலையில் தாங்களே முன்வந்து தங்கள் இல்லத்து நிலவறையை என்னிடம் ஒப்படைத்தீர்களே, அது ஒரு சாதாரண உதவி என்று நான் எண்ண முடியுமா? அதிலும், என் உயிரைப் பணயம் வைத்துச் சேமித்த படைக்கலன்களை நன்கு பத்திரப்படுத்துவதற்குத் தோதான இடத்தைக் கொடுத்திருக்கிறீர்களே! தங்களுடைய இல்லத்தில் அப்படியொரு நிலவறை இருக்கிறதென்ற விவரம் எனக்கே இத்தனை காலமாகத் தெரியாமல் இருந்தது ஆச்சரியம்தான்!''

இதைக் கேட்டு மெல்லச் சிரித்த தாடி உருவம் தணிந்த குரலில் கூறியது: ''ஆமாம், அன்பரே! என் இல்லத்தில் ஒரு நிலவறை இருக்கிறதென்ற விஷயம் என்னைத் தவிர வேறு யாருக்குமே தெரி

நண்பன்: கடை போர்டை இப்படித் தப்பும் தவறுமா எழுதி மாட்டியிருக்கிறீயே! உன் கடைக்குச் சாமான் வாங்க யாரு வருவாங்கன்னு நினைக்கிறே?

கடைக்காரன்: அதிலேதான் என் வியாபார ரகசியமே அடங்கியிருக்கு. அந்த போர்டைப் பார்த்து விட்டு எத்தனையோ பேர் வராங்க, என்னை ஏமாந்த சோணகிரி, ஏமாத்திப்பிடலாம்னு நெனச்சுக்கிட்டு. ஆனா, ஏமாறுகிறவங்க யாரு?



யாதுதான். இந்த நிலவறை இங்கே உருவானதன் காரணத்தைச் சொல்கிறேன், கேளுங்கள். காலத்தால் அழிக்க முடியாததாகவும், உலகமே இதுவரையில் கண்டிராத வகையிலுமாக ஓர் அற்புதக் கற்கோயிலை என் வாழ்நாளுக்குள் எப்படியும் நிர்மாணித்துவிட வேண்டும் என்ற பெரு வேட்கையுடன் இருந்து வரும் நான் அதற்கான ஆரம்ப முயற்சிகளில் ஈடுபட்டபோது துரதிர்ஷ்டவசமாகப் பல்லவருக்கும் சளுக்கியருக்கும் போர் மூண்டு அந்த முயற்சியை அடியோடு குலைத்து விட்டது. சிறிது காலத்துக்குப் பின் மீண்டும் அந்தப் பேராசை என்னுள் தலைதூக்கவே, கற்பனை வடிவாக என் மனத்தளத்தில் நிற்கும் அந்த மகத்தான கோயிலை நிஜ வடிவில் நிர்மாணிப்பதற்கான சேதியக் குறிப்புகள், சிற்ப அமைப்புகள் முதலானவற்றைக் கல்லிலும், சிலையிலும், ஓலையிலுமாக உருவாக்கி எங்கேனும் ஓரிடத்தில் பத்திரப்படுத்தி வைக்கவேண்டுமெனத் திட்டமிட்டேன். என்னுடைய அந்த மாபெரும் கலைக் கனவு என் காலத்துக்குள் நிறைவேறா விட்டாலும் எனக்குப் பின் வரும் ஒரு சேதியக் கலைஞன் அவற்றைக் கொண்டு எனது கனவை நனவாக்கி முடிப்பான் என்று எண்ணியே அவ்வாறு திட்டமிட்டேன். அதற்காகவே இந்த நிலவறையை முதலில் கட்டி முடித்தேன். ஆனால், விதி என் உற்சாகத்தை அதோடு கட்டிப் போட்டு விட்டது. அதனால் இந்த நிலவறையும் இதுவரையில் பாழ் அடைந்தே கிடந்தது. இந்நிலையில்தான் தங்களைச் சந்தித்துத் தாங்கள் மேற்கொள்ள விரும்பும் முயற்சி பற்றிய விவரங்களை அறிந்தேன். அந்த நல்ல காரியத்துக்காகவாவது இந்தநிலவறை பயன் படட்டுமே என்று அதைத் தங்களிடம் ஒப்படைத்தும் விட்டேன். நான் மனமார நேசிக்கும் ஒருவருக்காகவும், அவரது தேசத்துக்காகவும் இந்தச் சிறு உதவியாவது செய்ய முடிந்ததே என்பதை எண்ணி எல்லையற்ற மகிழ்ச்சியடைகிறேன். இதனால் எனக்கு எத்தகைய இடர்ப்பாடும் இழிபெயரும் ஏற்பட்டாலும் அவற்றை மனமுவந்து தாங்கிக் கொள்ளவும் சித்தமாயிருக்கிறேன். இப்படி ஓர் அரிய வாய்ப்பை அளித்துதவிய தங்களுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்.''

சாளரத்துக்கு வெளியே இருளில் மறைந்து நின்ற இளங்காரிக்குடையான் தேள் கொட்டியவன்போல் துடிப்புற்று நிமிர்ந்தான். 'இவர்கள் யார் என்பது இப்போது தெரிந்து விட்டது. சந்தேகமில்லை; சேதியக் கலைஞர் பரவாதிமல்லரும், பழையாறைச் சோழரும்தான் அங்கே பேசிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய நிழலுருவங்கள்தாம் அந்தக் குறுக்குச் சுவரில் தெரிகின்றன. பச்சைத் துரோகிகள்! அவர் படைக்கலன்கள் திரட்டிக் கொண்டு வந்து சேமிக்கிறாராம்; இவர் அவற்றைப் பத்திரப்படுத்தத் தம் நிலவறையைக் கொடுத்து உதவுகிறாராம் — என்ன பயங்கரமான மனிதர்கள்! இந்தப் பழையாறைச் சோழரைப் பற்றி அந்தக் கூலவாணிகன் சொன்னது எவ்வளவு உண்மையாகி விட்டது! இவர்தான் பகிரங்கமாகச் சளுக்கியருடன் சேர்ந்து விட்டார்; அதனால் அவர்களுக்குப் போர்க் கருவிகள் திரட்டிக் கொடுக்கிறார்; அது நாடறிந்த சேதியுமாகி விட்டிருக்கிறது. ஆனால் பரவாதிமல்லரோ? அவர் பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழனாயிருக்கும் வஞ்சக மனிதர் என்னும் விஷயம் இப்போதல்லவா தெரிகிறது? இவர்மீது பல்லவ மன்னரும், பெரும்பிடுகு முத்தரையரும் எத்தனை ஆழ்ந்த அன்பும் நம்பிக்கையும் மதிப்பும் வைத்திருக்கிறார்கள்! பசுத்தோல் போர்த்திய இந்தப் புலியிடம் அவர்கள் பரிதாபகரமாக ஏமாந்துவிட்டிருக்கிறார்களே! என்ன இருந்தாலும் இவர் சளுக்கிய நாட்டுப் பிரஜைதானே? அந்த மண்ணின் பற்றும் பாசமும் அவ்வளவு எளிதில் மறைந்துவிடுமா? பாம்புக்குப் பால் வார்த்து வளர்ப்பதுபோல் பல்லவ நாடு இவருக்கு வளமான வாழ்வையும் வானுயர் புகழையும் வாரி வழங்கியது; இறுதியில் அதற்கே இரண்டகம் செய்யத் துணிந்து விட்டார் இந்தப் பாம்பின் விடம் கொண்ட மனிதர்! சளுக்கியருக்குப் படைக்கலன்கள் சேமிக்கத் தமது நிலவறையைக் கொடுத்து உதவியதற்கு வெறும் நன்றிப் பாராட்டுதலோடு திருப்தியடைய மாட்டாராம்; வேறு ஏதோ 'பங்கும்' வேண்டு

# ஈறு உபாதைகள், பற்சிதைவு போன்ற கோளாறுகளிலிருந்து

# வியக்கத்தக்க பலன்கள்

**தாமாகவே விரும்பி எழுதப்பட்ட கடிதங்கள் பற்களுக்கு நற்பலனளிக்கும் போர்ஹான்ஸ் பற்பசையின் தன்மையை நிரூபிக்கின்றன.**

பல ரகமான பற்பசைகளை உபயோகித்த பின்னர், எனது 50 வது வயதில் போர்ஹான்ஸ் பற்பசையை உபயோகிக்கத் தொடங்கினேன். கடந்த 20 வருடங்களுக்கு மேலாக அதை உபயோகித்து நல்ல பலன் அடைந்துள்ளேன். ஒருவேளை, என் 72-வது வயதில் என்னுடைய பற்கள் இயற்கையானபடி வலுவாகவும், சீராகவும் இருப்பதற்குக் காரணம் போர்ஹான்ஸின் மாயவித்தையாகவும் இருக்கலாம்.

ஜி. என்., மதராஸ்

---

நான் தங்களுடைய போர்ஹான்ஸ் பற்பசையை கடந்த 20 வருடங்களுக்கு மேலாக உபயோகித்து வருவதால், எனக்கு இன்று 65 வயதும் 5 மாதங்களும் வயதாகியும் என்னுடைய 32 பற்களும் இன்னமும் வலுவுடனும், ஆரோக்கியத்துடனும் இருக்கின்றன. நானது தேதிவரை நான் எவ்விதமான பற்கோளாறினாலும் அவதிப்பட்டதில்லை.

டி. என். டி., அம்பலம்

---

எனக்கு போர்ஹான்ஸினால் ஏற்பட்ட நல்ல பலனைக்கண்டபின், இப்போது என் குடும்பத்தில் எல்லோரும் போர்ஹான்ஸையே உபயோகிக்கிறார்கள். அதற்கு முன்னால், நான் எப்பொழுதும் பல்வலி மற்றும் ஈறு உபாதையால் அவதிப்பட்டுவந்தேன். இப்போது போர்ஹான்ஸின் பயனாக, என் பற்கள் வெண்மையாகவும், உறுதியாகவும், ஈறுகள் வலுவாகவும் இருக்கின்றன பல வருடங்களாகவே, எனக்கு ஈறுகளில் புண் ஏற்பட்டதில்லை. அப்பப்பா! நான் வேறெந்தப் பற்பசையை உபயோகிப்பதாகக் கனவுகூட காணமாட்டேன்.

ஜி. எஸ்., டில்லி

---

• இந் நற்சாட்சிக் கடிதங்களை ஜூப்ரே மானேர்ஸ் & கோ. லிட்., கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

**ஓர் பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட பற்பசை ▶**

இதற்கு உகந்த, சிறந்த சேர்க்கைக்கு, போர்ஹான்ஸ் டபிள் ஆக்ஷன் டூத் பிரஷ் உபயோகியுங்கள்.

இந்த டூத் பிரஷ் மட்டுமே உங்கள் பற்களைச் சுத்தம் செய்வதோடு, ஈறுகளையும் இதமாகத் தடவிக் கொடுக்கிறது.





மாம்! எவ்வளவு பெரிய பேராசை பிடித்த மனிதராக இருந்தால் இப்படி இவர் கேட்கத் துணிவார்! இந்த நன்றி கெட்ட நயவஞ்சகரை நம்பி இவருடைய இல்லத்தில் பல்லவ நாட்டின் உயிர் மூச்சான பரமேசுவரவர்மரைப் புகலடையச் செய்திருந்தாரே பெரும்பிடுகு முத்தரையர், அவரைப்போல் ஒரு பைத்தியக்காரர் இருக்க முடியுமா? கவிஞர் என்ற போர்வையில் திரியும் இந்த மனச்சாட்சியற்ற மனிதரை நன்றாக எடை போட்டுத் தெரிந்துகொண்டு தான் ஆரம்ப நாள் முதலே கோவிந்தவர்மர், 'இவரை நம்பக் கூடாது' என்று சொல்லிக்கொண்டேயிருந்தார். அவருடைய தீர்க்கதரிசனம் இப்போது முழுக்க முழுக்க மெய்யாகி விட்டது.'— இவ்வாறெல்லாம் எண்ணி மனம் கொதித்த இளங்காரி மீண்டும் தன் பார்வையை அந்தக் குறுக்குச் சுவர் பக்கம் ஓட்டினான்.

என்ன ஆச்சரியம்! இந்நேரம் வரையில் அங்கே பதிந்திருந்த அவ்விரு நிழலுருவங்களும் எங்கோ மாயமாய் மறைந்து, வெறும் வெள்ளைச் சுவர் மட்டுமே இப்போது தெரிந்தது.

## அத்தியாயம் பதினான்கு

# வீசிய வலையில்?

அவசரப் பரபரப்புடன் அங்குமிங்குமாகத் தன் பார்வையை வீசினான் இளங்காரி. அந்தக் கலைக்கூடத்தின் அறையெங்கும் ஆழ்ந்த அமைதி நிலவியது.

'இத்தனை சீக்கிரம் அவ்விரண்டு பேரும் எங்கே போய் விட்டிருப்பார்கள்? இன்னும் ஏதேனும் சதித்திட்டம் போட நிலவறையினுள் சென்றிருப்பார்களா? அல்லது அங்கிருந்து வெளியேறி விட்டிருப்பார்களா? விளக்கு அணைக்கப்படாமல் எரிந்து கொண்டிருக்கிறதே! ஒருகால் பல்லவ மன்னரும், பெரும்பிடுகு முத்தரையரும் இங்கு வரப் போகிறார்கள் என்னும் விவரம் அறிந்து அவர்களைச் சளுக்கியரிடம் காட்டிக் கொடுப்பதற்குத் தயாராக எங்கேயாவது மறைந்திருக்கிறார்களா? அப்படியானால் இந்தப் பயங்கரச் சதிகாரர்களிடம் வந்து சிக்கிக் கொள்ளுமுன் அவர்களை நான் சந்தித்து விஷயத்தைச் சொல்லி எச்சரித்தாக வேண்டுமே! அவ்விருவரையும் இப்போது எங்கே போய்த் தேடிப் பிடிப்பது? நான் ஒரு வழியில் போக, அவர்கள் வேறு வழியில் இங்கு வந்து விட்டால் என்ன செய்வது?'

குழம்பிக் கலங்கிய இளங்காரி, நிற்கவும் முடியாமல் அவ்விடத்தை விட்டுப் போகவும் கால் வராமல் தவித்தான்.

சட்டென்று ஓர் எண்ணம். 'பழையாறைச் சோழருடையவும் பரவாதிமல்லருடையவும் பேச்சில் அடிபட்ட அந்த நிலவறை எங்கே இருக்கிறது? அதில் நிஜமாகவே போர்க் கருவிகள் சேமித்து வைக்கப் பெற்றிருக்குமா? கண்ணால் பார்க்காமல் செவி வழியாகக் கேட்ட அந்த விவரத்தைப் பல்லவ மன்னரிடமோ, சந்திரலேகைச் சித்ரசரிடமோ எப்படிச் சொல்வது? சொன்னாலும் அதை அவர்கள் உண்மை என்று நம்ப வேண்டுமே!'

தலையை அப்படியும் இப்படியுமாக ஆட்டிக் குலுக்கி உதட்டை மடித்துக் கடித்துக் கொண்ட அவன் வெடுக்கென நிமிர்ந்தான்.

'என்ன ஆனாலும் ஆகட்டும். அந்த நிலவறை எங்கே இருக்கிறது, அதில் நிஜமாகவே படைக்கலன்கள் சேமித்து வைக்கப் பெற்றிருக்கின்றனவா என்பதைத் தெரிந்து கொண்டுதான் இங்கிருந்து புறப்பட வேண்டும்.'

அவன் சுற்றுமுற்றும் சுழன்று பார்த்தான். படபடவெனத் துடிக்கும் தன் நெஞ்சை ஆசுவாசப்படுத்திச் சமநிலையில் வைத்துக் கொண்டு, அந்தக் கலைக்கூடத்தின் சாளரத்து வழியே மார்பை ஊன்றித் தவ்வித் தவழ்ந்து ஏறி ஓசையின்றி உள்ளே குதித்தான்.

குதித்த வாக்கில் அப்படியே ஒரு கணம் உட்கார்ந்திருந்த இளங்காரி மெல்ல எழுந்து கண்களை நிமிண்டி விட்டுக்கொண்டு அங்குமிங்குமாக விழித்து நோக்கினான்.

குப்பைக் கூளங்கள் நிறைந்து பார்க்கவே அருவருப்பாக இருந்த அவ்வறையின் மேலண்டை மூலையில் விளக்கேந்திக் கொண்டு நின்ற செப்புச் சிலையைத் தவிர வேறு ஒன்றும் அங்கு இருப்பதாகத் தெரியவில்லை.

அந்தச் செப்புச் சிலை ஏந்தியிருந்த அகல் விளக்கில் நெய் குறைந்து ஒளி மங்கவிடவே, அதன் திரியைத் தூண்டிவிட அருகில் சென்ற இளங்காரி திடுக்குற்றுப் பின்னால் நகர்ந்தான். காரணம், சற்று முன் பழையாறைச் சோழருடைய நிழல் பதிவாகியிருந்த அதே குறுக்குச் சுவரில் — அதே இடத்தில், அதே அளவினதாக — அவனுடைய நிழல் நீண்டு படிந்திருப்பது தெரிந்தது.

'அப்படியானால் பழையாறைச் சோழரும், பரவாதிமல்லரும் இந்த இடத்தில் நின்றுதான் பேசிக் கொண்டிருந்தனரா?'

> சாந்தமாக, மௌனமாக, ஒழுக்கத்துடன் பணி புரிவீர்களாக! பத்திரிகைப் பகட்டுக்காகவும், பெயரெடுப்பதற்காகவும் பணி செய்யாதீர்கள்! இந்த உபதேசத்தை ஒருபோதும் மறவாதீர்கள்!
>
> —ஸ்வாமி விவேகானந்தர்

குறுக்குச் சுவரில் தெரிந்த தன் நிழலையும், அதன் பக்கவாட்டில் பதிவாகியிருந்த சிலையின் நிழலையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்த அவன் அந்த நிழல்களை நோக்கி நடந்தான். இப்போது அவனுடைய நிழல் குறுக்குச் சுவரை விட்டுக் கீழே இறங்கிப் பின்புறமாக நீண்டு விடவே, சிலையின் நிழல் மட்டும் அங்கு தனியாக நின்றது.

அந்த நிழலையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்த இளங்காரி தன் வலக் கையை அந்நிழல் படிந்த சுவர்ப் பகுதிக்கு நேரே நீட்டினான்.

என்ன விந்தை! அவனுடைய கை, சுவரை ஸ்பரிசிக்காமல் சிலையின் நிழலைப் 'பொத்து'க் கொண்டு உள்ளே செல்வது போல் தங்கு தடையின்றி நுழைந்தது! வெடுக்கென்று கையை வெளியே இழுத்துக் கொண்டு அந்தக் கரிய நிழலைக் கூர்ந்து நோக்கினான்.

சந்தேகமில்லை; அது ஒரு நுழை வாயில்தான். விளக்கேந்தி நிற்கும் சிலையின் நிழல் வடிவமாகவே அந்த நுழை வாயிலும் அமைந்திருந்தது. விளக்கு எரிந்தாலும் எரியா விட்டாலும் அங்கே ஒரு நுழைவாயில் இருக்கிறதென்பதை யாரும் எளிதில் கண்டு பிடித்துவிட முடியாத வகையில் அத்தனை சாமர்த்தியமாக அது அமைக்கப் பெற்றிருந்தது.

வியப்பாலும் திகைப்பாலும் வெலவெலத்து நின்ற அவன், அந்தச் சிலை வடிவ நுழை வாயிலினுள் மெள்ள எட்டிப் பார்த்தான். கீழ் நோக்கி இறங்கிச் செல்லப் படிகள் இருப்பது தென்பட்டன. நெஞ்சில் துணிவை நிறைத்துக் கொண்டு வெகு நிதானமாகப் படிகளில் இறங்கி நடக்கலானான்.

ஏழெட்டுப் படிகளைக் கடந்தபின் தயங்கி நின்ற இளங்காரி, தன் தலைக்கு மேல் ஏதோ படீரென்ற சத்தம் கேட்கவே பதறித் துடித்தவனாய் அண்ணாந்து நோக்கினான்.

எங்கும் ஒரே காரிருள்! அவன் இறங்கி வந்த நுழைவாயிலை யாரோ கதவுப் பலகையால் இறுகச் சாத்தித் தாழிடும் ஒலி கேட்டது!

**பு**லர்ந்தும் புலராக் கன்னிக் காலை வேளையின் சன்னமான ஒளி ரேகைகள் சாம்பல் வண்ணமாகப் படர்ந்து உலகைத் தழுவத் தொடங்கின சமயம், பரவாதிமல்லரின் இல்லத்தை அடைந்த பரமேசுவரவர்மன், அதன் சுற்றுப்புறச் சூழல் பாழ்பட்டுக் கிடப்பதையும், வாயிற் கதவு தாழிடப்பட்டிருப்பதையும் கண்டு திகைத்து நின்றான்.

'ஏன் இந்த இல்லம் சாத்திக் கிடக்கிறது? பரவாதிமல்லர் எங்கே போயிருப்பார்? சளுக்கியர்களின் கெடுபிடிகளுக்கு அஞ்சி வேறெங்கேனும் இடம் மாறிப் போய் விட்டிருப்பாரா? அப்படிக் கோழைபோல் அஞ்சி ஓடக் கூடிய மனிதரல்லவே அவர்! பல்லவபுரத்துக்கு வில்வேலியால் அழைக்கப்பட்டுச் சென்ற நான் அங்கிருந்து உடனடியாகத் திரும்பி வராததால், எனக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்திருக்குமோ என்று எண்ணி அந்த விவரத்தை அறிய எங்காவது புறப்பட்டுச் சென்றிருப்பாரா? அல்லது சளுக்கிய ஒற்றர்களுக்குப் போக்குக் காட்டுவதற்காகத் தம் இல்லத்தை இப்படிப் பாழடையப் போட்டுவிட்டு இங்கேயே இருக்கிறாரா?'

மனம் கலங்கி நின்ற அவன் தன் அணைப்பில் பிரக்ஞையின்றிச் சாய்ந்திருந்த உத்தமசீலியைப் பூமாலைபோல் ஏந்தித் தூக்கியவாறு வலப் பக்கமாகச் சுற்றிக் கொண்டு போய்ப் பின்புற வாயிலொன்றின் அருகில் நின்று அதன் கதவுத் தாழை உற்று நோக்கினான்.

அந்த இல்லத்தில் அவன் தலை மறைவாகத் தங்கி யிருந்த போது அவனுக்காகவே அச்சிறிய வாயிலை அமைத்துக் கொடுத்திருந்தார் சேதியக் கவிஞர். தினமும் காலை மாலை வேளைகளில் சிற்றாற்றங்கரைக்குச் சென்று நீராடி வர அவ்வாயிலையே அவன் பயன்படுத்தினான். எனவேதான் இப்போதும் குறிப்பாக அந்த வாயிலண்டை போய் அதன் கதவு திறந்திருக்கிறதா என்று பார்த்தான். அது தாழிடாமல் வெறுமனே சாத்தப்பட்டிருந்தது.

'பரவாதிமல்லர் இங்குதான் இருக்கிறார் என்று தோன்றுகிறது! ஆனால் அவர் உள்ளே இருப்பதாகத் தெரியவில்லையே! எங்கேனும் வெளியே சென்றிருப்பாரோ? அவர் இல்லாத சமயத்தில் அவருடைய இல்லத்தினுள் செல்லலாமா?'

தயங்கி நின்ற அவன் தனது கை ஏந்தலில் மூர்ச்சித்துக் கிடந்த உத்தமசீலியைத் திகிலுடன் கூர்ந்து நோக்கினான். பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாய் அந்தச் சிறிய கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான் பரமேசுவரவர்மன். (தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# டெட் கொண்டு சலவை செய்த ஆடைகளிலுள்ள நம்பிக்கை




இதோ இந்த இணைபிரியாத விளையாட்டுத் தோழர்களின் கம்பீரத் தோற்றத்திற்கும், நன்னம்பிக்கைக்கும் காரணம் அவர்கள் அணிந்திருக்கும் ஆடைகள் பூப்போன்ற புதுமையுடன் பளிச்சென்று டெட் கொண்டு சலவை செய்யப்பட்டதால்தான்.

டெட் ஒரு செயற்கை சலவைப் பொருள், கண்ணுக்குப் பளிச்சிடும் பொருள் கலந்துள்ள டெட் ஒரு பூர்ண சலவைப் படைப்பாகும். கடின மற்றும் மென்மை நீரிலும் டெட் ஏராளமாக நுரைக்கிறது. பலவிதமான ஆடைகளையும்-பருத்தி, சில்க், ரேயான், கம்பளி வெள்ளை அல்லது பல வர்ணங்களிலுள்ள ஆடைகளையும் எவ்வித அபாயமுமின்றி திறமையுடன் டெட் சலவை செய்கிறது.

**டெட்டின் சலவை உங்களுக்குப் பெருமை.**

**டெட்டினால் சலவை செய்தால் அதிக வெண்மை கிடைக்கும்**

**ஸ்வஸ்திக்** ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்-1.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon